திரு கி. வா. ஜகந்நாதன்
அவர்களுடன் பணிபுரியும்
பேறுபெற்ற நாங்கள் அதனால்
மகிழ்ச்சியும் பெருமிதமும்
கொள்கிறோம். அவர் பல்லாண்டு
இனிது வாழ வேண்டுகிறோம்.

கலைமகள் காரியாலயத்தினர்





# வாழும் தமிழ்

திரு கி. வா. ஜ. மணிவிழா மலர்

ஜூலை, 1966

*வெளியிட்டோர்:*

***திரு கி.வா.ஜ. மணிவிழாக் குழு***

**2/10, பிரசன்ன விநாயகர் கோவில் தெரு,**

**மயிலாப்பூர், சென்னை-4.**

# திரு கி. வா. ஜ. மணிவிழாக் குழு

| | |
|---|---|
| தலைவர்: | என். மகாலிங்கம், எம். எல். ஏ. |
| துணைத் தலைவர்கள்: | ஏ. வி. மெய்யப்ப செட்டியார்<br>வி. எஸ். தியாகராஜ முதலியார்<br>திருமுருக கிருபானந்த வாரியார் |
| பொருளாளர்கள்: | கே. பாலசுப்பிரமணிய ஐயர், எம். எல் சி.<br>கண. முத்தையா |
| செயலாளர்கள்: | மாயாவி<br>அகிலன் |
| மலர்க் குழு: | அழ. வள்ளியப்பா<br>ந. சஞ்சீவி<br>தம்பி ஸ்ரீனிவாசன் |

## செயற்குழு உறுப்பினர்கள்

**சென்னை**

நா. ராமரத்னம்
சௌந்தரா கைலாசம்
வா. தி. மாசிலாமணி முதலியார்
டாக்டர் மு. வரதராசனர்
மோ. ஸ்ரீ. செல்லம்
அழ. வள்ளியப்பா
மீ. ப. சோமசுந்தரம் [சோமு]
ந. சஞ்சீவி
சோ. சிவபாதசுந்தரம்
மு. க. தங்கவேலன்
தமிழ்வாணன்
தம்பி ஸ்ரீனிவாசன்
காஞ்சி அமிழ்தன்
ஜி. எல். அனந்தநாராயணன்

**செங்கற்பட்டு**

டாக்டர் ஸி. எஸ். வி. ராஜப்பா, காஞ்சிபுரம்

**வட ஆர்க்காடு**

கோ. வரதராஜுலு
கா. மு. சுந்தர உடையார், ஆர்க்காடு

**தென் ஆர்க்காடு**

காப்டன் (டாக்டர்) வி. எஸ். மணி, விழுப்புரம்

**சேலம்**

பி. கஸ்தூரி பிள்ளை, சேலம்
டி. எம். காளியண்ணன் எம். எல். ஏ., திருச்செங்கோடு
அ. சாம்பசிவ ரெட்டியார், எம். எல். சி., ஆத்தூர்

**கோயம்புத்தூர்**

ஜி. ஆர். தாமோதரன், கலைக்கதிர்
மக. கே. கோதண்டராமன், எம். எல். சி., கள்ளிப்பட்டி
ஏ. சேஷன், ஈரோடு

**திருச்சிராப்பள்ளி**

அ. வே. ர. கிருஷ்ணசாமி ரெட்டியார்
லா. ஆ. பரமன் செட்டியார்

**தஞ்சாவூர்**

மு. கோ. இராமன், திருக்காட்டுப்பள்ளி
என். ராமகிருஷ்ண, மாயவரம்

**இராமநாதபுரம்**

சா. கணேசன், எம். எல். ஏ., காரைக்குடி

**மதுரை**

டாக்டர் என். சூர்யநாராயணன்
டி. டி. திருமலை

**திருநெல்வேலி**

அ. சீனிவாசராகவன், தூத்துக்குடி
எஸ். அருணகிரி, திருநெல்வேலி

**பெங்களூர்**

எஸ். என். சிவராமகிருஷ்ணன்
மத்தூர் கிருஷ்ணமூர்த்தி

**பம்பாய்**

ஆர். ஜகந்நாதன், கோரேகான் தமிழ்ச் சங்கம்
ஆதி லட்சுமணன், பம்பாய்த் தமிழ்ச் சங்கம்
எஸ். டி. ஸ்ரீனிவாசன், மானேஜிங் டைரெக்டர், எல். ஐ. ஸி., பம்பாய்

**ஹைதராபாத்**

ஆர். லட்சுமணன், தலைவர், தென்னிந்தியக் கலைச் சங்கம்

**கல்கத்தா**

ப. ந. தியாகராஜன்

**டில்லி**

ஏ. வி. வேங்கடசுப்பன், தில்லித் தமிழ்ச் சங்கம், புது டில்லி

**இலங்கை**

செ. தனபாலசிங்கன், கொழும்பு
ரா. மு. நாகலிங்கம், கண்டி
சு. ராஜேந்திர குருக்கள், நீர்வேலி, யாழ்ப்பாணம்
க. நடராஜன், மட்டக்களப்பு

# வணக்கம்

**திரு கி. வா. ஜகந்நாதன்** அவர்களின் வாழ்வு, தமிழின் வாழ்வு. எனவே, இவருடைய மணிவிழா மலர் 'வாழும் தமிழ்' என்ற தலைப்பில் வெளிவருகிறது. கி. வா. ஜ. அவர்களின் தமிழ்ப் பெரும் பணி குமரி முதல் இமயம் வரையிலும், கடல் கடந்த இலங்கை பர்மா முதலிய நாடுகளிலும், தமிழ் கூறும் நல்லுலகமெங்கும் பரவியிருக்கிறது.

தம் பத்தாவது வயதிலேயே கவி பாடும் ஆற்றலும், கட்டுரை எழுதும் திறமையும் பெற்ற இவர்கள், இந்த ஐம்பது ஆண்டுகளாகத் தமிழுக்கும் தமிழருக்கும், தம் கட்டுரைகளால், கதைகளால், கவிதைகளால், இலக்கியச் சொற்பொழிவுகளால், சமயப் பணிகளால் பெருந்தொண்டு ஆற்றி வருகிறார்கள்.

டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்களின் தலைமாணுக்கராக இருந்து தமிழ் பயின்று, அவர்களின் அருந் தமிழ்ப் பணிக்கும் துணைநின்று, 'கலைமகள்' பத்திரிகையால் இலக்கியத் தொண்டாற்றி, நூற்றுக்கும் மேற்பட்ட நூல்களை எழுதி வெளியிட்டு, ஆயிரக்கணக்கான கூட்டங்களில் சொற்பெருக்காற்றித் தமிழ்ப் பணிக்கும் சமயப் பணிக்குமே தம்மை அர்ப்பித்துக் கொண்டிருக்கிறார்கள் திரு கி. வா. ஜ. அவர்கள். தமிழகமெங்கும், தமிழர்கள் மிகுதியாக எங்கெல்லாம் வாழ்கிறார்களோ அங்கெல்லாம் சுற்றுப்பிரயாணம் செய்து, தமிழால் நமது பண்பாடும் கலாசாரமும் அறநெறியும் வளர இவர்கள் அருந்தொண்டு புரிந்திருக்கிறார்கள். தம் சிந்தனை, சொல், செயல் இவற்றையெல்லாம் தமிழுக்காகத் தந்து உழைத்து வருகிறார்கள்.

திரு கி. வா. ஜ. அவர்கள் இளம் எழுத்தாளர்களுக்கு ஊக்கமளித்து, அவர்களின் படைப்புக்களை உலகறியச் செய்வதிலே மகிழ்ச்சி பெறுபவர்கள். இவரால் எண்ணற்ற எழுத்தாளர்கள் இன்று நாட்டிலே தோன்றி நற்றமிழ்த் தொண்டாற்றி வருகிறார்கள். இன்றைய எழுத்துலகில் சுடர்விடும் மணிகளாகத் திகழ்பவரில் பலர் இவருடைய மாணுக்கர்கள்.

இவர்களுக்கு 1966-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 9-ஆம் தேதியன்று அறுபதாம் ஆண்டு நிறைவுபெற்றது. இந்த மணிவிழாவை மிகச் சிறந்த விழாவாகச் சென்னையில் கொண்டாடுவதற்காகத் தமிழ் நாட்டிலும் வட நாட்டிலும் வாழும் தமிழன்பர்களைக் கொண்ட விழாக் குழு ஒன்று அமைக்கப்பெற்றது.

திரு கி. வா. ஜ. அவர்களிடம் பெரும் ஈடுபாடு கொண்டவரும், தமிழகப் பெருந் தொழிலதிபர்களுள் ஒருவராகத் திகழ்பவரும், சிறந்த இலக்கிய ரசிகருமாகிய திரு நா. மகாலிங்கம் எம்.எல்.ஏ. அவர்கள், இவ் விழாக் குழுவுக்குத் தலைமை ஏற்க வேண்டுமெனக் குழு விழைந்தது. அவர்கள் மனமுவந்து, தலைமைப் பொறுப்பை ஏற்றுப் பல வகையிலும் விழா வெற்றி பெற உதவியது குறிப்பிடத்தக்கது.

இந்த மலர் மணம் பெற, திரு கி. வா. ஜ. அவர்களின் இலக்கியப் பணியைப் பலவேறு கோணங்களிலிருந்து ஆராய்ச்சிக் கண்கொண்டு பார்த்துக் கட்டுரைகளும் கவிதைகளும் வழங்கியுள்ளனர் அறிஞர்களும் கவிஞர்களும்.

பொற்கிழி வழங்குவதற்கு நிதி உதவியும், மலருக்கு விளம்பரங்கள் தந்தும் பேராதரவளித்த அன்பர்கள் பலர். இவர்கள் அனைவருக்கும் எமது நன்றி.

இந்த விழாவைத் தம் சொந்த விழாவாகக் கருதி, மிகுந்த உற்சாகத்தோடும் ஊக்கத்தோடும் ஈடுபட்டதுடன், இந்த மலரைத் தம் சொந்தப் பொறுப்பில் சிறந்த முறையில் அச்சிட்டு அளித்த 'கலைமகள்' அதிபர் திரு நா. ராமரத்னம் அவர்களுக்கும், 'கலைமகள்' ஆசிரியர் குழுவினருக்கும், எம். எல். ஜே. அச்சகத்தினருக்கும், ஓவியர்கள் திரு சாமி, திரு சங்கர், புகைப்பட நிபுணர் திரு என். ராமகிருஷ்ண முதலியோருக்கும் இந்த விழாக் குழு, பெரிதும் கடமைப்பட்டிருக்கிறது.

—திரு கி. வா. ஜ. மணிவிழாக் குழுவினர்

# மணிவிழா நிகழ்ச்சிகள்

## 10-7-1966 ஞாயிறு

## கவி அரங்கம்

### இடம்: *பாலர் அரங்கம், சென்னை-2*

*காலை விழா* முற்பகல் 9-30 மணி

இறை வணக்கம்

வரவேற்பு

தலைவர்: தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் அவர்கள்

| கவிஞர்கள் | கவிதைப் பொருள் |
|---|---|
| திரு கொத்தமங்கலம் சுப்பு | 'தலைமாணாக்கர்' |
| ,, எஸ். டி. சுந்தரம் எம். எல். சி. | 'கவிஞர்' |
| ,, மு. க. தங்கவேலன் (கோமுகி வேலன்) | 'சொற்பொழிவாளர்' |
| ,, தமிழழகன் | 'கட்டுரை ஆசிரியர்' |
| ,, புத்தனேரி சுப்பிரமணியம் | 'கதாசிரியர்' |
| ,, என். எஸ். சிதம்பரம் | 'பத்திரிகாசிரியர்' |
| ,, 'செல்வன்' | 'இறைத் தமிழ்ச் செல்வர்' |

நன்றியுரை

*மாலை விழா* பிற்பகல் 6-15 மணி

இறை வணக்கம்

வரவேற்பு: *திரு நா. மகாலிங்கம் அவர்கள், எம். எல். ஏ., விழாக் குழுத் தலைவர்.*

துவக்க உரை: *திரு தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் அவர்கள், துணைவேந்தர், மதுரைப் பல்கலைக் கழகம்.*

தலைமை உரை: *திரு எம். பக்தவத்சலம் அவர்கள், தமிழக முதலமைச்சர்.*

சிறப்பு மலர் வெளியீடு: *திரு ஒ. வி. அளகேசன் அவர்கள், மத்திய ராஜாங்க அமைச்சர்*

பொற்கிழி வழங்குதல்: *திரு நா. மகாலிங்கம் அவர்கள், எம். எல். ஏ.*

பாராட்டுப் பத்திரம் வழங்குதல்:

*டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள் நூல் நிலையம்*

*ஈழநாட்டு மட்டக்களப்புத் தமிழ் மக்கள்*

பாராட்டுரைகள்:

*டாக்டர் மு. வரதராசனார் அவர்கள், தமிழ்த்துறைத் தலைவர், சென்னைப் பல்கலைக் கழகம்.*

*திருமதி சௌந்தரா கைலாசம் அவர்கள்.*

*தவத்திரு சோமசுந்தரத் தம்பிரான் அவர்கள், தருமபுர ஆதீனத்தின் சார்பில்*

மணிவிழா நாயகர் உரை: *திரு கி. வா. ஜகந்நாதன் அவர்கள்*

நன்றியுரை

நாட்டு வாழ்த்து

# இந்த மலரில்

# ஸ்ரீமுகங்களும் வாழ்த்துக்களும்

## ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள் ஸ்ரீமுகம்

27-5-1966

தெய்வங்களின் பெருமைகளையெல்லாம் பிரசங்கங்கள் மூலம் ஜனங்களிடம் எடுத்துச் சொல்வது இக்காலத்தில் தெய்வப்பணிகளுள் சிறந்ததொன்று என்று கூற லாம். அத்தகைய சிறந்த தெய்வப் பணியைப் பல்லாண்டுகளாகத் தொடர்ந்து செய்துவரும் வாகீச கலாநிதி ஸ்ரீ கி. வா. ஜகந்நாதன் அண்மையில் அறுபதாண்டு நிறைவை அடைவதையும், இதற்கான மணிவிழாவைத் தமிழன்பர்கள் சென்னையில் நடத்துவதையும் அறிந்து மகிழ்ச்சியடைகிறோம். தமிழ் இலக்கியத்தைத் தெய்வ மணம் கமழச் செய்வதற்காகப் பல தெய்வ சம்பந்தமான கிரந்தங்களுக்கு விரிவுரை செய்தும் விளக்க உரை தந்தும் உரைநடையில் பல நூல்களை இவர் இயற்றியிருப்பது பெரிதும் பாராட்டத்தக்கது.

தமது சொல் வன்மையினையும் எழுத்து வன்மையினையும் மக்களிடத்தில் தெய்வ பக்தியை வளர்ப்பதற்காகப் பயன்படுத்தி வரும் கி. வா. ஜகந்நாதன் இன்னும் பல் லாண்டுகள் தெய்வப் பணியைத் தொடர்ந்து செய்வதற்கும், மேலும் பல மேன்மை களை அடைவதற்கும் ஸ்ரீத்ரிபுரஸுந்தரீஸமேத ஸ்ரீ சந்த்ரமௌளீச்வரர் அநுக்கிரகம் செய்வாராக.

நாராயணஸ்ம்ருதி:

## ஸ்ரீ சிருங்கேரி ஜகத்குரு ஸ்ரீ சங்கராசாரிய ஸ்வாமிகளின் ஸ்ரீமுகம்

20-6-1966

மகா சந்நிதானம், கீர்த்தி வாய்ந்த ஸ்ரீ டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர் களின் சீடரான ஸ்ரீ கி. வா. ஜகந்நாதன் அவர்களின் அறுபதாம் ஆண்டுவிழாவைச் சிறப்பாகக் கொண்டாட உத்தேசித்திருப்பது மிகவும் பொருத்தமானது என்று கருதுகிறார்கள். மகா சந்நிதானம், ஸ்ரீ கி. வா. ஜகந்நாதன் அவர்கள் இன்னும் பல் லாண்டுகள் சுக வாழ்வு வாழவேண்டுமென ஆசீர்வதித்து அருளிய மந்த்ராக்ஷதை ஸ்ரீ சாரதா சந்திரமௌளீச்வரப் பிரசாதம் இத்துடன் அனுப்பியிருக்கிறது.

## தருமையாதீனம்
## ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் ஆசி

தருமபுரம்,
21-6-1966

''ஞாலம் நின்புகழே மிகவேண்டும் தென்
ஆலவாயில் உறையும்எம் ஆதியே.''

தெய்வத் தொடர்புடைய திருமொழி தமிழ். எல்லாம் வல்ல முழுமுதற் பொரு ளாய் இலங்கும் சிவபரம் பொருளே வடமொழியைப் பாணினிக்கும் தமிழ் மொழி யைக் குறு முனிக்கும் வகுத்தளித்தான் என்று கூறுவது ஆன்றோர் மரபு. ஆதிசிவன் அளித்த அருந்தமிழை அகத்திய முனிவன் முத்தமிழிலக்கணமாக முறைப்படுத்தி னான். தென் பாண்டி வளநாட்டில் சங்கம் அமைத்துத் தமிழை வளர்த்தனர் தண் பாண்டி மன்னர். திரிபுரமெரித்த விரிசடைக் கடவுளும் குன்றமெறிந்த குமரவேலும் தலைச்சங்கமிருந்து தமிழாராய்ந்தனர்.

ஆலவாய்ச் செந்தமிழ்ச் சொக்கன் அகப்பொருள் இலக்கணம் எழுதியளித்த வர லாற்றை இறையனர் களவியலுரை எடுத்துரைக்கின்றது. இவ்வண்ணம் சிவபெருமா னைச் செந்தமிழ்ப் பெருமானாகப் போற்றி உரைக்கும் வரலாறுகள் பல உள்ளன.

''தமரநீர்ப் புவனம் முழுதொருங் கீன்றாள் தடாதகா தேவி யென்றொருபேர்
தரிக்கவந்ததுவுந் தனிமுத லொருநீ சவுந்தர மாறனா னதுவும்
குமரவேள் வழுதி உக்கிர குமரன் எனப்பேர் கொண்டறந் தண்டமிழ்
மதுரம் கூட்டுண எழுந்த வேட்கையால் எனிலிக் கொழிதமிழ்ப் பெருமையார்
அறிவார்''

என்பார் குமரகுருபர முனிவர்.

செந்தமிழ் மொழியோடு கலந்து வீசும் இத் தெய்வ மணத்தை நுகர்ந்தவர்கள் 'தெய்வத் தமிழ்' என்று நம் தமிழ்மொழியை வழங்கத் தலைப்பட்டனர்.

சங்க இலக்கியங்கள் பிற்கால இலக்கியங்கள் பலவற்றிலும் தெய்வச் சுடரொளி பரவி ஒளி வீசுவதை நாம் காண்கிறோம். பத்துப் பாட்டில் ஒன்றாகிய திருமுருகாற்றுப்படை பதினோராந் திருமுறையில் ஒரு நூலாக விளங்குகின்றது. மேலும் சங்கப் புலவர் பாடிய நூல்களும் அத் திருமுறையில் விளங்குகின்றன.

தமிழிலக்கியங்கள் அறம் பொருள் இன்பம் வீடு என்ற நான்கு பேறுகளை நல்கும் நூல்கள். அவற்றுள் திருமுறை இலக்கியங்கள் வீட்டு நெறியைச் சிறப்பாகவும் ஏனையவற்றைப் பொதுவாகவும் கொண்டு இம்மை மறுமை இரண்டிற்குமுரிய நூல்களாக இலங்குகின்றன.

> தேவர் குறளும் திருநான் மறைமுடிவும்
> மூவர் தமிழும் முனிமொழியும்—கோவை
> திருவாசகமும் திருமூலர் சொல்லும்
> ஒருவா சகம்என் றுணர்.

என்பது பழைய பாடல்.

இவ்வாறு அறநெறி அருள்நெறி பரப்பும் தெய்வத் தமிழலக்கிய இலக்கணத் துறையில் மூழ்கித் திளைத்த நம் அன்பர் கி. வா. ஜகந்நாதன் அவர்களை நாடு நன்கறியும். எழுத்தால், இனிய பேச்சால், எளிய கவிதை நடையால் எல்லோரையும் கவர்ந்து வருபவர் கி.வா.ஜ. செந்தமிழ்ச் சொக்கன் திருவருள் இவரை 1954-ஆம் ஆண்டு செந்தமிழ்ச் செல்வராக்கிப் பாராட்டியது. தமிழிலக்கியத் துறையிலும், சமய இலக்கியத் துறையிலும் தலைசிறந்த எழுத்தாளராய், பேச்சாளராய், கவிஞராய், கதாசிரியராய் விளங்கும் கி. வா. ஜகந்நாதன் அவர்களது மணிவிழா, தமிழ் வழங்கும் நிலமெல்லாம், தமிழர் வாழும் இடமெல்லாம் கொண்டாடப்பெறுதல் பாராட்டுக்குரியது. செந்தமிழ்ச் செல்வரின் மணிவிழா மலர் இலக்கியப் பூங்காவாக விளங்கும் என்பது உறுதி.

செந்தமிழ்ச் சொக்கன் திருவருளால் செந்தமிழ்ச் செல்வர் கி. வா. ஜகந்நாதன் எல்லா நலன்களும் பெற்று இனிது வாழ்க என வாழ்த்துகிறோம்.

## ஸ்ரீமத் ஞானனந்தகிரி ஸ்வாமிகளவர்களின் ஆசி

தபோவனம்,
*29-3-1966*

ஸ்ரீஞானதண்டாயுதபாணி துணை நிற்க.

அன்புக்கிசைந்த நண்பரும் கலையொளித் தலைவரும் கற்றவர் போற்றும் புகழ் வடிவம் கொண்டவரும் தெய்வத் தபோதனர்களிடம் அன்பு கொண்டவரும் தமிழகம் எங்கும் மக்கள் புகழத்தக்கவிதம் கந்தன் திருவருளைக் காந்தமாக இழுப்பவரும் கலையுலகின் தலைவரும் அன்புருவமானவரும் இறையருளால் ''தோன்றிற் புகழொடு தோன்றுக'' எனும் மொழிக்கிசையத் தந்தை தாய் தவப்பயனாய் மக்களிடையே சிறப்புற்ற மாணிக்கமாகவே விளங்குபவரும் ஆகிய கி. வா. ஜகந்நாதையருக்கு நிகழும் விசுவாவஸு வருஷம் பங்குனி மாதம் 27-ஆம் நாள் ஸ்தூல உடம்பின் அறுபதாண்டு நிறைவு நாள் என்ற மங்கள நிகழ்ச்சிப் பத்திரிகை கண்டு மகிழ்ச்சி.

நேரில் கண்டு களித்து ஆசி அளிப்பதுபோல இந்தக் கடிதம் மூலம் தெரிவித்துக் கொள்வது: உடல் திடமும் மீண்டும் நீண்ட ஆயுளும் பெற்றுக் கலையரசியின் சிறந்த ஒளியை மக்களிடம் பரவச்செய்து ஸ்ரீஸத்குருநாதன் பேரருள் பெற்று மகிழ்ச்சியுற்றுப் பேரன்பு கொண்டு உய்யும்படி ஆசியும் வாழ்த்தும் பலபலவாக அளித்துள்ளேன். ஸ்ரீ ஸ்வாமிநாதகுரு அருள் பெற்ற திரு கி. வா. ஜகந்நாதன் வாழி வாழி! வையகம் வாழி வாழி!

ஸ்ரீஞானனந்தகிரி

RASHTRAPATI BHAVAN,
NEW DELHI-4.
June 14, 1966.

I wish Shri Jagannathan a bright and useful future.

S. RADHAKRISHNAN

சென்னை
27-6-1966

கி. வா. ஜகந்நாதன் அவர்களின் ஷஷ்டி பூர்த்தி விழாச் சிறப்பு மலருக்கு நான் என்ன எழுத முடியும்? தமிழில் நல்ல படிப்பு அடையாத ஒருவன் நான். ஆன படியால் கி. வா. ஜகந்நாதன் அவர்களிடம் எனக்குள்ள அன்பு ஒன்றுதான் பேசக் கூடிய பொருள். ஆனால் அனைவரும் உணர்ந்த உண்மை அன்பை எடுத்து விளக்க முடியாது. இன்னும் பல்லாண்டுகள் கி.வா.ஜ. அவர்கள் தமிழும் தெய்வமும் ஒன்றுகூடிய ஆத்மாவாகத் தமிழ் மக்களிடை விளங்குவார்களாக.

இராஜகோபாலாச்சாரி

## கி. வா. ஜ.

நல்லவர்களையும் பெரியவர்களையும் புகழ்ந்து பேசுவதற்குத் தருணம் வாய்க்குமேயானால் அதை நழுவ விடக் கூடாது. நண்பர் மகாலிங்கம் அவர்கள் கி.வா.ஜ. மணிவிழா மலருக்குச் செய்தி வேண்டும் என்று கேட்டவுடனேயே இதை எழுதத் தொடங்கிவிட்டேன். ஜகந்நாதன் என்று சொன்னால் பலருக்குத் தெரியாமல் இருக்கலாம். ஆனால், கி.வா.ஜ. என்ற மூன்று எழுத்து, தமிழ்நாட்டில் எல்லோருக்கும் தெரியும். இந்த மூன்று எழுத்துக்களின் பின்னே மூன்றாகப் பிரிந்துள்ள இயல் இசை நாடகம் ஆகிய முத்தமிழின் அருமை பெருமைகளையும், அம் முத்தமிழை வாழையடி வாழையாக வளர்த்து வரும் புலவர் பெருமக்களின் சிறப்பினையும், எல்லாவற்றிற்கும் மேலாக அம் முத்தமிழும் காட்டும் 'அடக்கமுடைமை' என்னும் பண்பாட்டினையும் தமிழ் மக்கள் பல்லாண்டுகளாகக் கண்டு போற்றி வந்துள்ளார்கள். ஆகவே, அம் மூன்று எழுத்தினுக்கும் உரிய பெரியாரின் மணிவிழா, தமிழ் நாட்டை அணி செய்யும் விழாவாகும்.

கி.வா.ஜ. அவர்களுக்குச் சைவமும் தமிழும் இரு கண்களாகும். இவ்விரு துறைகளிலும் அவர்கள் ஆற்றிவரும் சொற்பணியும் எழுத்துப் பணியும் தமிழ் மக்கள் அறிந்து சுவைத்து வருபவை. அவருடைய கர்ணாமிர்தமான சமய இலக்கியச் சொற்பொழிவுகளை அநுபவிக்கும் பேறு பெற்ற பல்லாயிரக் கணக்கான தமிழர்களில் நானும் ஒருவன்.

குருவுக்கேற்ற சீடரும், சீடருக்கேற்ற குருவும் அமைவது தாம்பத்தியப் பொருத்தம் போன்றது. இந்தப் பொருத்தத்தை நாம் தமிழ்த் தாத்தா சாமிநாதையர்-கி.வா.ஜ. இவர்களின் குரு-சிஷ்ய உறவில் காண்கிறோம். இத்தகைய குருவைப் பெற்றது சீடருடைய அதிர்ஷ்டமா, அல்லது இத்தகைய சீடரைப் பெற்றது குருவின் அதிர்ஷ்டமா என்று யாரும் தீர்மானிக்க முடியாது.

கி.வா.ஜ.வுக்கு அவருடைய குருதாம் எல்லாம். அவருடைய வாழ்வு அரும்பி மலர்ந்ததற்கு அவருடைய குருவே காரணம். அவருடைய வாழ்வை அது செல்லும் நெறியில் திருப்பி விட்டவரும் அவருடைய குருதாம். அதனால் கி.வா.ஜ.வின் குரு பக்தி அபாரமானது.

இங்கே போற்றற்குரிய ஒரு குரு பரம்பரையைப் பார்க்கிறோம். மகா வித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள், சாமிநாதையரவர்களுக்குக் குருவாக விளங்கி, சாமிநாதையரவர்களுடைய வாழ்க்கையை நெறிப்படுத்தினார்கள். அவ்வாறே, சாமிநாதையரவர்கள் கி.வா.ஜ.வுக்குக் குருவாக விளங்கிக் கி.வா.ஜ.வின் வாழ்க்கையை வழிப்படுத்தினார்கள். இந்தக் குரு பரம்பரையினால் தமிழ்நாடு பெற்றுள்ள

நன்மைகள் பல. ஆகவே, இந்தக் குரு பரம்பரைக்கு வாழ்த்துக் கூறி வணக்கம் செலுத்துவோமாக.

தமிழ் மக்களின் நல்லாசியும் தமிழ்க் கடவுளாகிய முருகனின் திருவருளும் கி.வா.ஜ. அவர்களுக்கு நீண்ட ஆயுளும், நோயற்ற வாழ்வும், இன்னும் பல வல்லமைகளும் அருள்வனவாக!

ஒ. வி. அளகேசன்
*21-6-1966*

5, Safdarjung Road,
New Delhi.
18th June, 1966

Shri Jagannathan has risen to fame not only by his erudition and technical talents in writing, but also on account of the chaste language used by him and his deeply religious and spiritual background. Writers like him have always helped in carrying the torch of our culture from generation to generation. May he be preserved in good health and cheer for many years to come.

C. R. PATTABHI RAMAN

FORT ST. GEORGE,
MADRAS-9.
June 21, 1966

Sri K. V. Jagannathan (Ki. Va. Ja.) is a scholar of rare distinction. He belongs to the generation of Tamil scholars who acquired an encyclopedic sweep of knowledge by deep study and disciplined thinking. His vast erudition sits lightly on him. He is the upholder of the simple yet graceful and luminous style of Dr. U. Swaminatha Iyer under whom he spent years as a student. He can write and speak with remarkable ease, fluency and authority on literature and philosophy. He is particularly brilliant in his interpretation of Tamil devotional literature. Sri Ki. Va. Ja. is a great savant whose writings and speeches have served to bring out the subtlety, the beauty and the mellifluous quality of Tamil. May he live long.

M. BHAKTAVATSALAM.
Chief Minister, Madras State

சென்னை, *30-6-1966*

திரு கி.வா.ஜகந்நாதன் மணிவிழா நடைபெறுவதில் என் மகிழ்ச்சியை வெளியிட விரும்புகிறேன். இலக்கியத்தின் முந்திய போக்கு (Tradition) நன்கு அறிந்தும், புரட்சி அல்லது புது இலக்கியம் எனத் தோன்றும் வடிவங்களை ஆதரிக்கக் கூடியவர் மிகச் சிலரே. ஆனால், விரிந்த மனப்பான்மையுடைய திரு கி.வா.ஜ. அவர்கள், பண்டை இலக்கியத்திலும், புதுமை இலக்கியத்தின் ஒளியுடன் கூடிய வடிவங்களிலும் சமமான நோக்குச் செலுத்தி, பழமை புதுமை இரண்டையுமே போற்றிப் பெருக்கி வந்துள்ளார்கள். அவர்கள் தமிழுக்காகப் புரிந்துவரும் பெரும் தொண்டை நாம் கௌரவிப்பதனால், நம்மையும் தமிழ்நாட்டுப் பண்பையும் சிறப்பிப்பவராகிறோம்.

மா. அனந்தநாராயணன்
உயர் நீதிமன்றப் பிரதம நீதிபதி

சென்னை, 2-7-1966

திரு கி. வா. ஜகந்நாதன் அவர்களுக்கு அறுபதாண்டு நிறைவேறுகிறதென்றும், அதையொட்டி ஓர் சிறப்பு மலர் வெளியிடப் பெறுவதாயும் அறிந்து மகிழ்ச்சி யடைகிறேன். பழைய பாண்டித்தியத்தின் ஆழத்தையும், புதிய நாகரிகத்தின் பிரகாசத்தையும் சேர்த்துத் தம் கட்டுரைகள், கதைகள், சொற்பொழிவுகள் மூலம் திரு ஜகந்நாதன் தமிழ்த் தாய்க்கு அரிய தொண்டு புரிந்து வருகிறார். அவர் இவ்வாறே பல்லாண்டுகள் சேவை செய்ய இறைவன் ஆயுளையும் ஆரோக்கியத்தையும் ஆற்றலையும் அளிப்பாராக.

க. சந்தானம்

சென்னை, 16-6-1966

திரு கி.வா.ஜ. அவர்கள் அறுபது ஆண்டு நிறைவு எய்தியது கேட்டு மிகவும் மகிழ்ச்சியடைகிறேன்.

தமிழ்த் தந்தை திரு உ. வே. சாமிநாதையரவர்களின் பிரதம சீடர்களில் ஒரு வராக இருந்து, அவர் தமிழுக்கு ஆற்றிய பணியைத் தொடர்ந்து செய்து வருபவர் திரு கி.வா.ஜ. அவர்கள் தமிழுக்கும் சமயத்துக்கும் செய்து வரும் தொண்டு போற்றத்தக்கது. மக்களிடையே தமிழின் பெருமையையும், தமிழ் நூல்களில் அடங்கியிருக்கும் உன்னதக் கருத்துக்களையும் பரப்புவதற்காக அவர் வாழ்ந்து வருபவர். தமிழ் நாடெங்கும் அவருடைய சமயச் சொற்பொழிவுகளைக் கேட்டுக் கணக்கற்ற மக்கள் நற்பயன் அடைந்து வருகிறார்கள்.

திரு கி வா.ஜ. அவர்கள் தமிழ்ப் பணியும் சமயப் பணியும் தொடர்ந்து செய்து வர இறைவன் அவருக்கு நீண்ட ஆயுளையும் உடல்நலத்தையும் அருள்வாராக.

பா. ச. கைலாசம்
உயர் நீதிமன்ற நீதிபதி

சென்னை, 16-6-1966

புலவர் போற்றும் புலவராகவும், சமய நெறி பரப்பும் அருட்செல்வராகவும், எழுத்தாளர் ஏற்றம் காண உதவும் இதழாசிரியராகவும் தமிழ் மண்ணில் செந்நெறி ஓம்பிவரும் தமிழறிஞர் திரு கி.வா. ஜகந்நாதன் அவர்தம் மணிவிழாக் கொண்டாடப் பெறும் செய்தி கேட்டுத் தமிழறிந்த உள்ளங்கள் அனைத்தும் களிப்படைகின்றன. தமிழ்ப் பெரும் புலவர் மதிப்பிற்குரிய டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்களிடம் தமிழ் பயிலும் பேறு பெற்றவர் அவர். முருகப் பெருமான் திருவருட் சிறப்பை நாவினிக்கப் பேசும் நல்ல தமிழர். கற்றதுணர விரித்துரைக்கும் அவர்தம் ஆற்றலும், காவியத் தேனைத் தாய்மைப் பொலிவுடன் தமிழ் மக்களுக்கு ஊட்டும் அவரது இயல்பும், சிந்தனை வளத்தை நல்கும் எண்ணற்ற எழுத்தோவியங்களைத் தமிழன் னைக்குக் காணிக்கையாக்கும் அவரது திறனும் போற்றத்தக்கவை. மொழிக்கும் முதல்வனுக்கும் அவர் செய்து வரும் தொண்டு நாடு நன்கு அறிந்த ஒன்று. அவருடைய தூய தமிழ்த் தொண்டு தமிழுலகுக்கு மேலும் கிடைக்க வேண்டும் என்பதே என் விருப்பம். மணிவிழாக் காணும் தமிழறிஞர் நிறைபொருளோடும் நிறைபுகழோடும் நீடு வாழ முருகப் பெருமான் அருள் புரிய வேண்டுகிறேன்.

சௌந்தரா கைலாசம்

# கி.வா.ஜ.வும் கலைமகளும்

நா. ராமரத்னம்

கி. வா. ஜ. அவர்களின் குணச் சிறப்புகளாகிய ஒப்பற்ற தமிழ்ப்புலமை, தமிழ் மொழியிலும் இலக்கியத்திலும் அவருக்குள்ள இணையற்ற மேதை, புது மெருகு கொண்ட எழில்நடை, கேட்போரை வசீகரிக்கும் வாக்குவன்மை, உயர்கருத்துக்களைப் பொழியும் சமயப் பேருரைகள் இவைபற்றிப் பலர் எழுதியிருக்கிறார்கள். 'கலைமகளி'ன் பிரசுர கர்த்தன், பதிப்பாசிரியன் என்ற முறையில், கலைமகளையும் கி.வா.ஜ.வையும் பற்றி நான் எழுத வேண்டுமென்று என்னைக் கேட்டிருக்கிறார்கள்.

ஒருவன் தன்னைப்பற்றியே எழுதிக் கொள்வது மிகவும் சிரமமானது; சங்கடமானதுங்கூட. கி. வா. ஜ.வைப்பற்றி நான் எழுதுவதும் அப்படித்தான். கலைமகளின் உயிராக இருப்பவர் கி. வா. ஜ.; கி. வா. ஜ.வின் உயிராக இருப்பது கலைமகள். கலைமகளையும் கி.வா.ஜ.வையும் வெவ்வேறாக எண்ணிப் பார்க்கவே முடியாது. இது பொது மக்களின் கருத்து மட்டுமல்ல; உண்மை இதுதான். கலைமகள் கி.வா.ஜ.வைத் தோற்றுவித்திருக்கிறது என்றால், கி.வா.ஜ.வும் கலைமகளுக்குத் தனித் திறத்தையும் தனிப் பண்பையும் தந்து உருவாக்கியிருக்கிறார்.

எனக்கும் கி.வா.ஜ.வுக்கும் ஆரம்பத் தொடர்பு 1943-இல் ஏற்பட்டது என்று நினைக்கிறேன். அப்பொழுது என் தந்தையார் உயிருடன் இருந்தார். அவர் கி.வா.ஜ.விடம் மிகுந்த அன்பு கொண்டவர். நான் கலைமகளில் அக்கறை கொள்ளத் தொடங்கி, கி.வா.ஜ.வுடன் பிற்பகல் நேரங்களில் பழகி வந்தேன். கலைமகள் ஆறாயிரம் பிரதிகளோ என்னவோ விற்று வந்த காலம் அது. அவரும் நானும் ஆலோசித்துத் திட்டமிட்டுப் புதிய புதிய அம்சங்களைச் சேர்த்தோம். மெல்ல மெல்லக் கலைமகளின் விற்பனை ஏறியதுடன், மக்கள் அதை விரும்பிப் படிக்கலானார்கள். அவருடன் உரையாடுவதே இன்பமாக இருந்தது.

முக்கியமான ஒரு விஷயத்தை இங்கே குறிப்பிட வேண்டும்: 1943-இல் நான் இளைஞனாக இருந்தபோதே என்னிடம் மதிப்பு வைத்து என் கருத்துக்களை ஏற்றுக்கொள்வதிலும், இணைந்து பணிபுரிவதிலும் கி.வா.ஜ. உற்சாகத்துடனும் அக்கறையுடனும் இருந்தார். அப்படியே இன்றும் இருக்கிறார். இதில் எவ்வகை மாறுதலையும் நான் காணவில்லை. கடந்த பல ஆண்டுகளில், தம் கல்வியறிவுக்கும் தகுதிக்கும், இயல்பாகவும் பொருத்தமாகவும் கிடைக்க வேண்டிய புகழையும் வெற்றியையும் அவர் அமோகமாகப் பெற்றிருக்கிறார். அப்படியிருந்தும், எனக்கும் அவருக்குமுள்ள உறவில் எவ்வகை மாறுதலும் ஏற்படவில்லை. அவருடைய இந்தப் பண்பு, அவருக்கே இயல்பாக அமைந்தது; செயற்கையானது அல்ல.

கலைமகள் பத்திரிகையை நடத்துவதில் எங்கள் இருவருடைய நோக்கமும் ஏறக்குறைய ஒன்றுதான். பத்திரிகையின் கொள்கை, அதில் வரும் விஷயங்கள் முதலியவற்றில் கி.வா.ஜ.வுக்கு முழுச் சுதந்தரம் உண்டு; என்றாலும் அவர் இதைத் தமக்குச் சாதகமாக்கிக்கொண்டு சொந்த நலனுக்கோ செல்வாக்குக்கோ பயன்படுத்தியதில்லை. 1937-ஆம் வருஷம் முதல் அவர் தொடர்ந்து கலைமகளின் ஆசிரியராக இருந்து வருகிறார். காலத்துக்கு ஏற்றபடி, கலைமகளின் அட்டைப்பட அமைப்பிலும், சிறப்புப் பகுதிகளை வெளியிடுவதிலும் சில மாறுதல்கள் ஏற்பட்டபோதிலும், கலைமகளுக்கே உரிய தனி எழிலையும், இலக்கியத் திறத்தையும், கம்பீர நடையையும், பொருள் ஆழத்தையும் தந்தவர் கி.வா.ஜ. எனவே, 'கலைமகள்' பத்திரிகை, கி.வா.ஜ.வின் படைப்பு.

கதைகளும் கட்டுரைகளும் எழுதும் திறமை வாய்ந்த இளைஞர்களுக்கும், முக்கியமாகப் பெண் எழுத்தாளர்களுக்கும் அவர் வாய்ப்புக் கொடுத்து, அவர்களை முன்னணிக்கு வரச் செய்திருக்கிறார்.

கி.வா.ஜ.வின் எழுத்தாற்றல் கலைமகளில் பல வகைகளில் பரிணமித்திருக்கிறது. அவர் வர்ணனைக் காவியம் வரைந்தாலும் சரி, உருக்கமான சிறுகதையைச் சிருஷ்டித்தாலும் சரி, படங்களுக்குக் குறிப்பு எழுதினாலும் சரி - எதிலும் அவருடைய இலக்கியச் சிறப்புள்ள முத்திரை இருக்கும்.

பதிப்பாசிரியனான எனக்கும் ஆசிரியரான அவருக்கும் உள்ள உறவு மிகவும் சுமுகமாக இருந்திருக்கிறது; எங்களுக்குள் கருத்து வேற்றுமையோ மோதலோ என்றுமே ஏற்பட்டதில்லை.

நானும் எங்கள் ஆசிரியர் குழாமும் ஒரே குடும்பமாகப் பழகி வருகிறோம். நாளுக்கு நாள் பரஸ்பரம் வலுப்பட்டு வரும் உறவு இது. இது என்றும் நீடித்திருக்கும். ★

உ

முருகன் துணை

## அமைதியான வாழ்வு

படித்தவன், உடல்வலிமை உள்ளவன், பணமுள்ளவன் என்று புகழும் இன்பமும் அடைபவர்கள் இருக்கிறார்கள். கல்வி, உடல்வலிமை, பொருள் - இந்த மூன்றையும் ஓரளவு பெறவேண்டும் என்ற ஆசை எனக்கும் உண்டு. ஆனால் இவற்றைவிட நான் மிகுதியாக விரும்புவது, நல்லவன் என்று பலரும் சொல்வதைத்தான். அவ்வாறு பிறர் சொல்ல வேண்டுமானால் உண்மையில் நல்லவனாக இருக்க வேண்டும்.

நல்லவனுக்குரிய பண்புகள் பல உண்டு. பொறுமை, நன்றியறிவு, உபகாரசிந்தை, இன்சொல், நட்பு முதலிய பலபண்புகள் ஒருவனை நல்லவனாக்குகின்றன. எல்லாப்பண்புகளினும் சிறந்து நிற்பது அன்பு. அதைவளர்த்தால் மற்றப்பண்புகள் ஒன்றன்பின் ஒன்றாகத் தாமே வந்து அமையும். அன்பை வழிபடுவோருக்கு அன்பே கிடைக்கும். ஆனால் அன்பை வளர்ப்பதற்கு மற்றோர் உணர்ச்சி இன்றியமையாதது. என்றும் மாறாமல் எல்லாவற்றையும் ஆட்டிப்படைக்கும் இறைவன் அருள் ஒன்றே மெய்யானது, சிறந்தது, எல்லாவற்றிற்கும் ஆதாரமானது என்ற உணர்ச்சி இருந்தால், உயிர்க்கூட்டங்கள் அவனுடைய குழந்தைகள் என்ற எண்ணம் தொடர்ந்து வரும். அப்போது உயிர்களிடத்தில் அன்பு உண்டாகும்.

ஆகவே இறைவனிடம் மெய்யன்பு பெறுகிறவன் உயிர்களின் மேல் அன்புவாயும், கோபம், பொறாமை கடுத்தால் தோன்றும்போதெல்லாம் இறைவனை நினைப்பூட்டிக்கொண்டால் நிலைத்து நிற்பது அன்பு ஒன்றுதான் என்ற உணர்வு வரும். இறுதியாக இறைவனிடம் நம்பிக்கையை வளர்த்து மக்களிடம் அன்பையும் வளர்த்து வந்தால் மனிதனுக்கு எப்போதும் இன்பம் உண்டாகும். அவன் மனம் எப்போதும் அமைதியாக இருக்கும். இந்த அமைதியைப் பெறவே பல ஆண்டுகளாக முயன்று வருகிறேன்.

கி. வா. ஜகந்நாதன்



# வாழ்க்கை வரலாறு

—ச. கு. கணபதி ஐயர்

மாபெரும் ஆசிரியர் ஒருவரின் வரலாற்றில் மாணவர் ஒருவர் புதிய யுகத்தைத் தோற்றுவித்தார். அந்தப் பேராசிரியருக்கு, ஒரு குலத்துக்கு ஒரு மைந்தரான ஈன்ற மகனாரை விட ஏன்ற அந்த மகனாரிடம் அளப்பரும் அன்புப் பிணைப்பு; அவ்விருவருள் ஒருவரை ஒருவர் 'மாறிப்புக் கிதயம் எய்தினர்'. இந்தச் செயல் உலக விசித்திரங்களுள் ஒன்று. இதற்கு எடுத்துக்காட்டுக் கிடைப்பது அரிது. நான் இங்கே குறிக்கும் ஆசிரியர் மகாமகோபாத்தியாய, தாக்ஷிணாத்ய கலாநிதி, திராவிட வித்யாபூஷணம், டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள். மாணவர் வாகீச கலாநிதி, திருமுருகாற்றுப்படையரசு, தமிழ்க் கவிபூஷணம், தமிழ்ச் செல்வர், திருநெறித் தவமணி, தமிழ்ப் பெரும் புலவர், வித்துவான் கி. வா. ஜகந்நாத ஐயரவர்கள், எம். ஏ. இந்த அடைமொழிகள் அவரவர்கள் பெற்றிருக்கும் பட்டங்கள்.

அன்பர் கி. வா. ஜ. அவர்களுக்கு ஜனக பிதா கிருஷ்ணராஜபுரம் வாசுதேவ ஐயரவர்கள்; ஞான பிதா உத்தமதானபுரம் எங்கள் ஆசிரியப்பெருமானவர்கள். முன்னவர் அன்பரின் உடலை ஊட்டி வளர்க்கப் பின்னவர் உள்ளத்தையும் உணர்வையும் ஆன்மாவையும் ஆதரத்துடன் வளர்க்க உருவானவர் கி. வா. ஜ.

இவருடைய வரலாறு மூன்று பகுதிகளையுடையது. ஒன்று இளமைப் பருவம் (1906 - 1927); அடுத்தது மாணவ நிலை (1928 - 1942); மூன்றாவது இன்றைய நிலை. இதனை 'உலகூட்டும் வற்றாத நீரூற்று' என்று நான் குறிக்கிறேன்.

## 1. இளமைப் பருவம் (1906 - 1927)

அன்பரின் முன்னோர் வாழ்ந்த ஊர் திருச்சிராப்பள்ளி மாவட்டத்திலுள்ள கிருஷ்ணராஜபுரம். இவர் இளமையில் வாழ்ந்தது சேலம் மாவட்டத்தில் காந்தமலை ஷண்முகநாதர் கோவில் கொண்டெழுந்தருளியிருக்கும் மோகனூர் என்னும் தலம்.

இவர் எஸ்.எஸ்.எல்.ஸி. வரை படித்துவிட்டு, 1922-இல் தம் எழுத்துப் பணியில் மிகுதியாக ஈடுபட்டார். முருகப் பெருமானிடம் ஆழ்ந்த அன்பு கொண்டு உலகப் பொருள்களிடத்துப் பற்றற்ற நிலையில் திருப்புகழ், அலங்காரம், அநுபூதி, திருவாசகம் என்னும் நூல்களை நன்றாகப் படித்தார். படிப்பும் எழுத்தும் இவருடைய பன்னிரண்டாம் பிராயத்திலேயே தொடங்கின. கவிதை, கட்டுரை, கதை என்னும் மூன்று துறைகளில் இவர் எழுதியனவற்றுள் சில, அக்காலத்திய ஒற்றுமை, ஆத்ம சக்தி, லக்ஷ்மி, கற்பகம் என்னும் பத்திரிகைகளில் வெளிவந்துள்ளன. அந்தக் காலத்தில் எழுத்தாளரும் பேச்சாளரும் பெரும்பாலும் தமிழ்ப் பண்டிதர்களே. 'பல்லை உடைக்கும் நடையில் எழுதுவது சிறப்பு' என்ற கருத்து நிலவிய காலம் அது. பத்திரிகை எழுத்தாண்மை (Journalism) இன்னமும் மலரவில்லை. எளிய நடையில் கதை, கட்டுரை, புதிய முறைக் கவிதைகள் அதிகமாகத் தோன்றவில்லை. கவிதைக்கு வழிகாட்டியாகப் பாதையை வகுத்துச் சென்றவர் பாரதியார் ஒருவரே. சிறு கதை அப்போது தமிழர்க்குப் புதியது.

நான் மோகனூருக்குப் பத்துக் கல் தொலைவில் வேலூர் என்னும் இடத்தில் தமிழாசிரியனாக இருந்த சமயம். அன்பரின் எழுத்தோவியங்களிற் சிலவற்றைக் கண்டேன். அவை என் உள்ளத்தைப் பிணித்துவிட்டன. எங்கள் முதற் சந்திப்பு 1923-இல்தான் நிகழ்ந்தது. பதினாறு பிராய இளைஞரிடம் முதற் சந்திப்பில் நான் கண்ட ஒற்றை நாடி உடல், பழுப்பேறிய கதராடை, கழுத்தில் ஒற்றை ருத்திராட்சம், நெற்றியில் திருநீறு, எண்ணெய்ப் பசை பற்றாத சிகை ஆகிய இந்தத் தோற்றம், 1932-இல் இவருக்குத் திரு

மணமாகும்வரை மாறவில்லை. எவரிடமும் வேறுபாடின்றிப் பழகும் இயல்பு, நகைச் சுவை நிரம்பிய பேச்சு, பணிவு, எளிய வாழ்க்கை (வறிய வாழ்க்கையன்று), இவை அனைத்துக்கும் மேலாக முருகப் பெருமானிடம் இவர் கொண்டிருந்த அன்பு ஆகிய இந்தப் பண்புகள் என்னை மிகுதியாகக் கவர்ந்துவிட்டன. இதன் பின்பு மோகனூர், வேலூர், நாமக்கல்லை அடுத்துள்ள சேந்தமங்கலம் (இது என் மாதாமகரின் ஊர்) இந்த இடங்களில் அடிக்கடி நாங்கள் சந்தித்து அளவளாவினோம்.

குளித்தலை உயர்நிலைப் பள்ளியில் இவர் கணக்கையும் பௌதிகத்தையும் இஷ்ட பாடமாக எடுத்துக்கொண்டு கல்வி பயின்று வந்ததனால், நாலாம் படிவத்துக்குப் பின்பு தமிழைக் கற்றுக்கொள்ளும் வாய்ப்பு இவருக்கு இல்லை. இந்த நிலையில் தாமாக இவர், மேலே நான் குறிப்பிட்ட பக்தி நூல்களுடன் வேறு நூல்களில் சிற்சில பாடல்களையும், சமயத்துறையில் வேதாந்த நூல்கள் சிலவற்றையும் பயின்றறிந்தார். இந்தப் பயிற்சியின் உதவியினால் அரிய கவிகளை எழுதினார்; எளிய நடையில் கட்டுரைகளையும் கதைகளையும் உருவாக்கினார்; நீண்ட நேரச் சொற்பொழிவுகளை நிகழ்த்தினார்.

சேந்தமங்கலத்தில் இருந்த ஸ்ரீ சுயம் பிரகாச ஸ்வாமிகளிடம் இவருக்கு மிகுந்த ஈடுபாடு; பழக்கம். இவை காரணமாகத் துறவு வேட்கை. இந்த நிலையோடு அந்த ஊர் யூனியன் பஞ்சாயத்தில் இவர் கணக்கராக வேலை பார்த்து வந்தார். சேந்தமங்கலத்தில் அப்போது செல்வாக்குப் பெற்றிருந்த உடையார் சமூகத்து அன்பர் சிலருடைய ஆதரவில் அங்கே இருந்த ஓர் ஆசிரமத்தில் தொடர்ந்து பல சொற்பொழிவுகளை ஆற்றிவந்தார். வெள்ளைக்காரத் துரைமகனார் ஒருவருக்குத் தமிழைச் சில மாதங்கள் கற்றுக் கொடுத்து நற்சான்றுத் தாளையும் பெற்றார்.

இவர் அப்போது பாடியிருந்த 'சுதந்தர தேவியின் திருக்கோவில்', 'முருகன் பதிற்றுப்பத்து' என்னும் நூல்கள் என் உள்ளத்தைக் கவர்ந்தன. அந்தப் பதிற்றுப்பத்துக்கு நான் சிறப்புப் பாயிரமும் வழங்கியிருந்தேன். 'இறைவழியை நாடுவோனுக்கு இவை எல்லாம் எதற்கு?' என்று எண்ணி ஒரு நாள் இவர் இவற்றை எல்லாம் அழித்துவிட்டார். பல தனிக் கவிகளும் அழிந்தன. சில பாடல்கள் என் கையிலும் வேறொரு நண்பர் கையிலும் இருந்தன. அவை 'காந்தமலை முருகன் தோத்திர மஞ்சரி' என்னும் பெயரில் எங்கள் முயற்சியால் பிறகு வெளிவந்தன. அந்த நூலிலிருந்து இரண்டொரு கவிகளை இங்கே கொடுக்கிறேன்:

கடவுளர்க்கா வைத்த கடிமலரை எச்சிலாப்
படஇயற்றி நீசெய்த பாவம்எலாம் தீரஎனின்
நடம்இயற்றும் ஈசற்கே நன்மொழிஒன் றையுரைத்தான்
தடமுகத்தான் காந்தமலை சார்ந்தூதாய் கோத்தும்பீ!

காக்கைக்கட் சியிற் பயின்று காமன்வரும் கோலம்எலாம்
தூக்கிச்சொல் லும் சின்னத் தூவிக் குயிற்பிள்ளாய்
காக்கைக்கு வேலுடையான் கண்மணிஎம் காந்தமலைக்
கோக்கைக் கடம்பன்வரக் குளிர்இசையாற் கூவாயோ?

இந்த நூலைத் தவிர, 'முருகன் பெருமை' என்ற ஆராய்ச்சி நூல் ஒன்றின் கையெழுத்துப் பிரதி, இவருடைய இளம்பிராய எழுத்து வன்மையையும் ஆண்டவனிடம் இவருக்கு அக்காலத்திலேயே இருந்த அன்பின் திட்பத்தையும் காட்டப் போதிய சான்றாகும். சேந்தமங்கலம் அபிமானிகள் சிலர், 1927 - இல் திருப்பாதிரிப்புலியூர் ஸ்ரீலஸ்ரீ ஞானியாரிடம் இவரைத் தமிழ் கற்பதற்காக அனுப்ப விரும்பினார்கள். எனக்கு என்னவோ, மேலும் இவர் துறவு நெறியில் தோய்ந்துவிடாதபடி ஸ்ரீ ஐயரவர்களிடம் சென்று கல்வி பயின்று உலகூட்டும் வற்றாத ஊற்றாகத் திகழ வேண்டும் என்பது அவா. நாங்கள் இவற்றை எல்லாம் சிந்தித்தோம். அந்த ஆண்டு உடையாரின் அன்பர் சிலர் இவருடன் மார்கழித் திருவாதிரைக்குச் சிதம்பரம் சென்றார்கள். ஸ்ரீ ஐயரவர்கள் அப்போது சிதம்பரத்தில் இருந்தார்கள். ''நீங்கள் சிதம்பரம் சென்றால் ஸ்ரீ ஐயரவர்களையும் தரிசித்து வாருங்கள்'' என்று நான் கூறினேன்.

தில்லையில் 1927 டிசம்பரில் திருவாதிரைத் திருநாளில் ஸ்ரீ ஐயரவர்களை நண்பர்கள் கண்டார்கள். அன்பரை அவர்களிடம் அனுப்ப விரும்புவதாகச் சொன்னார்கள். அன்பரின் பணிவும் பக்தியும் ஐயரவர்களின் மனத்தை இவரிடம் ஈர்த்தன.

''நான் சில தினங்களில் சென்னை சென்றுவிடுவேன்; உங்களுக்கு இங்கே கல்லூரியில் சேர்ந்து படிக்க விருப்பமா? என்னிடம் சென்னைக்கு வர விருப்பமா?'' என்று ஐயரவர்கள் அன்பரைக் கேட்

டார். ''சென்னைக்கே வந்து உங்களிடம் படிக்க விரும்புகிறேன்'' என்றார் அன்பர். ''நீங்கள் ஊருக்குப் போய் ஒரு நல்ல நாள் பார்த்து இவரைச் சென்னைக்கு அழைத்து வாருங்கள்'' என்று தமிழ்த் தெய்வம் கட்டளையிட்டு இவருக்கு ஆசி கூறி அனுப்பிவைத்தது.

1927 டிசம்பரில், சென்னையில் அகில இந்தியக் காங்கிரஸ் நடைபெற்ற சமயம், அன்பர் கி.வா.ஜ. ஐயரவர்களிடம் தமிழைக் கற்கச் சென்னை வந்து சேர்ந்தார். அப்போது இவருக்கு வயசு இருபத்தொன்று.

## 2. மாணவ நிலை (1928—1942 ஏப்ரல்)

நீண்ட காலம் நிலைத்திருந்து, ஐயரவர்களிடம் கல்வி பயின்று, பதிப்புமுறைகளை முற்றும் தெரிந்துகொண்டவர் இவர். இந்தப் பயிற்சிக்குப் பணிவு, ஊக்கம், இடைவிடா முயற்சி, எல்லாவற்றுக்கும் மேலாகத் தன்னை இழந்துவிடும் வலிமை இத்தனையும் வேண்டும். ஐயரவர்களிடம் எத்தனையோ பேர் படித்தார்கள். இந்தக் குணங்களில் இரண்டொன்றன் குறைவினால் அவர்கள் நீண்ட காலம் மாணவராக நிலைகொள்ளவில்லை; ஐயரவர்களின் உள்ளத்திலும் தனியிடம் பெறவில்லை. இத்தகைய மனத்திட்பம் அன்பர் கி. வா. ஜ. அவர்களிடமே இருந்தது. இன்றும் இந்தப் பண்புகள் இவரிடம் இருக்கின்றன. ஞானபண்டிதனாகிய அநுமன் இராமபிரானின் திருவடிக்கீழ், பணிவுடன் தொண்டாற்றியதைத்தான் ஐயரவர்களுக்கும் அன்பருக்கும் இடையிலிருந்த தொடர்புக்கு உவமை கூறுவேன். அநுமனின் ஆற்றலை முதற் சந்திப்பிலேயே இராமபிரான் உணர்ந்திருந்தார். அன்பரின் ஆற்றலை ஐயரவர்கள் தொடக்கத்தில் அறியவில்லை. அறிந்துகொள்ளும் வாய்ப்போ அவகாசமோ அவர்களுக்கு ஏற்படவில்லை.

ஆசிரியரவர்களின் திருவடிக்கீழ் இவர் இருந்துகொண்டு முறையே கல்வி பயின்று, பதிப்பு வேலைகளில் கலந்துகொண்டு, அவர்கள் சென்ற இடங்களுக்கெல்லாம் நிழல்போல் தொடர்ந்து சென்று இவர் பணிபுரிந்த காலம் பதினைந்து ஆண்டுகளாகும். இதனை மூன்று பகுதிகளாகப் பிரிக்கலாம்.

முதற்பகுதி 1928 முதல் 1930 முடிய. இந்தப் பகுதியின் நிகழ்ச்சி பாடங்கேட்டல் ஒன்றே. இரண்டாம் பகுதி 1931 முதல் 1936 முடிய. பாடங்கேட்டலோடு நூற்பணியில் உடனிருந்து அருந் தொண்டாற்றியது இதனுள் அடங்கும். மூன்றும் பகுதி 1937 முதல் 1942-இல் ஐயரவர்கள் மண்ணுலகை விட்டுச் சென்ற நாள் வரை. ஐயரவர்களின் கட்டளையின்படி அவர்களுடைய நூற்பணியில் இவர் பெற்றிருந்த சுதந்தரம் இந்தப் பகுதியில் காண்கிறது.

### முதற் பகுதி (1928—30)

சென்னையில் ஐயரவர்களின் இல்லத்துக்கு எதிர்வரிசையில் ஓர் அறையை வாடகைக்கு எடுத்துக்கொண்டு உண்டியகம் ஒன்றில் உணவருந்திக்கொண்டு, நாளில் பதினொரு மணி நேரம் தம் ஆசிரியருடன் இருப்பது இவருக்கு வழக்கமாயிற்று. பாடங் கேட்பது சில மணி நேரமே; மற்றச்சமயங்களில் ஐயரவர்கள் தம் நூற்பணிகளைச் செய்துகொண்டிருக்க இவர் அங்கேயே தனியே ஓர் இடத்தில் இருந்துகொண்டு நூல்களைப் படித்து வந்தார். இந்த நாட்களில் இவர் பாடங்கேட்ட நூல்கள் பல. இலக்கணங்கள், சங்க நூல்கள், காவியங்கள், பிரபந்தங்கள் இப்படி ஒன்று விடாமல் பலவற்றைப் பாடங் கேட்டார். அச்சில் வராமல் கையெழுத்துப் பிரதிகளாக இருந்த சிலவற்றையும் பயின்றார். இக்காலத்தில் இவர் சொந்தத்தில் எழுதி எழுதிக் கிழித்தெறிந்த செய்யுட்களும் பல. நீண்ட கடிதங்கள் சிலவற்றையும் செய்யுள் வடிவில் எனக்கு எழுதியிருக்கிறார்.

### இரண்டாம் பகுதி (1931—36)

அன்பர் 1929 - செப்டம்பரில் நோய்வாய்ப்பட்டு, ஆசிரியரவர்களின் வற்புறுத்தலினால் ஓய்வெடுத்துக்கொள்ள மோகனூர் திரும்பினார். சென்னையில் இவர் இல்லாத சமயம் நான் சென்னைக்கு வரவேண்டிய சந்தர்ப்பம் ஏற்பட்டது. அதுவரையில் ஐயரவர்களை நேரில் பார்த்திராத நான் அவர்களைத் தரிசித்து அரைமணி நேரம் உரையாடினேன். அப்போது நான் அன்பரின் திறமையைப் பற்றிச் சிறிது கூறினேன். ''ஜகந்நாதன் சாதாரண மனிதர் அல்லர்; தெய்வப் பிறவி; வருங்கால மலை விளக்கு; தமிழன்னையின் வடிவாகிய தங்களிடம் வந்து அவர் கல்வி பயில்வது எங்களுக்குப் பெரு மகிழ்ச்சி தருகின்றது'' என்றேன்.

நட்புக் காரணமாக நான் மிகைப் படுத்திக் கூறியதாக ஐயரவர்கள் கருதியிருக்க வேண்டும். என் உரைகளை அவர்கள் அப்போது ரசிக்கவில்லை. மூன்று மாத இடையீட்டுக்குப் பிறகு 1930-ஜனவரியில் அன்பர் குணமுற்று ஐயரவர்களிடம் வந்து சேர்ந்தார். சில நாட்க

ளுக்குப் பின் எனக்கு எழுதிய கடிதத்தில் அன்பர் கி.வா.ஜ., ''நீங்கள் என்னைப்பற்றி எம் ஆசிரியப் பெருமானிடம் வானளாவப் புகழ்ந்தீர்களாம்! இப்போது அவர்கள் எனக்குப் பல சமஸ்யைகளைக் கொடுத்துப் பாடும்படி பணிக்கிறார்கள்; நூற்பணியிலும் கலந்துகொள்ள அநுமதித்திருக்கிறார்கள்'' என்று எழுதியிருந்தார்.

ஐயரவர்களுக்கு 1930-இல் காலில் அறுவைச் சிகிச்சை செய்ய வேண்டிய அளவு புண் கண்டு, அவர்கள் பிழைப்பது அரிதாகிவிட்டது. டாக்டர் ரங்காசாரி அவர்கள் எப்படியோ ஐயரவர்களைக் குணப்படுத்திப் பிழைக்க வைத்தார்கள். படுக்கையில் ஐயரவர்கள் கிடந்த நாட்களில், அன்பர் அவர்களுக்குச் செய்த உடற்சேவை ஐயரவர்களையும் அவர்கள்தம் குடும்பத்தினரையும் அன்பருடன் நெருக்கமாகப் பிணித்துவிட்டது. ஐயரவர்களின் பதிப்பு வேலைகளில் நண்பர் கலந்துகொண்டது இப்பொழுது முதற்கொண்டுதான்.

நான் வேலூரிலேயே வித்துவான் பட்டம் பெற்று, 12-7-'31-இல் சென்னை வந்து ஓர் உயர்நிலைப்பள்ளியில் தலைமைத் தமிழாசிரியனாகப் பதவியேற்றேன். சென்னை வந்ததும் முதல்முதலில் ஐயரவர்களை நான் தரிசித்து அன்பர்மூலம் அவர்களுடைய அருளைப் பெற்றேன். அப்போது அவர்கள், முன்பு கி.வா.ஜ.வைப் புகழ்ந்தவன் நான்தான் என்று தெரிந்துகொண்டு, ''உங்கள் அன்பர், நீங்கள் சொன்ன அளவுக்கும் மேலாகச் சிறந்த ஞானம் படைத்தவர். நீங்கள் நன்கு அறிந்து கூறியிருக்கிறீர்கள்!'' என்றார்கள்.

நான் சென்னை வந்த சமயம் தக்கயாகப்பரணி முடிந்திருந்தது. பத்துப்பாட்டு, மணிமேகலை மறுபதிப்புக்கள் முடியும் தறுவாயில் இருந்தன. ஸ்ரீ பிள்ளையவர்களின் சரித்திரக் குறிப்புக்களை அன்பர் தொகுத்து வந்தார். ஒரு நாள் ஐயரவர்கள், எவரும் இல்லாத சமயம் பார்த்து, ''எல்லாம் உங்கள் அன்பரின் முயற்சி! எந்த வேலை தந்தாலும் நன்றாகச் செய்கிறார்'' என்றார்கள். தக்கயாகப்பரணி முகவுரையில், ''இந்நூலைப் பரிசோதித்துப் பதிப்பித்து வரும் நாட்களில் உடனிருந்து எழுதுதல், ஆராய்தல், ஒப்பு நோக்குதல் முதலிய உதவிகளை அன்புடன் செய்தவர்கள்.... மோகனூர்த் தமிழ்ப் பண்டிதர் சிரஞ்சீவி கி. வா. ஜகந்நாத ஐயரும் ஆவர். இவர்களுள் ஜகந்நாத ஐயர் எடுத்துக்கொண்ட உழைப்புப் பாராட்டத் தக்கது'' என்று எழுதியுள்ளார்கள். அவர்கள் வெளியிட்ட ஒவ்வொரு நூலின் முகவுரையிலும் அன்பரைப் பாராட்டாமல் இருந்ததில்லை. அந்தப் பாராட்டுரைகளைச் சாலவும் குறைத்துவிடும்படி அன்பர் ஆசிரியப் பெருமானிடம் மன்றுடி வேண்டிக்கொண்ட சந்தர்ப்பங்கள் பல. வித்துவான் பரீட்சையில் தேர்ச்சி பெற்று உடனிருந்து பணி புரியும் பிற மாணவர் வேறு விதமாகத் தம்மை நினைத்துவிடக்கூடாது என்பதே அன்பர் கி.வா.ஜ.வின் அச்சம்.

திருவல்லிக்கேணி இந்து உயர்நிலைப் பள்ளியில் 1930-இல் சில மாதங்கள் அன்பர் தமிழ்ப்பண்டிதராகப் பணியாற்றி மாணவர், உடன் பயில் ஆசிரியர், பள்ளிக்கூடத் தலைவர்கள் ஆகிய இந்த முத்திறத்தாரின் பாராட்டுக்கு உரியவரானார். முகவுரைகளில் ஆசிரியர், அன்பரை 'மோகனூர்த் தமிழ்ப் பண்டிதர்' என்று குறித்தமைக்கு இது காரணமாக இருக்கலாம்.

அன்பர் கி.வா.ஜ.வின் வாழ்க்கையோடு தொடர்புள்ள பல நிகழ்ச்சிகள் இந்தப் பகுதியில்தான் நடைபெற்றன. இவற்றுள் முதன்மையாகக் குறிக்கப்பெறுவது இவருடைய திருமணம். தஞ்சை மாவட்டத்தில் நல்ல குடும்பத்திலே பிறந்த சௌ. அலமேலு அம்மாள் என்பவரை இவருக்கேற்ற மணவாட்டியாக ஐயரவர்களே தேர்ந்தெடுத்து 1932-இல் மணம் முடித்து வைத்தார்கள். அப்போது லக்ஷ்மிப் பத்திரிகையை என்னைக் கொண்டு ஐயரவர்கள் எழுதுவித்தது என் பாக்கியம் என்றே கூறவேண்டும். ஏனெனில், எங்கோ போய்த் துறவு பூண்டு, தனிமையில் ஆன்மலாபம் தேடிக்கொள்ள ஆர்வங்கொண்ட அன்பரின் சுயநல எண்ணத்துக்கு இந்தத் திருமணம் முற்றுப்புள்ளி போட்டது; இவருடைய எல்லாச் சக்திகளையும் தமிழ் மொழிக்கும் மன்பதைக் கூட்டத்துக்கும் பணிபுரியத் திருப்பிவிட்டது. அது முதற்கொண்டு அன்பர் புறத் துறவு வேட்கையை ஒழித்து அகத்துறவோடு அமர்ந்து பணி புரிந்து வருகிறார். சேந்தமங்கலம் அன்பர் உள்ளிட்ட பலரால் சாத்தியமாகாத ஒன்றை ஐயரவர்கள் எளிதில் செய்து முடித்தார்கள்.

இந்த ஆண்டில்தான் கலைமகள் பத்திரிகை தொடங்கியது. ஆசிரியர் குழு ஒன்று அதனை வளர்க்கத் தொடங்கியது. அதன் பதிப்பு வேலைக்காக ஐயரவர்கள் அன்பரைச் சிபாரிசு செய்து அனுப்பினார்கள். நாள்தோறும் பிற்பகலில் சில மணி நேரத்தை இந்த வேலைக்காக அன்பர் ஒதுக்கி வைத்தார். பத்திரிகையின் முழுப் பொறுப்பும் இவர்

கைக்கு வரும்வரை அந்தப் பத்திரிகைக் குப் பாலாரிஷ்டம். குழுக் கலைந்து இவர் நிர்வாக ஆசிரியராக அமர்ந்த சில மாதங்களில் அது ஊதிய முறையில் நடைபெறலாயிற்று.

ஸ்ரீ காமகோடி பீடாதிபதியவர்கள் 1933-இல் சில மாதங்கள் சென்னையில் இருந்துகொண்டு இரவு நேரங்களில் பல அரிய உபந்நியாசங்களை அருளிச்செய் தார்கள். அக்காலங்களில் அன்பர் ஒவ்வொரு நாளும் அருகில் இருந்துகொண்டு குறிப்பெடுத்துக் கொண்டார்கள். முதல் நாள் இரவில் எடுத்த குறிப்புக்கள் அடுத்த நாள் காலையில் உபந்நியாசமாக உருவாயின. ஸ்ரீ ஆசார்ய ஸ்வாமிகள் தங்கள் உபந்நியாசத்துக்கும் எழுத்தில் அது அமைந்ததற்கும் வேறுபாடின்மையை யும், பல சொற்களும் தொடர்களும் அப்படியே அமைந்தமையையும் கண்டு மகிழ்ந்து அன்பருக்கு ஆசி கூறியருளி னார்கள்.

அந்த நாட்களில் தினசரி வேலைகளின் நெருக்கம் இவருடைய உடல்நலத்தைப் பெரிதும் பாதித்தது. காலையில் ஐயர வர்களுடன் இருந்து பதிப்பு வேலை களைக் கவனிப்பது; பிற்பகலில் கலை மகள் வேலைகளை அங்கே போய்க் கவ னிப்பது; மாலையில் மறுபடியும் ஐயரவர் களுடன் இருப்பது; இரவில் உபந் நியாசக் குறிப்பெடுப்பது; அதிகாலையில் குறிப்புக்களைக் கட்டுரையாக்குவது - இப்படி மூச்சுவிட நேரம் இல்லாமல் வேலைகள் பெருகிவிட்டன. அன்பருக்கோ மருந்து சாப்பிடும் வழக்கம் இல்லை. இயற்கை மருத்துவத்தில் மோகம். இவருடைய உடல் தளர்ச்சி எங்களுக் கெல்லாம் கவலை யளித்தது. செய்து வந்த வேலைகளில் எதனையும் இவர் குறைத்துக்கொள்ளவில்லை. பெரியவர் களின் ஆசியினாலும் முருகக் கடவுளின் அருளினாலும் அந்த நலிவு மெல்லத் தீர்ந்து அன்பர் குணமடைந்தார்.

வித்துவான் பரீட்சையில் முதல்வரா கத் தேர்ச்சி பெற்றுப் பரிசு பெற்றதும் இந்தக் காலத்தில்தான்.

மூன்று ஆண்டுகள் சென்னைப் பல்கலைக் கழகத்தில் ஆராய்ச்சி மாணவராக இருந்துகொண்டு ஐயரவர்களின் மேற் பார்வையில் இவர் காவிய ஆராய்ச்சி செய்ததும் இந்த இடைப் பகுதியில்தான்.

இவர் ஐயரவர்களுடன் பல இடங் களுக்குச் சென்று சைவ மடங்கள், பல நிறுவனங்கள், சங்கங்கள் ஆகிய இவற் றின் தலைவர்கள், சிறந்த தமிழ்ப் புல வர்கள், மேதைகள் முதலியோரின் அறிமுகம் பெற்று அவர்களின் பாராட் டைப் பெறத் தொடங்கியது இந்தப் பகுதியின் மற்றொரு சிறப்பாகும்.

## மூன்றும் பகுதி (1937-42)

இந்தப் பகுதியின் தொடக்கம், ஸ்ரீ ஐயரவர்களின் சதாபிஷே கத்தைக் கண்டது. ஆயிரம் பிறை கண்ட அண்ணலாருக்குத் தமிழகமே அன்றித் தமிழ் மக்கள் வாழும் இடங்கள் எல்லாம் திருவிழாக் கொண்டாடிச் சிறப்புச் செய்தன. விழாவில் முக்கியப் பங்கை வகித்த ஸ்ரீ கே. வி. கிருஷ்ணசாமி ஐயர் அவர்களுக்கு, அன்பர் கி.வா.ஜ. உறுதுணையாக நின்று எழுத்துப் பணி முதலிய யாவற்றையும் நிருவகித்து விழாவைச் சிறப்பித்தார்.

சதாபிஷேகத்தை அடுத்து, ஐயரவர் களுக்கு உடலில் நோய் கண்டு அவர்கள் மிகவும் மெலிந்திருந்தார்கள். எண்பதாம் பிராயம் முடிந்த பிறகு அமைதி யாக இருந்து வேலை செய்ய உடல்நிலை அவர்களுக்கு இடம் தரவில்லை. அவர்கள் பாதியில் விட்டிருந்த வேலைகள் முற்றுப் பெற வேண்டுமே! முன்னரே திட்டமிட்டவை நிறைவேற வேண் டுமே! இவற்றை யெல்லாம் ஆசிரிய ரவர்கள் இவரிடமே ஒப்புவித்து இலேசாகக் கண்காணித்து வந்தார்கள். இங்ஙனம் ஏழு ஆண்டுகள், 1942-இல் ஐயரவர்கள் மறையும் வரை, அன்பர் இந்தப் பணிகளைச் செய்து வந்தார். இந்த அரிய பணி ஒருவர் நெஞ்சில் மற்ற வருக்கு நிலையான இடத்தைக் கொடுத் தது. ஐயரவர்களுக்கு உயிர்ப்பு, நினைவு, பேச்சு எல்லாம் அன்பரைப் பற்றித்தான். அன்பருக்கும் இவை ஐயரவர்களைப் பற்றியனவே.

ஆசிரியர்களவர்கள் வழியே இடையில் அன்பருக்கு வெளியூர்களிலிருந்து பெரிய பதவிக்கு அழைப்புக்கள் வந்தன. ''இவ்விடத்தில் சேவை செய்துகொண்டு திருவடிகளுக்குப் பணி புரிவதைத் தவிர, பிரிந்து சென்று நான் வகிக்கத் தக்க உயர் பதவி ஒன்றும் இல்லை'' என்று கூறி, அன்பர் ஒவ்வொன்றையும் தட்டிக் கழித்துவிட்டார். 'தம் வருங் காலத்தை இவர் இப்படிப் பாழாக்கிக் கொள்கிறாரே' என்று ஐயரவர்கள் வருந் தியதும் உண்டு. இன்று அவர்கள் உயிர் பெற்று வந்து நோக்குவார்களேயானால் பெரிதும் மகிழ்வார்கள்.

ஜப்பானியரின் படையேற்ற அச்சம் 1942 ஏப்ரலில் சென்னையை நிலை கலங்கச் செய்தது. அப்போது எண்பத்

தேழு பிராயமாக இருந்த ஐயரவர்கள் தம் அரிய நூல்பொக்கிஷங்களைச் சென்னையில் விடுத்துத் திருக்கழுக்குன்றம் சென்றார்கள். அன்பரின் தந்தையாரும் அவருடைய குடும்பத்தாரும் மோசூர் என்னும் இடத்தில் போய்த் தங்கினார்கள். அன்பரின் தந்தையார் சில நாளில் மோசூரில் காலமானார். அன்பர் அருகில் இல்லாத அந்தச் சமயம் பார்த்து, ஐயரவர்களைக் காலன் இவ்வுலகினின்றும் பிரித்துவிட்டான். அன்பர் ஒரு வாரத்துக்குள் தம்முடைய ஜனகபிதாவையும் ஞானபிதாவையும் இழந்து, தந்தையற்ற தனயரானார்.

1932-இல் திருமணம் நிறைவேறி, 1939-இல் அன்பர் ஒரு குழந்தைக்குத் தந்தையாகியிருந்தும் ஐயரவர்களின் இறுதிநாள்வரை தம்மை மாணவராகவே கருதி, ஆசிரியரவர்களின் நிழலைப் போல் அவர்களின் திருவடிக் கீழ்த் தம்மை மறந்த நிலையில் பணிவுடன் பணி புரிந்து வந்தார். இது பெரிய சாதனை. இந்த அடக்க ஒடுக்கம் வேறு எவருக்கும் சாத்தியமானதன்று.

ஐயரவர்கள் மறைந்த போது, 'என் சரித்திரம்' பாதியில் நின்றிருந்தது. வேறு சில வேலைகளும் அங்ஙனமே. அரை குறையாக இருந்த வேலைகளை அன்பர் கி.வா.ஜ. அவர்கள், ஐயரவர்களின் குமாரர் ஸ்ரீ கலியாணசுந்தரம் ஐயரவர்களுடன் இருந்துகொண்டு அந்த இல்லத்திலேயே செய்து முடித்தார். நெடுங்காலம் ஐயரவர்களுடன் இருந்து நகைச்சுவையுடன் பொழுது போவதே தெரியாமல் வேலை செய்து வந்த அதே இல்லத்தில், அவர்கள் இல்லாமல் தனிமையில் பதிப்பு வேலைகளைச் செய்தபோது இவர் மனம் எங்ஙனம் வருந்தியிருக்கும் என்பதை என்னால் ஊகித்து அளவிடல் இயலாது. ஆயினும் கடமை உணர்ச்சியுடன் இவர் அவர்கள் விட்டுச் சென்ற அரைகுறை வேலைகள் சிலவற்றை முடித்தார். ஐயரவர்களின் சுய சரித்திரத்தை மேற்கொண்டு இவர் எங்ஙனம் எழுதி முடிப்பது? 'என் ஆசிரியர்' என்னும் பெயரில் இரண்டாம் பகுதியாக ஐயரவர்களின் வரலாற்றை முடிப்பது தவிர வேறு வழி இல்லை. ஸ்ரீ கலியாணசுந்தரம் ஐயரவர்கள் அதை 'என் தந்தையார்' என்ற பெயரில் தொடங்கி முடித்திருக்கலாம். அது கைகூடாமல் அவரும் மறைந்துவிட்டார். அன்பர் கி. வா. ஜ. தாம் அதனை முடிக்க வேண்டும். ஸ்ரீ ஐயரவர்களின் பேரருக்கும் அன்பர் இதனை முடிப்பதில் ஆர்வம் அதிகம். ஆனால் அதற்கேற்ற தருணம் இன்னமும் முகிழ்க்கவில்லை.

ஐயரவர்களின் வரலாற்றில் அன்பர் புதிய யுகம் ஒன்றைத் தோற்றுவித்தார் என்று தொடக்கத்தில் நான் கூறினேன். அதன் விவரத்துடன் 'மாணவ நிலை' என்னும் இந்தப் பகுதியை முடிக்கிறேன்.

ஸ்ரீ ஐயரவர்கள் பதிப்பித்த நூல்களில் ஒரு பதிப்பையும் விடாமல் தொகுத்து ஆராய்வாருக்கு, அவை இரு வேறு முறைகளைப் பெற்றிருப்பது புலனாகாமற் போகாது. இந்த முறைகளை வேறாகப் பிரிப்பது உத்தேசமாக 1930-ஆம் ஆண்டு எனல் வேண்டும். இந்தக் கால எல்லைக்கு முன் வெளியான நூல்களில் எல்லாம் முகவுரை, பாடினோர் - பாடப்பட்டோர் வரலாறுகள், பொருள் அகராதி, மேற்கோள் அகராதி, ஆராய்ச்சிக் குறிப்புக்கள் முதலியன சுருக்கமானவை; உரை நடை வாக்கியங்கள் மிகப் பெரியவை.

பத்திரிகைகளையும் செய்தித் தாள்களையும் படிக்க ஐயரவர்களுக்கு நேரம் இருக்கவில்லை. அவற்றினிடம் அவர்களுக்கு விருப்பமும் இருக்கவில்லை. பழம் நூல்களைப் பதிப்பித்தல் ஒன்றிலேயே அவர்கள் கண்ணுங் கருத்துமாக இருந்தார்கள். அக்காலத்தில் தமிழில் வெளிவந்த எல்லாப் பத்திரிகைகளும் அவர்களுடைய பார்வைக்கு வந்து குவிந்தன. அவற்றை அவர் பயன்படுத்தாததோடு, மாணவர் எவரேனும் அவற்றைப் புரட்டுவதற்கும் அநுமதி யளிக்கவில்லை. எத்தனை நேரம் இருப்பினும் வேலைக்கு அது பற்றவில்லை என்பதுதான் அவர்களுடைய பல்லவி. 1930-க்கு முன் நிலை இது.

அன்பர் கி.வா.ஜ. அவர்களுக்கோ பத்திரிகைகள் உயிர், படிக்காவிட்டால் தலைவலி. ஐயரவர்கள் இதனை எங்ஙனமோ அறிந்துகொண்டு தம் மாணவராகிய இவர் அவற்றைப் படிப்பதற்கு அநுமதி வழங்கினார். பத்திரிகைகளுக்கு எளிய நடையில் எழுதுவதனால்தான் ஒருவர் மக்களுக்கு மிகுதியாகப் பயன் படக் கூடும் என்பதை அன்பர் அப்போது ஐயரவர்களுக்கு வற்புறுத்தி அவர்களை எழுதுமாறு வேண்டிக்கொண்டார்.

நாளடைவில் அன்பரால் ஐயரவர்களும் பத்திரிகைப் படிப்பில் ஆர்வம் காட்டி, அருகில் இருந்தவர்களைப் படிக்கச் சொல்லிக் கேட்டு வரலானார்கள். தொடக்கத்திலிருந்து கலைமகளுக்குக் கட்டுரைகளை அவர்கள் வழங்கினார்கள். இந்த ஏற்பாடு பிறகு வேறு பல மாத வார இதழ்களுக்கும் விரிவு பெற்றது. இப்போது அவர்களின் உரைநடையே மாறி விட்டது. நடை மிகவும் எளியது; சின்னஞ்சிறு வாக்கியங்களால் ஆனது;

உரைநடையின் பொருள் பொது மக்களுக்குக் கவர்ச்சி தருவது. அதனை அவர்கள் கொடுத்த முறை சிறுகதை இலக்கியத்தை ஒட்டியது.

தாங்கள் பதிப்பித்த பழைய நூல்களால் ஐயரவர்கள் பண்டித உலகுக்கு அறிமுகமாகி, அதன் உச்சியை எட்டினார்கள். அவர்கள் எழுதிய உரைநடைச் செல்வங்களால் தமிழுலகமே இன்று அவர்களைப் பாராட்டுகிறது. அது அன்றே அவர்களைப் புரிந்துகொண்டது. ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் சரித்திரம், ஸ்ரீ தியாகராச செட்டியார், கண்டதும் கேட்டதும், சங்கத் தமிழும் பிற்காலத் தமிழும், புதியதும் பழையதும், நல்லுரைக் கோவையின் நான்கு பகுதிகள், என் சரித்திரம், பிற்காலத்திலே திருத்தி எழுதிய உதயணன் சரித்திரம் முதலியன அவர்கள் தமிழுலகுக்கு வழங்கிய அரிய மணிகள். வேறு மொழிகளிலும் இவற்றுள் சில மொழி பெயர்க்கப் பெற்றுள்ளன. 'வெறும் பண்டிதர்' நடையை விட்டுப் பத்திரிகை நடையை அவர்கள் மேற்கொண்டமைக்குத் தூண்டுகோலாக இருந்து ஆவன செய்தவர் அன்பர் கி.வா.ஜ. அவர்கள்.

உரைநடை நூல்களை அன்றி, 1930-க்குப் பின் வெளிவந்த செய்யுள் நூல்களிலும் முகவுரை, ஆராய்ச்சி முதலியன எளிய நடையில் விரிவு பெற்றன. திருப்புகழ் முதலிய ஸ்ரீ அருணகிரியாரின் நூல்களிலிருந்து மேற்கோள்கள் பல்கின. பின்பு வெளியான குறுந்தொகை, பெருங்கதை, பல நூல்களின் மறுபதிப்புக்கள், பல பல பிரபந்தங்கள் இவை எல்லாம் புதிய பாணியில் அமைந்தவை. 1930-முடியத் தம் வாழ்வின் பெரும்பகுதியில் அவர்கள் சாதித்த அளவைப் போல் பதின்மடங்கு அளவில் நூல்கள் இறுதிக் காலத்தில் பத்து ஆண்டுகளில் வெளிவந்துள்ளன. இவற்றின் வாயிலாகத் தமிழ்நாடு புதிய யுகத்தைக் கண்டது. இந்தப் பதிப்புக்களுக்கு உரிய தொடக்க வேலைகளை எல்லாம் உடனிருந்து முடித்தவர் அன்பர் கி. வா. ஜ. அவர்களே.

இலக்கண இலக்கிய அறிவு, சமய உணர்ச்சி, செய்யுள் இயற்றும் புலமை, பாடம் சொல்லுதல், சொற்பொழிவாற்றல், நூலாராய்ச்சி, நூற்பதிப்பு, கதை கட்டுரைகளை எழுதுதல், பத்திரிகைத் தொழில் ஆகிய இவை தமிழின் பல துறைகள். இந்தத் துறைகள் எல்லாவற்றிலும் வல்லவர் ஒருவரைக் காண்பது அரிது. இந்தப் பண்புகள் எல்லாம் ஒருங்கே செவ்விய முறையில் அமைய அன்பரை உருவாக்கிய பெருமை ஐயரவர்களைச் சேரும்.

ஸ்ரீ விவேகானந்தராம் அழியாத ஜோதியை ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சர் ஏற்றி வைத்தார். வங்கத்துப் பரமஹம்சரை விவேகானந்தர் உலகுக்கு அளித்தார். இப்படி ஓர் ஒப்பு இங்கே தென்னாட்டிலும் இருக்கிறது!

ஐயரவர்கள் மறைந்த சில மாதங்கள் கழித்து, ஸ்ரீ கி. வா. ஜ. அவர்களின் நண்பர் சிலர் ஸ்ரீ ஐயரவர்களின் பெயரில் நிறுவனம் ஒன்றை அமைத்துப் பதிப்பு வேலைகளைத் தொடர்ந்து நடத்த விரும்பினார்கள். அவர்களின் முயற்சி முற்றும் உருவாகவில்லை; நிறுவனம் ஏற்படவில்லை. ஏற்பட்டிருந்தால் ஸ்ரீ ஐயரவர்களின் ஆராய்ச்சிகள் பல வெளிவந்திருக்கும். அன்பரின் வரலாறு வேறாக மாறியிருக்கும்.

ஐயரவர்களின் புதல்வர் ஸ்ரீ கலியாண சுந்தரம் ஐயரவர்கள் தம் தந்தையார் தொகுத்து வைத்திருந்த சுவடிகள் அனைத்தையும் 1943- ஜூலையில் ஸ்ரீமதி ருக்மிணி தேவியாரின் பொறுப்பில் கலாக்ஷேத்திரத்துக்கு ஒப்படைக்க ஏற்பாடு செய்துவிட்டார்கள். இதன் பின்னர் அன்பர் கி. வா. ஜ. அவர்களுக்கு ஸ்ரீ ஐயரவர்களின் நூல் பொக்கிஷங்களுடன் தொடர்பு இல்லாமற் போயிற்று. அப்போது இவருக்கு வயசு முப்பத்தேழு.

## 3. உலகூட்டும் வற்றாத நீரூற்று

ஐயரவர்கள் தம் வாழ்நாளில் தமக்குப் பின், பதிப்பு வேலைகளைப் பற்றி ஒரு விதத் திட்டத்தையும் வகுக்காமல் சென்றுவிட்டதனால், அன்பர் கி.வா.ஜ. அவர்கள் பழைய நூற்பதிப்பு வேலைகளைக் கைவிட்டுப் பிற துறைகளில் ஈடுபடலானார். தொடக்கத்தில் சில மாதங்கள் அவர் உருவாக ஒன்றும் செய்யவில்லை. ஐயரவர்களின் சிந்தனையே நெஞ்சில் மேற்கொண்டிருந்தது. அவர் பதினாறு ஆண்டுகள் வசித்து வந்த திருவல்லிக்கேணியை விட்டு, மயிலையில் குடி புகுந்தார். கலைமகள் அலுவல்கள், தம்மிடம் வரும் அன்பர்களுக்கு இலவசமாகப் பாடம் சொல்லுதல், பத்திரிகைகளுக்கு எழுதுதல் ஆகிய பணிகளிலேயே இரண்டு ஆண்டுகள் ஈடுபட்டிருந்தார்.

வற்றாத நீரூற்றாகிய இவர்கள் இப்போது செய்து வரும் பணிகளை உலகம் அறியும். மேடையேறி இவர்கள் பேசாத கழகங்கள் தமிழ் நாட்டிலோ தமிழர் வாழும் பிற இடங்களிலோ இல்லை;

எழுதாத தமிழ்ப் பத்திரிகைகள் இல்லை எனலாம். இதுகாறும் இவர் எழுதி வெளிவந்துள்ள நூல்களின் பட்டியல் இந்த மலரில் தனியே ஓரிடத்தில் காண்கிறது. குழந்தைகள் முதல் பல வயசினரிடை, செல்வர்-ஏழையர், படித்தவர் - படியாதவர், கட்சி வேறுபாடு கொண்டவர்-இல்லாதோர் அனைவரிடத்தும் ஒரே மாதிரியாக இவர்கள் பழகும் அன்புமுறை போற்றத்தக்கது.

அன்பருடைய நூல்களைவிட, ஆற்றும் சொற்பொழிவுகளை விட, உரையாடல் சிறந்தது. அந்த உரையாடலில் இலக்கிய வரம்புக்கு உட்பட்ட நகைச்சுவை, எளிமை, தெளிவு, பணிவு எல்லாம் காணப்படும். இவர் ஒரு ஸேம்யுவல் ஜான்ஸன். ஜான்ஸனுடன் ஒரு பாஸ்வெல் இருந்துகொண்டு அந்தப் பெரியாரின் உரையாடற் பொக்கிஷத்தை உலகுக்கு அளித்தார். இவருடைய உரையாடல்களையும் பேச்சுநயங்களையும் தொகுத்து உருவாக்க இன்னமும் ஒரு பாஸ்வெல் முன்வரவில்லை. 1950-இல் ஒரு பாஸ்வெலைத் தோற்றுவிக்க நான் முயன்ற முயற்சிகள் வீணாயின. அங்கங்கே அவ்வப்போது பலர் எடுத்திருக்கும் உரையாடற் குறிப்புக்கள் சில உள்ளன. என்னிடமும் சில இருக்கின்றன. இவற்றைப் போல் பலவற்றை மேற்கொண்டு சேர்த்து ஒன்றாக நூல்வடிவில் ஒரு தொகுப்பு வெளிவரல் வேண்டும். அது மிகவும் சுவை பயப்பதாக இருக்கும்.

அன்பர் கி.வா.ஜ. அவர்கள் தொகுத்து வைத்திருக்கும் இலக்கியச் செல்வங்கள் பல. இன்னமும் தொகுத்துக் கொண்டே இருக்கிறார். பழமொழிகள், நாடோடிப் பாடல்கள், இலக்கணக் குறிப்புக்கள், பழைய நூற் செய்திகள், சொல்லாராய்ச்சிகள் இவற்றுள் முக்கியமானவை. இவை எல்லாம் இனி அச்சு வாகனமேறி வெளிவரல் வேண்டும்.

இவர்கள் அப்பொழுது அப்பொழுது எழுதி வரும் தனிப் பாடல்கள் மிகுந்த சுவையுடையன. ஒவ்வொன்றும் ஒவ்வொரு வரலாற்றை நிலைக்களனாக உடையது. இதுகாறும் இவர் பாடியவை அங்கங்கே சிதறிக் கிடக்கின்றன. இவையும் திரட்டப் பெறல் வேண்டும்.

என் சரித்திரத்தின் தொடர்ச்சியாக, 'என் ஆசிரியர்' என்னும் நூல் இன்னமும் உருவாகவில்லையே என்று நான் கவலையுறுகிறேன். அது தோன்றுவது எப்பொழுதோ! இவருடைய வரலாற்றை இவரே எழுதுவதுதான் சிறப்பு. அது நமக்கும் வருங்காலச் சந்ததிகளுக்கும் நல்ல வழிகாட்டியாக இருக்கும்.

இவை எல்லாம் வெளிவரக் காந்தமலை முருகப்பெருமான் இவருக்கு உடல்நலத்தையும், நீண்ட ஆயுளையும், இவற்றை வெளியிட வேண்டும் என்ற ஆர்வத்தையும், அவகாசத்தையும் அருள வேண்டும். இது என் வேண்டுகோள். ★

## பழம் புத்தகங்கள்

கடிதாசிப் பஞ்சம் வந்தாலும் வந்தது; என் மனைவியினுடைய பிரார்த்தனை பலித்தது. நான் வாங்கின பிரம்மாண்டமான பத்திரிகைத் தொகுதிகளைப் பார்க்கும் போதெல்லாம் அவளுக்கு எரிச்சல் எரிச்சலாக வந்தது. மெழுகும் பொழுதெல்லாம் அந்தப் புத்தகங்களை அப்புறப்படுத்தும் தொல்லையை அவள் அல்லவா அறிவாள்! ''இந்தப் புத்தகங்களை எப்போது படிக்கப் போகிறீர்கள்?'' என்று சிரித்துக்கொண்டே அவள் கேட்பாள். ''அதற்குச் சமயம் வரும்'' என்று நான் தீர்க்க தரிசனத்தோடு சொல்பவனைப் போன்ற தோரணையில் பதில் அளிப்பேன்.

காகிதப் பஞ்சம் வந்தது. வழக்கம்போல் எங்கள் வீட்டுக்குப் பழம் பத்திரிகை வாங்கிக்கொண்டு போகும் பேப்பர்க்காரன் ஒரு நாள் வந்தான். அவன் கண்ணில் அந்தப் பத்திரிகைத் தொகுதிகள் பட்டன. கொஞ்சம் கொஞ்சமாக அவன் என் மனசைக் கலைத்து, விற்றுவிடலாமென்று எண்ணும்படி செய்துவிட்டான். கையில் பன்னிரண்டு ரூபாயைக் கொண்டு வந்து கொடுத்துவிட்டுத் தராசுக்குக்கூட வேலை வைக்காமல் கொண்டு போய்விட்டான். ஆறு ரூபாய் லாபம். என் மனைவிக்குத் தான் அதிக சந்தோஷம். 'பெரிய குப்பை ஒழிந்தது' என்று அவள் குதூகலித்தாள்.

—'ஒரு சாண் வயிறு', கலைமகள் வெளியீடு.



ஆசிரியரும் மாணாக்கரும்

அமர்ந்த வரிசையில்: இடமிருந்து வலம் மூன்றாவதாக அமர்ந்திருப்பவர், தமிழ்த் தாத்தா டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள்.
நின்ற வரிசையில்: இடமிருந்து வலம் இரண்டாவதாக நிற்பவர், மணிவிழாக் காணும் மாணாக்கர் கி. வா. ஜகந்நாதன் அவர்கள்.




காஞ்சி காமகோடிபீட ஆசாரியர்கள் சமுகத்தில்



சிருங்கேரி ஆசாரியர்கள் சமுகத்தில்



தருமபுர ஆதீன மகாசந்நிதானம் அவர்கள், 'செந்தமிழ்ச் செல்வர்' பட்டம் வழங்குகையில்



திருவாவடுதுறை ஆதீன மகாசந்நிதானம் அவர்கள் சமுகத்தில்

## ஷஷ்டியப்த பூர்த்தி வைபவக் காட்சிகள்



மணிவிழாக் குழுத் தலைவருடன்







போட்டோ: என். ராமகிருஷ்ணு.
சங்கர்.



நிற்பவர்கள்: மருமான் ராமசுப்பிரமணியன், தம்பி பாலசுப்பிரமணியன், மூத்த தங்கை மதுகரவேணி, ஒன்றுவிட்ட தம்பி மனைவி சாரதா, புதல்வர்கள் முருகன், குமாரநாதன், சாமிநாதன், இளைய தங்கையின் கணவர் ஸ்ரீனிவாஸன். உட்கார்ந்திருப்பவர்கள்: மருமானின் மனைவி ஜயம், தம்பியின் மனைவி ராஜம், கி. வா. ஜ. தம்பதியர், புதல்வி உமா, மூத்த மகனின் மனைவி சித்திரா, இளைய தங்கை மீனாட்சி. கீழ் வரிசை: தம்பி குழந்தைகள் தேவகுஞ்சரி, ஷண்முகநாதன், சிவகுமார், சங்கர்.



# சமயப் பணி

—கிருபானந்த வாரியார்

உடம்பிலே கோணல் இருப்பதுபோல் உள்ளத்திலும் கோணல் உண்டு. இராமாயணத்தில் பேசப்படுகின்ற கூனி உடம்பிலும் உள்ளத்திலும் கோணல் உடையவள். ''துன்னருங் கொடுமனக் கூனி'' என்கின்றார் கம்பநாடர்.

''கோடிய மனத்தால் வாக்கினால்
செயலால்
கொடியஐம் புலன்களால் அடியேன்
தேடிய பாவம் நரகமுங் கொள்ளா
செய்தவம் புரியினுந் தீரா''

என்று பட்டினத்து சுவாமிகள் உள்ளம் உருகிப் பாடி, நம் கருங்கல் உள்ளத்தையும் உருக்குகின்றார்.

மரத்தின் கோணலை நூல்தட்டி மாற்றுவார்கள். மனத்தின் கோணலையும் நல்ல நூல்களால் மாற்ற வேண்டும்.

நூல்களில் பல பிரிவுகள் உண்டு; இலக்கண நூல், இலக்கிய நூல், அற நூல், இன்ப நூல், நீதி நூல், ஞான நூல் என்று கூறுவர் ஆன்றோர்.

திருக்குறள் நீதி நூல்; மகாபாரதம் இராமாயணம் முதலியன அற நூல்; பெரிய புராணம் அன்பு நூல்; சிந்தாமணி முதலியவை இன்ப நூல்கள்; சித்தியார் முதலிய மெய்கண்ட நூல்கள், பகவத் கீதை முதலியவை ஞான நூல்களாகும்.

இலக்கண இலக்கிய நூல்களைக் காட்டிலும் சமய ஞான நூல்கள் சிறந்தவை. இலக்கண இலக்கியங்கள் அறிவை வளர்க்கும்; சமய ஞான நூல்கள் மெய்யுணர்வை வளர்க்கும்.

நம் நாட்டில் சிலர் இலக்கண நூல்களில் வல்லாராய்த் திகழ்வார்கள்; சிலர் இலக்கிய நூல்களில் வல்லவராய்த் திகழ்வார்கள்; சிலர் சமய நூல்களில் வல்லாராய் விளங்குவார்கள்.

நமது மதிப்புக்கும் வணக்கத்துக்கும் உரிய உயர் திரு கி. வா. ஜகந்நாதையரவர்கள், மேலே கூறிய சகல நூல்களிலும் வல்லுநர். ஆழ்ந்து அகன்று நுணுகிய அறிவு நலம் பெற்றவர். கல்வியின் பயன் கடவுளன்பு ஆகும்.

இவர்கள் கடவுள் பக்தியில் தலைசிறந்தவர். ஆன்ற புலமை, அடக்கம், ஒழுக்கம், சீலம், தவம் முதலிய நற்குணங்கள் அனைத்துக்கும் உறைவிடமானவர்கள்.

''தள்ளரிய பெருநீதி தனியாறு
புகமண்டும்
பள்ளமெனுந் தகையானை''

என்று கம்பநாடர் பாடிய பாடலுக்கு இவர்கள் முற்றும் பொருத்தமானவர்கள். இத்தகு வித்தக ஞானசீலர் வாழும் காலத்தில் நாமும் வாழுகின்றோமே என்று எண்ணி எண்ணி நாம் பெருமிதமும் மகிழ்ச்சியும் அடைய வேண்டும்.

திரு கி. வா. ஜ. அவர்கள் தமிழ்ப் பணிகள் பல செய்வதுடன் சமயப் பணியும் புரிந்து வருகின்றார்கள்.

கோபுரத்தின் உச்சியில் தங்கிக் காட்சி தருவது தங்கக் கலசம். அது போல் பல பணிகளின் சிகரமாக மாட்சி தருவது சமயப் பணி.

சமயப் பணி புரிவோர் விரல் விட்டு எண்ணும்படி ஒரு சிலர்தாம் நாட்டில் இருக்கின்றார்கள். இவருள் முன்னணியில் முதலாவதாக விளங்குபவர் கி. வா. ஜ. அவர்கள். அநேக இரத்தினமணிகள் தன்னிடத்தே ஆழத்தில் இருக்க, அவற்றை வெளிக்குக் காட்டாமல் காட்சி தரும் ஆழ்கடலைப் போல், ஞானரத்தினங்கள் பல தமது திருவுள்ளத்தில் விளங்க, அவற்றை யுடையோம் என்ற எண்ணமே இல்லாமல் அடக்கமாகத் திகழ்பவர் நம் தமிழ் முனிவர்.

இமயமலை போல் இவர்களுடைய சமயப் பணி ஓங்கி நின்று உலகுக்கு உதவுகின்றது. இத்தகு ஞானவித்தகருடைய அரும் பெருங் குணங்களைப் பாராட்டுவது ஒவ்வொரு தமிழ்மகனுடைய கடப்பாடாகும்.

நேரிசை வெண்பா

அமிழ்தமெனத் தித்திக்கும் அரிய பெரிய
தமிழ்முகிலாய்த் தாரணியில் தங்கி—
உமிழ்தருவேள்
வாழிஜகந் நாத மறைமுனிவர்
மண்ணுலகில்
வாழிபல் லாண்டு மகிழ்ந்து. ★



# பொதுத் தோற்றம்

—என். மகாலிங்கம்

கி.வா.ஜ. என்று கூறினலே போதும், தமிழ் அறிந்த உலகம் அறிந்து கொண்டுவிடும். தமிழ் அறிந்த உலகம் என்று நான் சொல்வது இந்தத் தமிழ் நாட்டை மட்டும் அன்று; இன்று தமிழ் அறிந்தவர்கள் இந்த இந்திய நாடு முழுவதும், இலங்கை, மலேசியா, ஆப்பிரிக்கா, ஐரோப்பிய நாடுகளிலும் - ஏன், அமெரிக்க நாட்டிலுங்கூட - இருக்கிறார்கள். அங்கெல்லாம் இவர் நூல்கள் உள்ளன; புகழ் பரவியுள்ளது. கிழக்காசிய நாடுகள் இவரை நேரில் வரவழைத்துப் பெருமைப் படுத்தியும் உள்ளன. ஆகவே கி.வா. ஜகந்நாதன் அவர்கள் இந்த நாடறிந்த நாவலர் மட்டும் அல்ல; இந்த நானிலம் முழுவதும் நன்கு அறிந்த சிறந்த செந்தமிழ்ச் செல்வரும் ஆவர்.

அளவான உயரம், பருமன், தூய கதராடை, கதர்ச் சிப்பா, கறுப்புக் கரையிட்ட கதர் அங்கவஸ்திரம்; நெற்றி நிறைந்த திருநீறு; தலையில் அளவான குடுமி; சிரித்த முகம்; கனிவு நிரம்பிய கண்கள் - இதுதான் திரு ஜகந்நாதன் அவர்களின் எளிய இனிய தோற்றம்.

அவர் பெயருக்குப் பின்னல் எந்தப் பட்டமும் கிடையாது. ஆனல் தமிழ் வித்துவான் தேர்வில் முதலிடமும் ஆயிரம் ரூபாய்ப் பரிசும் பெற்றவர். பி.ஓ.எல்., எம்.ஏ., பட்டங்களும் பெற்றவர். இவை எல்லாம் அவரைப்பற்றிச் சிறிதாவது ஆராய்ந்தவர்களுக்குத்தான் தெரியும். பட்டத்தைப் போட்டுக் கொள்ளாமலே பாரெங்கும் தமிழ் இன்பத்தைப் பரப்பிப் புகழ் பெற்று வருபவர் அவர். பட்டங்களால் பெருமை அடைபவர் உண்டு. அதுபோல் சிலரால் அந்தப் பட்டங்களுக்கே பெருமை ஏற்படுவதும் உண்டு. வித்துவான் என்ற பட்டம் கி.வா.ஜ.போன்ற பெரும் புலவர்களால்தான் இன்னும் மதிப்புடன் விளங்கிக்கொண் டிருக்கிறது.

2

தமிழ் என்றால் என்ன? அதன் மரபு எப்படிப்பட்டது? இந்தியப் பண்பாடு தமிழில் எப்படி விளக்கம் பெற்றிருக்கிறது என்பதை ஒருவர் முறையாக அறிய வேண்டுமென்று சொன்னல், கி.வா.ஜ. அவர்களுடைய 150 நூல்களையும் முறையாகப் படித்தால் போதும் என்று துணிந்து சொல்லலாம். இன்று நல்ல நூல்களாக நூற்றுக்கு மேல் எழுதியவர் குறைவு. இவரும் டாக்டர் மு.வ.வுமே நினைவுக்கு வருகிறார்கள். கி.வா.ஜ. தமிழ்த் துறையில் எழுதாத இலக்கியம் இல்லை, பேசாத நூல் இல்லை. நக்கீரர் பாடிய சங்கப் பாட்டு முதல் நேற்றுத் தோன்றிய நாடோடிப் பாடல் தனிப் பாடல் வரை பல பாடல்கள் அவர் கையால் புது மெருகு பெற்று நூல்களாகவும், மாத வார வெளியீடுகளிலும் மலர்களிலும் வெளியாகியிருக்கின்றன.

தாமரைப் பொய்கை, புது வெள்ளம், குறிஞ்சித் தேன் முதலிய நூல்கள் நமக்கு ஏதோ கதைகளின் தலைப்புக்கள் போல் தோன்றினலும் அவை சங்க நூற் காட்சிகளை நம் கண்முன்பு கொண்டுவந்து காட்டுபவை. 'ஒன்றே ஒன்று', 'பேசாத நாள்', 'திருச்சிற்றம்பலம்' முதலிய சிறு நூல்கள் திருமுறை மலர்களாகச் சைவ இலக்கியச் சுவையை நமக்கு வடித்துத் தருகின்றன. 'புது மெருகு' என்ற நூலில், இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னமேயே தொல்காப்பியம் என்ற பழைய இலக்கணம் முதலாக, சென்ற நூற்றுண்டில் பாடிய தனிப்பாடல் வரை, முக்கியமான தமிழ் இலக்கியப் பகுதிகள் புது மெருகுடன் விளக்கம் பெற்றுள்ளன. மேலும், எத்தனையோ ஸ்தல புராணங்களுக்குக் கலைமகள் பத்திரிகையில் புதிய விளக்கங்கள் வெளியாகியிருக்கின்றன. இலக்கிய மேடைகளிலும் அப்படித்தான். அவர் சொற்சுவையை - கலைத்திறனை

அறியாத இலக்கியமும் இல்லை; இலக்கிய ரசிகரும் இல்லை.

சுருக்கமாக, நமது தமிழ் இலக்கியம் அன்றுமுதல் இன்றுவரை அதன் மாற்றும் தரமும் பண்பும் கெடாமல், மாறுமல், இலக்கியப் பயிற்சியே இல்லாத பாமர ரசிகனுங்கூட (Man in the street) அறிந்து மகிழும் முறையில், மேலும் ஆர்வம் மிகுந்து இலக்கியத்தைக் கற்க முயற்சி செய்யும் முறையில், இலக்கிய நயங்களை வாரி வழங்குவர் கி.வா.ஜ. இவரைப் போலவே இலக்கியத்தை நன்கு கற்றவர் இருக்கிறார்கள். ஆனால் அவர்களில் பலரும் அந்த இலக்கியத்தைத் தாங்கள் கண்ட முறையிலேயே - தங்கள் சொந்த விருப்பு வெறுப்புக்கள் புலனாகும் முறையிலேதான் வெளியிடுகிறார்கள். அத்தகையவர்களிடம் நூலாசிரியருடைய உள்ளத்தை இலக்கிய மரபு பிழையாமல் உள்ளது உள்ளபடியே எவ்வாறு பார்க்க முடியும்? கி.வா.ஜ. போன்றவர்கள் இன்று மிகவும் குறைவு.

உதாரணமாகக் கொடி ஆடுவதைப்பற்றிய ஒரு கற்பனை சிலப்பதிகாரத்திலும் கம்பராமாயணத்திலும் வருகிறது. மதுரையை நோக்கி வந்த கோவலன் கண்ணகி இருவரையும் வாராதே என்பது போல் - 'வாரல் என்பன போல்' - மறித்துக் கை காட்டியதாகக் கொடி ஆடிற்றாம். இது சிலப்பதிகாரம். கம்பராமாயணத்திலோ மிதிலையுள் நுழையும் இராமலட்சுமணர்களை வருக வருக என்று வரவேற்பது போல் கொடி ஆடியதாக வருகிறது. சாதாரணப் புலவரானால் இதனை ஒரு முரண்பாடு என்றோ கம்பன் மாற்றிக் கெடுத்துவிட்டான், அல்லது மாற்றிப் புதுமையைப் புகுத்தியுள்ளான் என்றோ கூறிவிடுவார். கி.வா.ஜ. கூறும் நயம் அவரது ஆழ்ந்த புலமையையும் நல்ல கற்பனை வளத்தையும் காட்டுகிறது. சிலப்பதிகாரத்தில் வருவது, உயர்ந்த கம்பத்தில் உச்சியில் கட்டிப் பறக்கும் உயர்ந்த கொடி. அது பக்கவாட்டில் ஆடித் தடுப்பதுபோல் தோன்றும். கம்பர் கூறும் கொடி, கயிற்றில் இணைத்துத் தோரணம் போல் கட்டியிருக்கும் சின்னக் கொடி. இது கீழ்நோக்கி முன்னும் பின்னும் ஆடி, வா என்று அழைப்பது போல் தோன்றும். ஆகவே இருவர் கற்பனையும் தனிப்பட்டவை.

மேலும், தமிழ் படித்த பெரும் புலவர்களிற் சிலர் சிற்சில இலக்கியங்களை மிகவும் தாழ்வாகக் கருதி அவற்றைப் பயிலவும் மாட்டார்கள். அப்படிப்பட்டவர்களுக்குப் புலமையில் ஒரு பகுதி விட்டுப் போய்விட்டது என்பதுதானே பொருள்? உதாரணமாகச் சங்க காலம் மட்டுமே தமிழ் இலக்கியத்தின் பொற்காலம் என்றும், அதற்குப் பிறகு 19-ஆம் நூற்றாண்டு வரை மக்கள் இலக்கியமாக (Popular Literature) என்ற முறையில் ஒன்றும் தோன்றவில்லை என்றும், குறிப்பாகச் சமய இலக்கியங்களால் எந்த நன்மையும் இல்லை என்றும் கூறுவோர் உண்டு. இன்னும் சிலர், இடைக் காலத்தில் தேவார பிரபந்த காலம் உட்பட மூடநம்பிக்கைகள் மிகுந்து இலக்கியத்தின் தரமே போய்விட்டது என்று கூறுவதும் உண்டு. இவர்கள் கருத்தை மட்டும் படித்தால் தமிழ் இலக்கியத்தின் வளர்ச்சியை உள்ளவாறு உணர்வது எப்படி? எல்லாருமே தமிழை ஆழ்ந்து பயில முடியுமா? முதலாவதாக, முறையாக இலக்கியப் பண்பை உணராமல், உணரவும் விரும்பாமல் விமரிசனம் செய்யப் புகுவது முறையாகுமா? உண்மையைத்தான் கண்டுபிடிக்க முடியுமா?

முதலில் இலக்கியத்தைத் திறன் அறிந்து பாராட்ட (Critical appreciation)க் கற்றுக்கொள்ள வேண்டும். முன்னோர் மொழிபொருளை அவர்களுடைய உள்ளம் இன்னது என்று உணர முயலும் முறையில் ஆராய வேண்டும். அப்போதுதான் நமது இலக்கியத்தின் வரலாற்று வழிப்பட்ட மரபைப் புரிந்து கொள்ள முடியும். இந்த அஸ்திவாரத்தின் மீதுதான் விமரிசனம் (Criticism) என்ற அழகு மாளிகை எழும்ப முடியும். அந்தத் தொண்டை இன்று திறம்படச் செய்துவருபவர் திரு கி.வா.ஜ. அவர்கள்.

திரு கி.வா.ஜ. எந்த இலக்கியத்தையுமே குறைகூறும் பாணியில் பேசியதையோ எழுதியதையோ நான் அறியேன். குறைகூறுவதென்று கருத்தைத் தேர்ந்தெடுப்பதும் இல்லை அவர். இந்தக் குணம் அவருடைய குருநாதரிடம் அவர் பெற்ற பயிற்சியாகும். நூற்றுக்கணக்கான ஏட்டுச் சுவடிகளை ஆண்டுகள் கணக்கில் எழுத்தெழுத்தாக எண்ணி எடுத்து எழுதி ஆராய்ந்த ஐயரவர்கள் ஒரு சொற்றொடர் தமக்குப் பிழை என்று தெரிந்தாலும் அதனைப் பிழை என்று தாம் கூறுமல் பிரதிபேதம் என்று கீழே போட்டு விடுவார். அவருடைய ஞான வாரிசு ஆகிய கி.வா.ஜ. அவர்களும் அப்படியே. எழுத்தெண்ணிப் படித்தல் என்று கூறுகிறோமே, அது சாமிநாதையரவர்களுக்கும் கி.வா.ஜ.வுக்குமே பொருந்தும். பெரும்பாலான இலக்கியங்கள் இவ்விருவருக்கும் மனப்பாடம். பல நூல்களின் பதிப்புக்களில் ஐயரவர்கள் மறக்காமல் இவரைச் சிரஞ்சீவி என்று குறிப்பிட்டுப் பாராட்டத் தவறவே மாட்டார்கள். இருவருக்கு

முள்ள தொடர்பு ராமகிருஷ்ண பரம ஹம்சருக்கும் விவேகானந்தருக்கு மிடையே உள்ள தொடர்பைப் போன் றது. இதன் விளைவாக, சென்னைப் பல்கலைக் கழகம் வெளியிட்டுள்ள 'தமிழ்க் காப்பியங்கள்' என்ற நூல் இன்று அவரது காவியங்கள் பற்றிய திறனுக்குச் சான்றாக நிற்கிறது. இது கி. வா. ஜ. அங்கே ஆராய்ச்சி மாணவராக (Research student) இருந்து எழுதியது. சமீபத்தில் கி. வா. ஜ. அவர்கள் பதிப்பித்துள்ள 'திருக்குறள்' ஆராய்ச்சிப் பதிப்பு மற்றொன்று. கூர்ந்து கவனித்தாலொழிய இந்நூலை இவரது குருநாதர் பதிப் பென்றே கருதத் தோன்றும். ஆராய்ச் சிப் பதிப்பு என்றால் அதில் சொல் அக ராதி (Index) அவசியம். சாமிநாதைய ரவர்கள் பதிப்புக்களில் சொல் அகராதி யோடு அருஞ்சொற்களுக்குப் பொருளும் காணப்படும். ஒரு நூலை எடுத்தால், 'அதில் குறிப்பிட்ட ஒரு பொருள் இருக் கிறதா? இல்லையா? அது எந்த எந்தப் பொருளில் எத்தனை இடங்களில் வந்தி ருக்கிறது?' என்று, இந்தச் சொல் அக ராதியைப் பார்த்துச் சொல்லிவிடலாம். இதற்கு உழைப்பு மிகவும் அவசியம். இதனை இன்னும் தமிழகத்துப் பதிப்பகத் தார் சரிவரப் பின்பற்றவில்லை என்றே சொல்ல வேண்டியிருக்கிறது. கி.வா.ஜ. பிறவியிலேயே ஓர் உழைப்பாளி; உழைத் துப் பயிற்சி பெற்றவர் தம் குருநாத ரிடம்.

## 3

கி. வா. ஜ. பெரும் புலவர் மட்டு மல்ல, பெருமைக்கு உரிய பக்தரும் ஆவார். இளமை முதலே முருகனுடைய கருணையால் ஈர்க்கப்பட்டவர். முருக னுடைய பணிக்காகவே வாழ்ந்து வருகிற வர் என்று சொல்லலாம். அவர் செய் யும் சமய இலக்கியப் பிரசாரம் - அது எந்தத் தெய்வமாக இருந்தாலும் - அது முருகனுடைய பணியாகவே முடியும். தமிழில் முருகனுடைய இலக்கியங்களை 'எழுத்தெண்ணி'ப் (Index) படித்த வர். அருணகிரிநாதர் இலக்கியங்களில் இணையற்ற ஈடுபாடும் அசைக்க முடியாத ஆழ்ந்த புலமையும் இவருக்கு இருக்கின் றன. இன்று திருப்புகழைப் பாடிச் சம யப்பணி புரிந்து வரும் திருப்புகழ் அமிர் தம் திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள்கூடக் கி. வா. ஜ.வின் புல மையை மிகவும் பாராட்டிப் பேசுவார். கி.வா.ஜ. பேச்சைக் கேட்கும் சந்தர்ப் பம் கிடைத்தால் நழுவவிடமாட்டேன் என்று கூறிப் பெருமைப்படுத்துவார். பாமர மக்களுக்கு அடியோடு புரியாத திருமுருகாற்றுப்படையை 'வழிகாட்டி' என்னும் பெயரால் நூல் எழுதியும் பேசி யும் புரியவைத்துக் காட்டியுள்ளார். 'திருமுருகாற்றுப்படை அரசு' என்ற பட்டமும் பெற்றுள்ளார். முருகனைப் பற்றி ஆராய்வோர் இவரிடம் பாடம் கேட்க வேண்டும். முருகன் தமிழ்த் தெய்வம் என்பதைக் கி.வா.ஜ. அம் முரு கன்பால் பெற்றுள்ள செந்தமிழ்ச் செல் வத்தைக் கொண்டு நிதரிசனமாக உணர லாம். 'முத்தமிழால் வைதாரையும் வாழ வைப்போன் முருகன்'. இன்று இதனைக் கண்கூடாகக் காண்கிறோம். பக்தி பூண்டு பெருமை பேசுவோருக்கு ஏன் தமிழ்ச் செல்வத்தை வாரி வழங்கமாட்டான்?

இன்னும் சிலருக்குத் தமிழ் இலக்கி யம், தமிழ்ப் புலமை, தமிழ்ப் பண்பாடு என்றவுடனேயே இந்திய நாடும், நாம் இந்தியாவின் ஒரு பகுதியினர் என்பதும் எல்லாம் மறந்துவிடும். இந்தியப் பண் பாடும் தமிழ்ப் பண்பாடும் வேறல்ல. தமிழ்ச் சான்றோர் தமிழ் மூலமாகவும், வடமொழி கற்று அதன் மூலமாகவும் அந்தப் பண்பாட்டை வளப்படுத்தியிருக் கிறார்கள். இந்திய வரலாறோ பண் பாடோ அறியாத ஒருவன் தமிழ் இலக் கியத்தினை எப்படிச் சரியாக மதிப்பிட முடியும்? நான் சொல்வதையே மறுப் போரும் உண்டு. வடமொழி இலக்கியம் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாகத் தமிழு டன் தொடர்பு கொண்டிருக்கிறது. வேத காலம் முதல் இத் தொடர்பு உண்டு என்பதற்கு மறைமலையடிகள் ஆராய்ச்சி யுங்கூட ஒரு சான்று. கி.வா.ஜ. அவர்கள் வடமொழி இலக்கியங்களும் அறிந்தவர்; இந்தியப் பண்பாட்டில் ஊறியவர். இளமையிலேயே ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடாதிபதிகள் ஆற்றிய வேத உபநிடத உபந்நியாசங்களைப் பட்டோலை பிடித்து எழுதி நூலாக வெளியிட்டார்.

## 4

கி.வா.ஜ. இந்த இந்திய மண்ணில் ஏறாத மேடை இல்லை; 'பேசாத பேச்சு' இல்லை; பங்கு பெறாத, தலைமை தாங் காத பட்டிமண்டபங்கள் இல்லை. அவர் பேசுகிறார் என்றால் பேச்சு மட்டுமா? பேச்சு மேடையும் கேட்கும் சபையுமே கூடப் 'புது மெருகு' பெற்றுவிடும். 'புது வெள்ள'மாகப் பெருக்கெடுத்துச் சபை யைத் 'தாமரைப் பொய்கை'யாக்கிக் கேட்பவர் காதுகளில் 'குறிஞ்சித் தேனை'ப் பாய்ச்சிவிடுவார். ஆகவே ஸ்ரீகாஞ்சி பெரியவர்கள் அவருக்கு 'வாகீச கலா நிதி' என்று பட்டம் வழங்கி வாழ்த்தி யிருப்பது மிகவும் பெருமைப்படத்தக்க விஷயமாகும். மேலும், 'திருநெறித் தவ

'மணி', 'உபந்நியாச சக்கரவர்த்தி' என்ற பட்டங்களும் அவரைத் தேடி வந்தடைந் திருப்பதில் வியப்பில்லை.

5

கி.வா.ஜ. அவர்களின் பெருமை பிறர் பாடிய இலக்கியங்களுக்குப் 'புது மெருகு' தருவதோடு நின்றுவிடுவதில்லை. அவரே ஓர் இலக்கிய கர்த்தா. இன்றை இலக்கியம் பெரும்பாலும் கதைகளிலும், நயமான கட்டுரைகளிலும் நாடகங்களிலுந் தான் இருக்கிறது. வசன நடை இன்றை இலக்கியத்திற்கு முக்கியமான கருவி. கி.வா.ஜ.வின் கதைகளில் இருபதாம் நூற்றுண்டில் உலவும் பலவேறு வகைப் பட்ட மக்களையும் அவர்தம் 'மனப்போக் கையும் பார்க்கலாம். பல ஆண்டுகளுக்கு முன் வெளியான 'கலைஞன் தியாகம்' என்ற கதைத் திரட்டில் 'அவள்' என்று ஒரு கதை. பிச்சைக்காரிக்கும் கற்பு உண்டு என்ற உண்மையை, அவள் தன் கற்பைக் காக்கக் குருடனுடனும் முடவனுடனும் மனைவிபோல் நடித்த அருமை யைத் தத்ரூபமாக வரைந்திருக்கிருர். சென்ற ஆண்டுக் கலைமகள் தீபாவளி மலரில் காக்கையைப் பற்றிய ஒரு கற்பனைக் கதை சுவை தருகிறது. பலரும் வெறுக் கும் மூன்று அண்டங்காக்கைகள் நாரதர் அறிவுரைப்படி சூரியனையும் சிவபிரானை யும் பிரமனையும் நோக்கித் தவம்செய்தன. சூரியனிடம் சென்ற காக்கை, சனி பகவா னுக்கு வாகனம் ஆகும் வரத்தைப் பெற்று உயர்ந்தது. சிவபிரானிடம் சென்ற காக்கை, கழுத்தில் வெண்மை நிறத்தைப் பெற்று வந்தது. பிரமனிடம் சென்ற காக்கையோ, கலைமகளின் கருணையால் குயிலாகவே மாறிவிட்டது. காகா என்று கடூரமாகக் கத்தியது போய், கூ கூ என்று இனிமையாகப் பாடவே ஆரம்பித்துவிட் டது. இதுதான் குயில் தோன்றிய கதை. இன்றும் காக்கைதானே குயிலின் முட் டையை அடைகாக்கிறது?

ஒரு தனிப்பாட்டானுலும் அதனைக் கதையாக மாற்றி விளக்கும் திறமைக்கு இவருக்கு நிகர் யாரும் இல்லை. கொங்கு நாட்டில் எங்கள் ஊருக்கு அருகேயுள்ள சமுத்தூரில் இருந்தாண்ட வாணராயர் ஒருவர். பெயர் பவளகுல வாணராயர். தம்மை நாடி வரும் புலவர்கள் எந்தக் காரணத்தைக் கொண்டும் தம்மைக் காண முடியாமல் ஏமாற்றத்துடன் திரும்பி விடக்கூடாது என்று, தம் மாளிகை வாயி லிலேயே ஏடும் எழுத்தாணியும் தயாராக வாயிற்காவலர் வைத்திருக்கும்படி ஏற் பாடு செய்திருந்தாராம். புலவரை வற் புறுத்தித் தம் தேவையை ஏட்டில் எழு தும்படி செய்து, அதனை முதலில் தந்து விட்டுத்தான் பிறகு புலவருடன் நேரில் அளவளாவுவாராம். தமிழகத்திலேயே இம்முறை புதியதாகத் தெரிகிறது. இந்தத் தனிப்பாட்டை இவர் அழகான கதையாக் கித் தந்திருக்கிருர்.

'பயப்படாதீர்கள்' என்ற இவருடைய மற்ருெரு நூலைக் கதை படிப்பதுபோல் படித்து முடித்துவிடலாம். அதில் நாம் அறிந்துகொள்வதோ தொல்காப்பியம் என்னும் இலக்கணத்தின் எழுத்ததி காரம்! இலக்கணம் என்ருல் பயப்படத் தேவையில்லை என்று நிரூபித்துள்ளார்.

கி.வா.ஜ. அவர்கள் சிறந்த கவிஞருங் கூட. கீர்த்தனங்களும் கவிதைகளும் நிறைய எழுதியுள்ளார். புனைபெய ருடன் கலைமகளில் அவற்றை வெளியிடு வார். 'கலைமகள்' பத்திரிகைக்கு ஆசிரிய ராக இருந்துகொண்டு அவர் செய்து வரும் பணி மதிப்பிடுவதற்கு அரிய தாகும். புகழ்வாய்ந்த பல எழுத்தா ளர்கள் அவரால் இன்று முன்னணிக்கு வந்திருக்கிருர்கள். உதாரணமாக, நாவ லாசிரியர் அகிலனைத் தமிழுலகிற்கு அறி முகப்படுத்தியவர் இவரே என்று நினைக் கிறேன். சிறுகதை என்ற இலக்கிய வகை தமிழில் வளமடைந்து மற்ற மொழி களோடு போட்டியிடக் கூடிய நிலையில் முன்னேறியிருக்கிறதென்ருல் அதில் முக்கியமான பங்கு திரு கி.வா.ஜ. அவர் களுக்கு உண்டு. சுருக்கமாகச் சொன் ஞல் திரு வாரியார் சுவாமிகள் சொல் வதுபோல், ''நமக்கெல்லாம் கலைமகள் ஆசிரியர். கி.வா.ஜ. அவர்களோ 'கலை மகளு'க்கே ஆசிரியர்.'' தமிழ்நாட்டில் இன்று சிலர் தமிழ் மகளை விலைமக ளாக்கி மாசுபடுத்திக் காசு பறிக்கும் கொடுமையைப் பார்க்கும்போது, தரத் தைக் கெடுக்காமல் இலக்கிய எழி லுடன் கலைமகளைப் போற்றிக் காக்கும் கி.வா.ஜ.வுக்குத் தமிழுலகம் கடமைப் பட்டிருக்கிறது.

அவருடைய திருமுறை மலர்கள் போன்ற நூல்கள் சாதாரண மக்களைத் தூண்டுவன என்ருலும், அவற்றின் முன் னுரைகள் தமிழ் மாணவர்க்கு வழி காட்டிகளாக விளங்குகின்றன.

6

ஆகவே கி.வா.ஜ. அவர்கள் முருகன் அருளை அடைவதற்கு மட்டும் வழி காட்டி அல்ல. நமது பழந்தமிழ் இலக் கியத்திற்கும், வளர்ந்து வரும் இலக்கி யப் புதுமைக்கும், ஏன்? வளர்ந்துவரும் இந்திய எழுத்தாளரின் சிந்தனைக்குமே ஒரு வழிகாட்டி என்ருல் அது மிகையா

காது. சுருக்கமாக, நான் தொடக்கத்தில் சொன்னபடி, கி.வா.ஜ. நூல்களை முறையாக ஒரு முறை படித்துவிட்டால் தமிழ் இலக்கியத்தையோ, நமது பாரம் பரியத்தையோ ஒரு தடவை பார்த்து விட்டது போன்ற ஓர் உணர்ச்சி ஏற் பட்டுவிடும்.

சிறந்த தமிழ்ப் புலவர், தமிழின் பல வகைப்பட்ட துறைகளையும் காலவேறுபாடு இட வேறுபாடு இன வேறுபாடு கருத்து வேறுபாடு இல்லாமல் முற்றும் கற்றவர், சிறந்த பேச்சாளர், சமய போதகர், வாதத்திறமை மிகுந்தவர், தீர்ப்புக் கூறும் திறன் மிக்கவர், அதே நேரத்தில் புதுமை பொங்கும் கதாசிரியர், எழுத்தாளர்க்கும் தமிழ் மாணவர்க்கும் வழிகாட்டி, அனைத்துக்கும் மேலாக ஆராய்ச்சியில் சாதனையைப் பெற்றவர் - இவை எல் லாம் அமைந்த ஒரே மனிதர் திரு கி.வா.ஜ அவர்கள். மேற்குறிப்பிட்ட ஒவ் வொரு துறையிலும் இவரைப் போலவே வல்லவரும் மிஞ்சியவரும் இருக்கலாம். என்றாலும் இத்தனையும் ஒருசேர அமைந்த இவரைப் போன்றவரைத் தேடித்தான் கண்டுபிடிக்க வேண்டும். இவரைப் பார்க்காமல் இவரது கதை கட்டுரை மட்டும் படித்தவர் இவரை நேரில் பார்த்தால் பிரமித்துப் போவார். பழமைக் கோலத்தில் இவரைக் கற்பனை செய்து பார்த்திருக்கமாட்டார். அதாவது இவரது வடிவம் பழையது, வார்த்தைகள் புதியவை; உள்ளம் பழையது, உணர்ச்சி புதியது.

மாணிக்கவாசக சுவாமிகள் கடவுளை 'முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருளே பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப்பெற்றியனே' என்று கூறுவது போலவே இவரும் பழமைக்குப் பழமையையும் புதுமைக்குப் புதுமை யையும் உடையவராக இருக்கிறார் என்று எனக்குத் தோன்றுகிறது. இவரது தமிழ்த் தொண்டு, ஒரு தந்தை தன் மகனுக்கு ஆதிமுதல் தன் முன்னோர் சேர்த்து வைத்த செல்வத்தையெல்லாம் திரட் டித் தந்து, வருங்காலத்தில் மகன் வள மாக வாழ்வதற்குத் தான் சுயமாகச் சம்பாதித்த சொத்தையும் சேர்த்துக் கொடுப்பது போன்றதாகும். டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள் தமிழ்த் தாத்தா என்றால், இவர் இன்றைய இளைய இலக்கிய மாணவர்க்குத் தமிழ்த் தந்தை யாவார். 'செந்தமிழ்ச் செல்வர்' ஆக விளங்கும் இவரை இன்றைத் தமி ழகம் போற்றிப் பாராட்டிப் பின்பற்றக் கடமைப்பட்டிருக்கிறது. இவரைப் பாராட்டுவதில் பெருமகிழ்ச்சி கொள் கிறேன். பெருமை அடைகிறேன். வணக்கம். ★

## படகிலும் பாடல்

20-7-'63 அன்று நானும் சீனிவாசன் அவர்களும், கி. வா. ஜ. அவர்களுடன், விசைப்படகில் ராமேசுவரத்திலிருந்து தனுஷ்கோடி சென்றுகொண் டிருந்தோம். அப்பொழுது, ''ஐயா, சில புலவர்கள் மிக விரைவில் கவி பாடுகிறார் களே, அது அவர்களுக்கு எவ்வாறு முடிகிறது? சிரமமாக இராதா?'' என்று கேட்டேன். உடனே கி. வா. ஜ. அவர்கள், ''கவி பாடுவது என்ன சிரமம்? மிக எளிதில் எழுதலாமே'' என்றார். உடனே அவர் சொல்ல நான் எழுதினேன். இதோ, அந்தப் பாடல்களில் சில—

பல்லுக்கும் வில்லுக்கும் சிலேடை

கோதண்ட மென்றதனை நீக்குதற்குக் கோலுறலால்
தீதண்டா வீரம் சிறத்தலால்—மாதண்டும்
பாகத்தான் தாள்போற்றும் சீனிவாசப் பேர்கொள்
மாகத்தா பல்வில் மதி.

காகிதம் இல்லையென்று பாடியது

காயிதந்தான் இன்னும் கனக்க இருந்தக்கால்
மாயிதஞ்சேர் பாடல் மலிந்துவரும்—தூயவனென்
சொந்தப் பிரான்முருகன் தொண்டர்தம துள்ளிருக்கும்
கந்தனடி போற்றியக் கால்.

—சோம. நாராயணன், தேவகோட்டை.



# சிறுகதைகள்

—கி. சந்திரசேகரன்

சிறு கதைகளின் தரத்தைத் தராசில் எடைபோட்டு மதிப்பிடும் காலம் இது. திறனாய்தலைச் சரிவர அநுசரிக்கக் கூடிய அளவு நிதானமும் நியாயத் தீர்ப்புக்களும் இன்னும் ஏற்படவில்லை என்றாலும், திறனாய்தல் என்பதை மேற்கொள்ளும் முயற்சி எழுத்துலகில் நடமாடத் தொடங்கிவிட்டது. சிலர் இதை வரவேற்கின்றனர். வேறு சிலர் எழுத்துலகில் இதற்கு வேண்டிய அளவு சூழ்நிலை போதாது என்பதனால் இதை முழு மனத்துடன் இன்னும் அங்கீகரிக்கவில்லை. இருப்பினும், தமிழ் இலக்கியம் இன்று வளர்ச்சி பெற்று வருகிறது என்பதற்கு முக்கிய அறிகுறியாக உள்ளவை சிறுகதைகளே. எழுத்து வன்மையுடன் பலதரப்பட்ட வகையில் கதைகள் உற்பத்தியாகி வருவதை நேரில் காணும் பொழுது அவற்றின் தராதரத்தைப்பற்றியும் வாசகர்கள் மதிப்பீடு செய்யத் துணிவார்கள் அல்லவா? ஒன்றுதான் வாசகர்கள் எல்லோரும் ஒரே விதத்தில் செய்ய இயலாதது. 'எனக்குப் பிடித்த கதை, எனக்குப் பிடிக்காதது; அல்லது, கதை சுவாரஸ்யம் உள்ளது; இன்னுங் கூடக் கற்பனையின் சிறப்பு மேலே போகலாம்.' இம்மாதிரி பொதுப்படையாகக் கூற அதிக இலக்கிய அநுபவம் வேண்டியதில்லை. ஆனால் ஒரு கதையைச் சுவைப்படுடன் அதன் கருத்து, எழுத்து நடை, அதன் கலையம்சம், அதன் நோக்கம் முதலியவற்றை ஆராய்ந்து, எழுதியவரைப் பற்றிய சொந்த விருப்பு வெறுப்புக்களை ஒதுக்கித் தூய்மையுடன் நியாயம் சொல்வதென்பது சுலபமல்ல. திறனாய்பவரின் சொந்தத் திறமையுடன் நேர்மையும் இதற்கு அவசியமாகிறது. மற்றத் துறைகளில் உள்ளது போல்தான் இலக்கியத்திலும். மனம் உயர்ந்த நிலையில் இருப்பவன் வாழ்க்கையை நடத்துவதற்கும், கீழ்ப்பட்ட மனிதன் உலகில் நடந்து கொள்வதற்கும் உள்ள வித்தியாசம், சிறந்த நோக்குடன் திறனாய்பவனுக்கும், பட்சபாதங்களில் சிக்கியவனுக்கும் இருக்கும் என்பதில் ஐயமில்லை. நீதி ஸ்தலத்தில் அமர்ந்து நியாயம் கூறும் நீதிபதியின் உள்ளம் அடையும் அறநெறி, மனச்சாட்சி என்ற இரண்டும், எந்தத் துறையிலும் நியாயம் கூறுபவனுக்கு அவசியம் என்பதை அநுபவம் உணர்த்தும் அல்லவா?

முக்கியமாக, இலக்கிய மதிப்பீட்டுக்கு இன்றியமையாதது, மதிப்பிடும் எந்தக் கதையையும் முதலில் வாசிக்க வேண்டும். ஓர் எழுத்தாளனையோ அவனுடைய சிருஷ்டிகளையோ ஆராயுமுன் அவனுடைய எல்லாச் சிருஷ்டிகளையும் நன்கு பார்வையிட வேண்டும். முழுவதும் பார்வையிடாமலோ, அல்லது பிறர் கூறும் உயர்வு தாழ்வுகளைத் தம்முடைய சொந்தக் கருத்துக்களாகக் கருதும்படி ஏமாற்றாமலோ, தான் நடுநிலையில் நின்று தீர்ப்பைக் கூற முன்வர வேண்டும். எழுதியவரைப் பற்றிய அவசியமில்லாத புகார்களோ வெறுப்புக்களோ நம் செவியில் சதா விழுந்தாலும் நாம் தொடர வேண்டிய பாதை, அந்தக்கரண சுத்தமாய் நம் மனத்தில் பட்டவைகளைப் பிறருக்குப் புண்படாத அளவில் எடுத்துரைப்பதே. நம்மிடம் மனவெழுச்சி அதிகமாக ஏற்பட்டாலும், அதனைக் காலம் கடந்தபின் மறுபடியும் ஆராய்ந்து அவசியமற்ற வேகத்தைக் குறைத்து, எந்த மனிதனும் ஏற்கக் கூடிய விதத்தில் கருத்தைச் சொல்லில் உருவாக்க வேண்டும். இவ்வளவையும் தாண்டி, 'நாம் தீர்ப்புச் சொல்வதற்கு ஏற்ற அதிகாரிதானா?' என்று திறனாய்பவன் தானே தன்னைச் சோதித்துக்கொள்ள வேண்டும். அதிகாரி என்ற பதம் இவ்விடத்தில் ஸம்ஸ்கிருத மொழியின் கருத்துடன் கூடியது. அதாவது, 'தகுதி வாய்ந்தவன்' என்ற பொருளில் வழங்கப்பட்டுள்ளது.

'திறனாய்வுக்கு ஏற்ற சிறுகதை எழுத்தாளன் இன்று இருக்கிறானா? திறனாய்வுக்கு ஏற்ற சிருஷ்டி தமிழில் இன்று உள்ளனவா?' என்று வினவுகிறவர்களுக்குச் சிறுகதைகள் புனைவதில் மற்றவர்களைவிட

நிச்சயம் எந்த விதத்திலும் தகுதி குறையாதவர் என்று உணர்த்தக் கூடிய வர் கி. வா. ஜகந்நாதன். அவருடைய கதைத் தொகுப்புக்கள் பத்துக்கு மேல் உள்ளன. மூன்று தலைமுறை என்ற நெடுங் கதையையும் சேர்த்தால், பதினொன்று என்று கணக்கிடலாம். எண்ணிக்கை மட்டும் அதிகம் என்பதனுல் அவருடைய திறனை நாம் பாராட்ட முற்படக்கூடாது. அவருடைய சிருஷ்டிக் கலையின் உத்தி களைக் கூர்ந்து பார்வையிட்ட பிறகுதான் அவருக்கு உள்ள தகுதியை ஏற்க வேண் டும். ஒவ்வொரு தொகுதியாக எடுத்துக் கொண்டு ஆராய்வது மேல் என்பதில் கருத்து வேற்றுமை இருக்காது. இருப் பினும் இந்தக் கட்டுரையை வாசிப்பவர் களுக்கு அட்டவணை மாதிரி தோன்று திருப்பதற்காகக் குறிப்பாகச் சிலவற்றை மட்டும் எடுத்துக் காட்டுவது ஒன்றே சாத்தியம். வரிசையாய் அவருடைய தொகுதிகளைக் குறிப்பதாயின் கலைஞன் தியாகம், அறுந்த தந்தி, பவழமல்லிகை, நீலமணி, கலைச் செல்வி, வளைச்செட்டி, அசையா விளக்கு, குமரியின் மூக் குத்தி, பூக்காரி முதலியவை ஆகின்றன. இவற்றுள் 'கலைஞன் தியாக'மும் 'பவழ மல்லிகை'யும் தமிழ் வளர்ச்சிக் கழகம் வழங்கும் பரிசுகளைப் பெற்றவை. இரண்டு தடவை ஒரு சிறு கதை எழுத்தாளர் தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் பரிசைச் சிறுகதைத் துறையில் பெற்றிருப்பதும் இதுவரையில் வேறு ஒருவருக்கும் கிட்ட வில்லை.

தமிழ் வளர்ச்சிக் கழகம் தந்த தீர்ப்பினுல் நாமும் புகழ வேண்டிய நிர்ப்பந்தம் எதுவும் இல்லை. சுயமாகவே நாமும் இவற்றை மதிப்பிடத் துணிய லாம். கி.வா.ஜ. வின் எழுத்துவளர்ச்சி கட்டுரைகள் வியாசங்கள் கொண்ட மற்றத் தொகுதிகளைவிடச் சிறு கதைகளில் முனையும்பொழுது மெருகு ஏறியதோ என்றே தோன்றவைக்கும் அளவு, அவருக்குச் சிறுகதைகளை உரு வாக்குவதில் தனி ஆர்வம் இருந்திருக்க வேண்டும். இல்லாவிட்டால், கலைஞன் தியாகத்தின் முகவுரையில், தாமே பின் வரும் வரிகளை எழுத முனைந்திருப்பாரா?

''கலைமகள் தொடர்பு வாய்த்தபிறகு சிறுகதை எழுத வேண்டும் என்ற எனது அவா நிறைவேறத் தொடங்கியது. அதன் விளைவே இந்தப் புத்தகம்'' என்று 1941-ஆம் ஆண்டில் அவர் தெரிவித்திருக் கிருர். உண்மையில், 'கலைஞன் தியாகம்' நல்ல அழகான கதைகள் கொண்ட தொகுதி என்பதில் சந்தேகமில்லை.

தமிழ் என்றுமே கி.வா.ஜ.வின் வசப் பட்டது. அவருடைய சம்பாஷணைத் தொடர்கள் வேண்டுமானுலும் பாமர மக் களின் கொச்சை மொழிகளை அதிகம் உப யோகப்படுத்தி, பாமர மக்களின் வாழ்க் கையைச் சித்திரிக்கையில் அதற்கு அநு குணமாய் உருவாகாமலிருக்கலாம். சுவை குன்றுமல் மட்டும் சம்பாஷணைகள் நெடுக ஓடுகின்றன. தடங்கல்களோ பொருத்த மின்மையோ அவற்றில் தலைநீட்டுவதில்லை. எங்கும் ஏழைகளின் எளிமையுடன் நேர் மையையும் ஞாபகப்படுத்தாமல் கி.வா.ஜ. இருப்பதில்லை. ஒவ்வொரு சமயம், பொருள் படைத்தவர்களை அவசியத்துக்கு மேல் இகழும் விதம் சந்தர்ப்பங்களையும் அமைக்கச் சங்கோசம் காட்டமாட்டாரே ஒழிய, வறுமையில் வாடுகிறவர்களின் நெறிதவருத இயல்பையும், பிறரிடம் மரி யாதையுடன் நடந்துகொள்ளும் நல்ல எண்ணத்தையும் நினைவுமூட்டாமல் செல் வதில்லை. கவனித்தால், கீழ்ப்பட்ட சமூ கத்தினிடம் அவருக்கு அநுதாபம் சாமா னியமல்ல என்பது தெளிவாகிறது.

'மிட்டாய்க்காரன்', இந்தத் தொகுப்பில் என்றும் நினைவில் இருக் கக்கூடிய சிறுகதை. வீட்டில் தன் குழந்தைக்கே, அது வேண்டி வேண்டிக் கேட்கும் மிட்டாயைத் தர இணங்காத மிட்டாய்க்காரன், தெருவில் ஒரு காரின் மோதலுக்குப் பயந்து நகர்ந்த வேகத்தில் சாக்கடையில் மிட்டாய்த் தட் டுடன் அவ்வளவு மிட்டாயையும் இழக்க நேர்ந்த சம்பவம் இதில் புனையப்பட் டுள்ளது.

குழந்தை ஆவலுடன் மிட்டாய்த் தட்டை நெருங்கி, ஒரு மிட்டாயையும் கையில் எடுத்து ருசி பார்க்கையில்தான், அவனும் அதன் கன்னத்தில் ஓங்கி ஓர் அறை அறைகிருன். குழந்தை கீழே சுருண்டு விழுந்து அழ, அதன் தாய் அங் கலாய்க்காமல் இருப்பாளா? ''கொழந்தை யைக் கொன்னுட்டானே!'' என்று அலறு கிருள். பச்சாத்தாபம் அவனுடைய இரு தயத்தை அழுத்துகிறது. 'ஐயோ! அந் தச் சிறு குழந்தையிடம் அன்பு காட்டா மல் ஆயிரம் குழந்தைகளுக்கு மிட்டாய் தருகிறேமே!' என்ற எண்ணம் கொஞ் சங் கொஞ்சமாய் வளருகிறது. அப் பொழுது கார் ஒன்று அவனைத் திடுக்கிடச் செய்து, சாக்கடையில் தலையில் தாங்கிய மிட்டாய்த் தட்டு விழும்படி செய்கிறது.

வீட்டில் குழந்தைக்கு என்ன நேர்ந் தது என்ற வேகம் மனத்தை உந்த, அவன் வெறும் தட்டுடன் திரும்புகிருன். அவன் மனைவிக்கு அவன் வெறி அடங்கித் திரும்பி யிருப்பது தெரியவில்லை. அவள் பயப் படுகிருள். சம்பாஷணை தொடர்கிறது. அவனது உள்ளம் நைந்திருப்பதைப் பார்த்ததும், அவளுக்கு அடக்கி வைத் திருந்த எரிச்சல் சுவாலையிடுகிறது. ''நீயும் ஒரு மனிசனுட்டம் பேச வந்துட்

டையே!'' என்று ஆரம்பித்தவள், ''சாமி உனக்குக் கூலி கொடுக்காமல் போவாது'' என்று முடிக்கிறாள்.

சாமி தன்னைத் தண்டித்ததாகவேதான் அவனும் நினைக்கிறான். பிற்பாடு குழந்தையைக் கொஞ்சுகிறான், மிட்டாயை அதன் கையில் கொடுத்து.

இந்தக் கதையிலுள்ள சம்பவங்களும் மனப் போராட்டங்களும் நன்றாக உருவாகியுள்ளன. கி.வா.ஜ.வின் முத்திரை ஓர் அரும் படிப்பினையை ஞாபகப்படுத்தாமல் இருக்க மாட்டார் என்பதே. சிறுகதைக் கலையம்சத்தில் ஒருகால் இவ்விதம் படிப்பினையைத் தோன்ற வைப்பது அதிகத் தரமான அம்சமாகப் படாமல் இருக்கலாம்.

''சிறுகதைகள் எழுதுவதில் உத்ஸாகங் கொண்ட் பெருங்கூட்டத்தில் ஒருவனாக நானும் இருக்க ஆசைப்பட்டேன். சிறந்த சிறுகதைகளை எழுத வேண்டும் என்ற ஆசை இன்னும் என்னை விட்டபாடில்லை. எழுதிக்கொண்டேதான் இருக்கிறேன்'' என்று மற்றொரு முகவுரையில் கி.வா.ஜ. தமது ஆர்வத்தை வெளியிட்டிருக்கிறார். கவனித்தால், 'அறுந்த தந்தி' என்ற கதைத் தொடருக்கு இவ்வித அறிமுகம் பொருத்தமாகக் காண்கிறது. தலைப்பைத் தாங்கும் கதை மிகவும் சுவாரசியமாக உள்ளது. கலைஞன் (வீணை வாத்தியக்காரன்) ஒருவன் நிதானம் தவறாமல் தனது கற்பனையுலகில் சஞ்சரிக்க வேண்டுமானால் எவ்வளவு தூரம் மனத்தை ஒருமைப்படுத்தவும் சகிப்புத்தன்மையை வளர்க்கவும் துணிய வேண்டும் என்பதை வெகு விளக்கமாக உணர்த்தும் சம்பவம் ஒன்றை ஆசிரியர் அமைத்திருக்கிறார். வீணை வாத்தியத்தைச் சுருதி செய்து கச்சேரி செய்யத் தயாராக இருக்கும் தருணத்தில், உறவினர் குழந்தையொன்று வாத்தியத்தின் தந்தியை அறுத்துவிடுகிறது. பொறுமையை இழக்க வேண்டிய சந்தர்ப்பம்; அதில் கலைஞன் துளியும் தனது அமைதியை இழக்காமல் குழந்தையையும் சமாதானப் படுத்தி, மறுபடியும் புதிய தந்தியைப் போட்டு வாசிக்கிறான். அத்துடன் நிற்கவில்லை அவனது பண்பாடு. எதிரே அமர்ந்திருப்பவர்களில் அவனுடைய குருநாதரும் இருக்கிறார். ஏற்கனவே ஆச்சரியப்பட்டு உட்கார்ந்திருக்கும் அவர், சொந்தக் கவனம் ஒன்றைக் கலைஞன் வாசிக்கவும் அநுபவிக்கிறார். இன்னும் அவரை நன்மதிப்பில் ஆழ்த்துகிறது, முத்திரையில் இன்னாருடைய 'தாஸன்' என்ற குருவின் பெயரை வைத்துள்ள விநயம்; அதைக் கண்டு அவர் தம்பித்துவிடுகிறார். கலைஞன் அகங்கார மமகாரங்களை ஒதுக்கியவனாயின், அவனது கலையின் சிறப்பு இன்னும் பதின் மடங்கு சோபிப்பதைப் பார்க்கிறோம். வெகு நயமான பாஷை, வீணையின் கார்வையுடன் இயங்கியிருப்பதையும் இங்கே காணலாம்.

'பவழமல்லிகை' என்ற தொகுப்பும் பரிசு பெற்றது. அதில் பல வகைப்பட்ட கோணங்களிலிருந்து வாழ்க்கையை விளக்குகின்றார் ஆசிரியர். 'பாசம்' என்ற கதை உண்மையில் சிறுகதை உத்தி முழுவதும் பெற்றுள்ளது. சிறிய ஒரு கருத்துத்தான் அடங்கியுள்ளது. தாய் ஒருத்தி, தன் வீட்டில் விட்டு வந்த குழந்தையின் ஞாபகத்தை, வாடிக்கைக்காரர் வீட்டில் குழந்தையின் பசி அழுகையைக் கேட்டதும் பெறுகிறாள். அடுத்த கணம் பேரம் செய்வதைக்கூட மறந்து, கொடுத்த காசை வாங்கிக்கொண்டு வேகமாகப் புறப்படத் தயாராகிறாள். வீட்டு வாசலில் முறக்காரி ஒருத்தி, முறங்களை விற்க வந்து, தான் கூறும் விலையையே சொல்லிக்கொண்டு, குறைந்த விலையைப் பெற மறுக்கிறாள். இதனிடையில் வீட்டினுள் இருந்த குழந்தை விழித்துக் கொண்டு அழுவதைக் கவனித்த மாமியார்க்காரி,நாட்டுப்பெண்ணை உள்ளே ஓடி முதலில் குழந்தைக்குப் பால் கொடுக்க ஊக்குகிறாள். அவ்வளவே; முறக்காரியின் நினைவு, தனது குழந்தையைத் தூளியில் விட்டு வந்ததைச் சுற்றுகிறது. அவர்களாக நிச்சயித்துக் கொடுத்த பணத்தைப் பெற்று வீட்டுக்குத் திரும்ப அவள் தவிப்பதை மிகவும் சுபாவமான தாயுள்ளத்தின் கனிவுடன் வருணித்திருக்கிறார் ஆசிரியர்.

ஆனால் ஒரு குறை சொல்ல வேண்டும்: அதனுடன் கதையை நிறுத்தியிருக்கலாம். வாசகர்களின் இருதயங்கள் நிச்சயம் உள்ளக் கிளர்ச்சி பெறும். ஆனால் ஆசிரியரின் வழக்கப்படி, மேலும் கூறத் துணிகிறார்; கவனிப்போம்: ''ஆம், உண்மை. குழந்தையின் மேல் முறக்காரிக்கு இருந்த பாசம் தூய்மையானது. அது என் தாயின் உள்ளத்தை உருக்கிவிட்டது. அவளும் தாயல்லவா? அவளுக்கும் அந்தப் பாசம் இருக்கிறதென்பதை நானல்லவா அறிவேன்!'' இந்த வாக்கியங்களே அவசியமில்லை. உருகும் உள்ளத்துக்குச் 'சபாஷ்' போடுவது போல் தோன்றிவிடுகிறது.

'கலைச்செல்வி' என்ற தொகுதியில், 'தீபாவளி விருந்து' என்பது வாழ்க்கையில் எல்லோரும் பெறக்கூடிய அநுபவம். ஹாஸ்யம் பரிமளிக்கிறது. தீபாவளியைக் கொண்டாட வேண்டாம் என்று நினைத்த ஒருவனுக்கு நேர்ந்த அதிகப்படி விருந்துகளும், அஜீர்ணம் ஏற்படுவதும், எதையும் மாறி மாறிச் சொல்லும் அவன் தாயின் சுபாவமும் வேடிக்கையான அநுபவங்களாய்த் திகழ்கின்றன.

'குமரியின் மூக்குத்தி', பழமை மணம் பெற அமைந்த சரித்திரக் கதையாகிறது. 'அசையா விளக்'கில் வரும் 'புரிந்தது', சிரிக்க வைக்கிற சம்பவங்களின் சுவாரஸ்யத்துடன் கூடியதாக இருக்கிறது. 'கோயில்மணி', 'நீலமணி', 'வளைச் செட்டி', 'பூக்காரி', 'கலைச் செல்வி' - இவ்வளவிலும் ஆசிரியரின் கதை புனையும் திறமை விரிவு பெறுகிறது. வாசிக்கையில் ரசிகர்களின் உள்ளம் கதைகளினூடே பாயும் தங்கச் சரடு போல் இழைந்து செல்லும். பக்தியின் மென்மை இழையையும் அநுபவிக்க மறுக்காது. முருகன் வழிபாடு ஆசிரியருக்கு அதிகம் என்பதை ஊர்ஜிதப்படுத்தும் வாக்கியங்கள் இடையிடையே வரும். தமிழ்க் கடவுளினிடம் உள்ள தமது பக்தியை அவர் கதைகளின் வாயிலாக ஊட்டுவதை வாசகர்களில் பலர் சுவைப்பார்கள் என்பது நிச்சயம்.

கதைகளிலுள்ள கற்பனையை மறந்தாலும், வருணனைகளை ரசிக்காமல் செல்ல வழியில்லை. பாஷையின் எளிமையும் தெளிவும் ஒரு புறமும், தமிழின் சுபாவமான ஓட்டம் மறுபுறமுமாக வாசகர்களை இன்பத்தில் திளைக்கச் செய்கின்றன. எதை மறப்பதாயினும் திருத்தமான வளமுள்ள தமிழ் மொழியை இவர் கையாளுவதை நின்று அநுபவியாமல் இருக்க யாராலும் முடியாது. 'புண்ணியம் ஓரிடம்' போன்ற கதைகளில் வரும் வாழ்க்கையின் விநோத நிகழ்ச்சிகளைக் காணும்போது, ஆசிரியரின் சொந்த அநுபவங்களைத்தான் நாமும் கண்டு ரசிக்கிறோம். அவரே கூறுகிறார்: ''கதைகள் அதிகமாக எழுத எழுதச் சொந்த அநுபவங்களும் அதிகமாகப் பயன்படுகின்றன.'' அவர் தம்முடைய விரிவான வாழ்க்கை அநுபவங்களைக் கதைகளுக்குக் கால்களாகவும் உபயோகித்திருப்பதை மற்றோர் இடத்தில் தாமே விளக்கியுள்ளார்.

தமிழபிமானிகள் கி. வா. ஜ.வுக்குத் தரும் மதிப்புக் கொஞ்சநஞ்சமல்ல. இங்கொருவர் அங்கொருவர் வேண்டுமானாலும் சிறுகதை எழுத்தாளர் உலகில் அவருக்கு உள்ள தனி இடத்தை மறுக்கலாம். முழுவதையும் வாசிக்காதவர்களாக அவர்கள் இருப்பார்கள். அல்லது ஒரு பத்திரிகையின் ஆசிரியர் அவர் என்பதனால், அவருக்கு நம்மால் விளம்பரம் எதற்கு என்று கருதி, வழங்கத் தகுந்த மதிப்பைத் தரச் சிறிது பின்வாங்கலாம். மற்றப்படி, சிறுகதை புனைவதிலும், அழகழகாகப் பல கோணங்களிலிருந்து வாழ்க்கையைப் படம் பிடிப்பதிலும், ஏழை மக்களின் பண்பாட்டின் சிறு சிறு அநுபவங்களை ஆராய்வதிலும், சம்பாஷணைத் தொடர்களைச் சலிப்பில்லாமல், சாமர்த்தியமாக இடையே புகுத்துவதிலும், கடவுளினிடம் கொண்டுள்ள பக்தியைப் பரிசுத்தப்படுத்தும் வகையில் கதையெங்கும் சமய மணம் பரப்புவதிலும் நல்ல தேர்ச்சியுடன் கி. வா. ஜ. மேலோங்கிவிடுகிறார்.

எதையும் பன்னிப் பன்னிச் சொல்லும் பழக்கம், பேச்சாளராக இருப்பதனால் அவருக்குச் சொந்தமாக உள்ளது. அந்தப் பழக்கம் சிறுகதை எழுதுவதிலும் ஆங்காங்கே தலை தூக்காமலும் இருப்பதில்லை. எதையுமே திருத்தமாக அமைப்பதிலுள்ள ஆர்வம், பத்திரிகையில் வெளியிடும் பிறருடைய எழுத்துக்களையும் அழகுபடுத்த அவரை என்றுமே தூண்டுவதைப் பார்க்கலாம். தாமே எழுதுகையில் அவரால் மேலும் மேலும் ஒரே கருத்தை அலங்காரங்களுடன் விந்நியாசப் படுத்த ஆசை ஏற்படாமல் இருக்குமா? ஓரளவு உணர்ச்சிகளின் வெளியீட்டை முக்கியமாக வைத்திருப்பதையும் கதைகளில் வரும் சம்பவங்களில் காணலாம். கண்ணீரையும்விம்மலையும்வாசகர்களுக்கு அடிக்கடி ஞாபகப்படுத்தாமல் எந்த உருக்கச் செய்தியையும் அவர் வருணிப்பதில்லை. சில சமயம் வாசகர்களிடமே உருக்கும் உள்ளக் கிளர்ச்சியை விட்டுவிடலாம். அப்பொழுதுதான் உண்மையில் ஆழப் பாயும் உள்ளப் பெருக்கு, இருதயங்களைத் தூய்மையாக்கும். கி.வா.ஜ.வுக்கு இதில் நம்பிக்கைக் குறைவு காரணமாகவோ, அல்லது அவர் வளர்த்துள்ள தமிழ் மரபின் விளைவு காரணமாகவோ எந்த விதமான உருக்கும் செய்தியையும் அதிகமாக வார்த்தைகளைக் கொண்டு விவரிக்கும் பழக்கம் ஏற்பட்டுள்ளது. இலக்கியம் மனிதனை உயர்த்தவே உற்பத்தியாகிறது. ஆகையால் வாசகரிடம் உள்ளக் கிளர்ச்சியை எழுப்ப ஒரு சிறு குறிப்பினால் (Suggestion), தொனியினால் முனைவது முக்கியம். ஆசிரியரே அவ்வளவையும் கூற முற்படுவது உண்மையான ஸஹிருதயனைச் சிறிது ஆயாசத்துக்கு உள்ளாக்கும். கலையம்சமும் அந்த அளவில் சிறிது குறைவுபடும்.

எதைச் சொல்லாமல் விடுவதாயினும், ஒன்றை மட்டும் மறக்காமலிருத்தல் கி.வா.ஜ.விடம் அவசியம். பல எழுத்தாளர்கள் நாடும் ஆண்பெண் இருவரிடம் ஏற்படும் தவறான உறவு, பட்டவர்த்தனமாய் விளக்கும் காமச் சந்நிவேசங்கள் இவை போன்ற அம்சங்களைக் கி.வா.ஜ. அறவே ஞாபகப் படுத்துவதில்லை. அது ஒன்றே, அவரையும் அவருடைய லட்சியங்களையும் தனிப்பட்ட இடத்தில் ஏற்றி வைக்கிறது. சிறுகதை தமிழ் நாட்டில் செய்த பாக்கியம் இதுவே என்றுகூடக் கூறலாம். ★



# கவிதைகள்

—பெ. தூரன்

ஞான ஒளி சுடர் விடும் அருள் நோக்குடைய அநுபூதிச் செல்வர் சுவாமி அப்பண்ணு அவர்களை உலகம் அறியாது. அவர் தமது பெருமையை வெளியிலே விளம்பரம் செய்துகொள்ளாமலேயே அண்மையில் அடக்கமாகிவிட்டார். ஆனல் அவரைத் திரு கி.வா.ஜ. அவர்கள் நன்கு அறிவார்கள். அவரிடத்திலே பெரிதும் ஈடுபாடுடையவர் அவர்.

திரு கி.வா.ஜ. அவர்களைக் காணும் பொழுது சுவாமி அப்பண்ணு, ''ஒரு கவிதை எழுதிக் கொடுங்கள்'' என்று குழந்தையைப் போலக் கொஞ்சிக் கேட்டுக்கொண்டே, தாம் பத்திரமாக வைத்திருக்கும் ஒரு நோட்டுப் புத்தகத்தை நீட்டுவார். கி. வா. ஜ.வுக்கு அந்தக் குழந்தையைப் போன்ற பெரியாரின் விருப்பத்தை நிறைவேற்ருமல் முடியாது என்று தெரியும். உடனே நோட்டுப் புத்தகத்தை வாங்குவார். கவிதையை எழுதத் தொடங்கிவிடுவார். புதியதொரு கவிதைதான். அடித்தல், திருத்தல், தயக்கம் ஒன்றும் இராது. முத்துப் போன்ற எழுத்துக்களிலே கவிதை உருவாகிவிடும். இப்படிப் பல கவிதைகளை அந்த நோட்டுப் புத்தகத்திலே நான் பார்த்திருக்கிறேன்.

இன்னும் ஒரு சம்பவம். நான் ஆசிரியனகப் பணியாற்றிய காலத்தில்திரு பி.ஜி. கருத்திருமன் (இப்பொழுது பாராளும் மன்ற உறுப்பினர்) என்னிடம் பயின்ற மாணவர். அவர் கம்பராமாயணத்திற்கு ஒரு நல்ல தொகுப்பு வெளியிட்டுள்ளார். அத் தொகுப்பிற்குத் திரு கி. வா. ஜ. இரண்டு பாடல்களில் வாழ்த்து வழங்கியுள்ளார். அந்த வாழ்த்துப் பாடல்கள் வேண்டும் என்று கேட்டுக்கொண்டபொழுது, ''இப்பொழுதே எழுதித் தருகிறேன். உங்கள் முயற்சி பாராட்டற்குரியது'' என்று கூறிக் கொண்டே பேனவை எடுத்தாராம். அவ்வளவுதான், வாழ்த்துப் பாடல்கள் உருவாகிவிட்டன.

என் மாணவர் இதைப்பற்றி என்னிடம் ஆச்சரியத்தோடு எடுத்துச் சொன்னர். ''என்ன! அடித்தல் திருத்தல் இன்றி இப்படி நினைத்தவுடன் எழுதுகிருரே. நேரில் பார்த்திராவிட்டால் நான் நம்பியிருக்க மாட்டேன்'' என்று அவர் வியந்து கூறினர்.

திரு கி.வா. ஜகந்நாதன் அவர்களுக்கு இப்படி எழுதுவது இயல்பாகவே அமைந்துவிட்டது. அவரிடமிருந்து செய்யுள் வடிவத்திலேயே கடிதங்கள் பலருக்குக் கிடைத்துள்ளன. எல்லாம் முத்து முத்தான எழுத்துக்களில். அப்படிக் கடிதம் பெற்றவர்களில் நானும் ஒருவன். அக் கடிதங்களிலே நகைச்சுவையும், தமிழின் நளினமும், புலமையும் சேர்ந்திருக்கும்.

'சாதி இரண்டொழிய வேறில்லை' என்று ஔவைப் பாட்டி என்ருே பாடி வைத்திருக்கிருர். அதுமுதல் இப்படிச் சாதி பிரிப்பது ஒரு நாகரிகமாகப் போய்விட்டது. பாரதியாரையும் இது விட்டுவிடவில்லை. எனக்கும் அதிலே கொஞ்சம் பித்து உண்டு. அதனல், இக் காலத்திலே கவிதைத் தொழிலில் ஈடுபட்டுள்ளவர்களைப் பொதுவாக இரண்டு சாதிகளாகப் பிரிக்க நான் ஆசைப்படுகின்றேன். ஒரு சாதி பழைய யாப்பு முறைகளை அப்படியே பிடித்துக்கொண்டிருக்கும். இம்மியளவு அதிலே பிசகினல் இந்தச் சாதியார்கள் நெற்றியைச் சுருக்கிக்கொண்டுதான் பார்ப்பார்கள். யாப்பிலக்கணம் என்னும் அருங்கலத்தின் சிறப்பை உணர்ந்தவர்கள் அவர்கள். அந்தக் கலத்தின் அருமைச் சட்டகத்திற்குள்ளேயே கவிதை அமைந்தால்தான் சிறப்புப் பெறும் என்று அவர்கள் நிச்சயமாக நம்புகிறவர்கள்.

மற்ருெரு சாதியார், ''நாங்கள் கவிஞர்கள்; விடுதலையே எங்கள் உயிர் மூச்சு; ஆகையால் எவ்விதமான யாப்புத் தளைகளையும் நாங்கள் ஏற்றுக்கொள்ள மாட்டோம்'' என்பவர்கள். காரிகையைக் கற்றுக் கசக்கி எறிந்துவிட்டு, விடுதலை

வேண்டும் என்பவர் சிலர். மற்றவர்களுக்கு யாப்பிலக்கணம் என்பதே தெரியாது என்று இந்தச் சாதியைப்பற்றி முதல் சாதியின் வடித்தெடுத்த கருத்து. பழைய யாப்பு வரம்புகளைக் கண்ணெடுத்துப் பார்க்காவிடினும், புதிய யாப்பை உருவாக்கவும் புது முறையோ ஒழுங்கோ வேண்டியே உள்ளது என்பதையும் இந்த முற்போக்குக் கவிஞர்களிற் சிலர் சிந்திப்பதில்லை.

மேல்நாடுகளிலே கவிதையிலும், மற்ற அழகுக் கலைகளிலும் நடந்துகொண்டிருக்கிற புதிய புதிய சோதனை முயற்சிகள் நம் நாட்டிலும் பிரதிபலிக்காமல் இருக்க முடியாது. ஆனால் மேல்நாட்டுப் புதிய முயற்சிகளில் ஈடுபட்டுப் பெருமையடைந்த கவிஞர்கள் தமக்காக ஒலி முறை என்றும், லயம் என்றும், எண்ண ஓட்டம் என்றும், உயிரோட்டம் செறிந்த சொற்கோவை என்றும், அரவ வனப்பு என்றும் என்ன என்னவோ நியதிகளை வகுத்துக்கொண்டு அவற்றிலே புகழடைந்திருக்கிறார்கள். வசன கவிதை என்றாலும் அநேகமாக அதிலும் வரம்பு கட்டிக்கொள்ளாமல் அவர்கள் சஞ்சரிப்பதில்லை. விதிவிலக்காக உள்ளவர்களும் பலருண்டு என்பதை ஒப்புக்கொள்கிறேன்.

ஆனால் இதைப்பற்றி இங்கே அதிகம் விவரிக்க வேண்டியதில்லை என்று தோன்றுகிறது. ஏனென்றால் கவிஞர் கி.வா.ஜ. முதல் சாதியைச் சேர்ந்தவர். அவருடைய கவிதைகளைப்பற்றி எழுத வந்த இடத்தில் வேறு வகைக் கவிதையின் விமரிசனம் தேவையில்லை. அவருடைய கவிதைத் தொகுப்பு 'மேகமண்டல'மாக இருந்தாலும், மேகங்களைப் போல அவர் வரம்பின்றி உலாவி வருவதில்லை.

திரு கி.வா.ஜ.வுக்கு அது முடியாது. தமிழ்த் தாத்தா டாக்டர் ஐயரவர்களிடம் அமர்ந்து தமிழ்ப் பணிபுரிந்து அந்த நறுமணத்திலேயே வளர்ந்தவரிடம் வேறு எதிர்பார்ப்பது, தம் குருநாதரிடம் அவர் கொண்டுள்ள அளவு கடந்த பக்தியை அலட்சியப்படுத்துவதாகும். அவருடைய தோற்றப் பொலிவிலும், ஆழ்ந்தகன்ற புலமையிலும், சமயநெறியிலே அழுத்தமாக நின்று பிறருக்கும் அந்நெறியைத் தேன்தமிழில் கூறும் இனிமையிலும், எழுத்திலும், சிந்தனைகளிலும் அவர் தாம் பலகாலும் நன்கு நுகர்ந்து மகிழ்ந்த சிரிய பண்புகளின் முழு வடிவமாகவே காட்சியளிக்கிறார். அது அவருடைய சொல்லிற்கும் எழுத்திற்கும் கவிதைக்கும் உள்ளதொரு தனிச் சிறப்பு.

யாப்பு முறைகளிலிருந்து விடுதலை நாடும் கவிஞர்களிடம் நான் குற்றம் காணவில்லை. ஓரளவிற்கு நானே அந்தச் சாதியைச் சேர்ந்தவன். இந்தச் சாதிக்கும் யாப்பருங்கலம் நல்ல உதவுபடியாகும் என்பது என் நீண்டநாள் அநுபவம். ஒன்றைத் தள்ள வேண்டுமானால் அந்த ஒன்று என்ன என்று நன்றாகத் தெரிந்துகொள்ள வேண்டும்.

ஆங்கிலத்திலே பலரும் போற்றத்தக்க தளையற்ற விடுதலைக் கவிதைகள் எழுதியவர்களின் முடிவான கருத்துக்களையும் அவர் எழுத்து வடிவங்களையும் நான் ஊன்றி ஊன்றிப் படித்ததிலிருந்து ஓர் உண்மை புலனாயிற்று. வேலியை வேண்டுமானால் சங்கடமான நெருக்கத்தில் அடைத்துக்கொள்ளாமல் விட்டுவிடலாம். அதை எவ்வளவு பரவலாக வேண்டுமானாலும் தள்ளி அமைக்கலாம். ஆனால் ஏதாவது ஒரு வகை வேலியே இல்லாமற் போனால் அங்கே ரசம் பிறப்பதில்லை.

நமது காது பொல்லாதது. அது எதுவோ ஒரு சூட்சுமமான ஒலியமைப்பை எதிர்பார்க்கிறது. எதிர்பார்க்கிற அந்த மின்னல் அரவத்தை வேண்டுமானால் தடாரென்று நேர் எதிரான ஒலிப்பிழம்பைத் தோற்றுவித்து அதனாலும் செவிப் புலனை மகிழ்ச்சி நிறைவெய்தச் செய்யலாம். ஆனால் அதையும் செய்யாமல் செவியை ஏமாற்றிவிட முடியாது.

இக்காலத்திலே எழுதுகிற தளையற்ற விடுதலைக் கவிதைகள் மனத்திற்குள்ளேயே படித்து மகிழத்தான் ஏற்பட்டவை என்று மேல்நாட்டுச் சுவைஞர்கள் சிலர் எழுதியுள்ளதை நான் அறிவேன். ஆனால் மனத்திற்குள்ளே படித்தாலும் மனத்திற்கும் ஒரு நுட்பமான செவிப் புலன் உண்டு என்பதை மறந்துவிடக் கூடாது.

நான் பலவேறு வகையான யாப்பு முறைகளில் சோதனைகள் செய்திருக்கிறேன். அவற்றிலெல்லாம் நானே வகுத்துக்கொண்ட வேலி எங்கேயாவது இருப்பதில்தான் சுகம் கிடைக்கிறது என்பதை அறிய முடிந்தது.

இக்காலத்தில் வெளியாகிற புது முறை ஆங்கிலக் கவிதைகளையோ, வேறு மேல்நாட்டு மொழிக் கவிதைகளையோ நாம் படிக்கும்போது ஓர் உண்மையை மனத்தில் தெளிவாக வைத்துக்கொள்ள வேண்டும். அந்த மொழியிலுள்ள சொற்களின் ஒலிநயம் முதலியவை அந்த மொழியைத் தாய்மொழியாகக் கொண்டவர்களுக்குப் புலனாவதைப் போல் நமக்குப் புலனாவதில்லை. அதனால்தான் மேல்நாட்டுப்

புதுமுறைக் கவிஞர்கள் வகுத்துக் கொண்டுள்ள ஒழுங்கு முறைகள் நமக்குப் பெரும்பாலும் தோற்றுமற் போய்விடுகின்றன.

''கவிதையின் இசை (அரவ வனப்பு) என்பது ஒவ்வோர் அடியையும் பொறுத்ததல்ல. இது கவிதையின் முழு வடிவத்தையும் பொறுத்ததாகும். இதை உள்ளத்தில் கொண்டுதான் பழைய யாப்பு வடிவம் அல்லது தளையற்ற புது முறைக் கவிதை என்கிற தொல்லையான பிரச்னையை நோக்க வேண்டும்'' என்று ஆங்கிலத்திலே கவிதை முறையில் புதிய யுகத்தைத் தோற்றுவித்த டி. எஸ். எலியட் என்ற கவிஞர் கூறுகிறார். அவர் நோபெல் பரிசு பெற்ற கவிஞர் மட்டுமல்ல. பெரிய திறனாய்வாளரும் ஆவார் என்பதை நாம் அறிவோம். ''கவிதையோ அல்லது கவிதையின் பகுதியோ உள்ளத்தில் உதிக்கும் பொழுதே ஒரு தனிப்பட்ட லயத்திலே எழுந்துதான் பின்பு சொற்களில் உருவம் பெறுகிறது என்பதை நான் அறிவேன். அந்த லயந்தான் கவிதையின் உள்ளக் கிடக்கையையும் வடிவத்தையும் பிறப்பிக்கிறது. இது எனக்கு மட்டும் தனிப்பட்ட அநுபவம் என்று நான் கருதவில்லை'' என்று அவர் மேலும் கூறியிருப்பதை நாம் ஆழ்ந்து சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

கவிஞர் டி. எஸ். எலியட்டின் பல கருத்துக்கள் நமக்குப் பெரிதும் சிந்தனையைத் தூண்டுவனவாக அமைந்துள்ளன. அவற்றையும், அவரைப் போலவே புது முறை யாப்பு முறைகளைப்பற்றி ஆய்ந்து கூறியவர்களுடைய எண்ணங்களையும் நாம் கருத்தில் வைத்துக்கொண்டால் நமது தாய்மொழியிலேயே புது முறைக் கவிதைகளையும், யாப்பு அமைப்புகளையும், வசன கவிதைகளையும் சிறந்த முறையில் உண்டாக்க உதவியாக இருக்கும். ''தளையற்ற கவிதை என்ற பெயரில் எவ்வளவோ மட்டமான வசனப் படைப்புகள் எழுதப்பட்டுள்ளன என்பதை என்னைப் போல மற்றவர் அறிந்திருக்க முடியாது. மிகச் சாதாரணமான கவிஞன்தான் தளையற்ற கவிதை என்பது யாப்பு முறையிலிருந்து விடுதலை பெற்றுள்ள காரணத்திற்காக அதை வரவேற்க முடியும்'' என்று டி. எஸ். எலியட் எச்சரிக்கை செய்திருப்பதையும் நான் புறக்கணிக்க இயலாது.

''லயமும் சீரளவும் இசையும் எதனுல் நமக்கு அழகாகத் தோன்றுகின்றன என்பதைப்பற்றி நான் கூற இயலாது; ஆனுல் அவை நமக்கு மிகுந்த மன நிறைவை அளிக்கின்றன'' என்று விமரிசகர் செலின் கோர்ட் கூறுகிருர். ஆகவே புதிய முறைகளில் நாம் விரும்புகின்ற வகையில் ஒழுங்குகளை அமைத்துக்கொண்டு, கவிதையை உருவாக்கிப் புதிய வலிமையும் அழகும் தேட நாம் முயல வேண்டும்.

பழைய யாப்பு வடிவம் ஒன்றை மிகப் பலர் கையாண்டதன் பயனுக அதன் தனிச் சிறப்புத் தேய்ந்துவிடுவது இயல்பு. அந்த வடிவத்தில் பெறக்கூடிய வளப்பத்தையும் இன்பத்தையும் திறமைமிக்க கவிஞர் பலர் முன்பே தமதாக்கிக்கொண்டு கவிதைகளைப் படைத்திருப்பார்கள். ஆதலால் அந்த வடிவம் இக்காலக் கவிஞன் ஒருவனுக்கு மேலும் தன் கற்பனைகளை வெளியிட இயலாத வகையில் செழுமையை இழந்துவிட்டிருக்கும். அதாவது அந்த வடிவத்தின் செழுமை யெல்லாம் பல கவிதைகளில் முன்பே வெளியாகியிருக்கும். மேலும் அதில் புதுச் செழுமையைக் காண்பது அரிதாகிவிடும். மேலும் இக்காலத்திற்கு ஏற்ற புதுக் கருத்துக்களை வெளியிடுவதற்கு அந்த யாப்பு வடிவம் ஏற்றதாக இராது.

ஆகவேதான், கவிதையின் இளமை என்றும் மாருமல் இருக்கவும், அதனுடைய பயன் மேலும் மேலும் ஓங்கவும் புது முறைக் கவிதைகள், புதிய யாப்புக் கவிதைகள் தேவையாகின்றன.

அன்பர் திரு கி.வா.ஜ.வின் கவிதைகளைப்பற்றிக் கூறுவதை விட்டு, நான் நெடுந்தூரம் வழிமாறிப் போய்விட்டதாகச் சிலர் கருதலாம். ஆனுல் திரு கி. வா. ஜ. வின் 'மேகமண்டல'த்திலே மிதக்கும்போது இங்கு விவாதித்த எண்ணங்கள், கவிதைகளையும் கவிதை வடிவங்களையும் புரிந்துகொள்ளுவதற்கு எவ்வளவு பயன்படுகின்றன என்பதை உணர்ந்து கொள்ளலாம்.

திரு கி.வா.ஜ. புதிய யாப்பு முறைகளைப் பயன்படுத்தியிருக்கிருர் என்பதைப் பல இடங்களில் காணலாம். புதிய யாப்பு முறைகள் என்ருலும் அதிலும் ஓர் யாப்பமைதியை நிலைநாட்டிக்கொண்டுதான் அவர் மேகமண்டலத்திலும் சஞ்சரிப்பார் என்பதை நான் மீண்டும் நினைவூட்ட வேண்டியதில்லை என்று நினைக்கிறேன்.

குனிந்து குனிந்து மனம்-மிகக்
கோழையா னேர்களையே
முனைந்து நிமிர்ந்து நிற்க-எரி
மூட்டிக்கவி வளர்ப்போம்.

திரு கி.வா.ஜ.வின் கவி உள்ளம் இப்படிப் பாடுகிறது. காதலையும் அழ

கையும் வீரத்தையும் கடிவாளமில்லாத கற்பனைப் பரியிலேறிப் பாடி மகிழ அவர் விரும்புகிறார். இன்ப நெகிழ்ச்சி களால் இனிமை மணம் நுகர்வதைப் போலவே துன்பக் கனலிலும் ஒரு ஜோதி யைக் கண்டு உவக்க வேண்டும் என்று அவர் பாடும்பொழுது, 'இடுக்கண் வருங் கால் நகுக' என்ற பொய்யாமொழியை யும் இணைத்துவிடுகிறார்.

பழமை மரபிலே முழுக்க முழுக்க மூழ்கியவர்கள் தமது கவிதைக்கு எடுத் துக்கொள்ளும் விஷயங்களே பழைய மரபை ஒட்டித்தான் இருக்கும். ஆனால் கி.வா.ஜ. வண்டிக்காரக் குப்பனைப் பற்றிப் பாடுகின்றார்; ரேடியோவைப் பற்றிப் பாடுகின்றார்; கலைஞன் செய்த பதுமையைப்பற்றிப் பாடுகின்றார்.

இவ்வாறு திரு கி.வா.ஜ. பழமைக்கும் புதுமைக்கும் எழில் நிறைந்த வலிய பாலமாக அமைந்திருக்கிறார். அவ ருடைய உள்ளம் கலை உள்ளம்; அன்பு உள்ளம்; நம் நாட்டுப் பண்பிலே தோய்ந்த உள்ளம். அந்த உள்ளத்தின் பண்பு அவருடைய 'புத்தாண்டு' என்ற கவிதையின் ஒரு பகுதியிலே மிக நன்கு வெளிப்படுவதை நான் உணர்ந்து அவரைப் போற்றுகிறேன். புத்தாண்டு என்னும் கவிதையை முழுமையாகவே படிப்பது நன்று. இங்கு ஒரு பகுதியை மட்டும் தருகிறேன்—

காந்திமகான் பிறந்து நடந்
திருந்த நாட்டில்,
கால்வைத்து நடக்கின்றோம்
என்னும் எண்ணம்
ஏந்தும்உளம் வேண்டும் அவர்
காட்டிவிட்ட
எத்தனையோ நெறிகள் உண்டாம்
அவற்றைத் தேர்ந்து
மாந்தரெலாம் சோதரராய்
உயிர்கள் யாவும்
வையகத்தில் ஒரு குடியாய்
வாழ்வதற்கே
ஆம்தகுதி ஏதென்றே
ஆய வேண்டும்;
அவ்வழியில் நம் வாழ்க்கை
நிகழ வேண்டும்.

திரு கி.வா.ஜ. பல இசைப் பாடல் களும் இயற்றியுள்ளார். இவை பெரும் பாலும் தெய்வப் பாடல்கள். மூர்த்திகள் பல என்றாலும் அவற்றுள் ஒவ் வொன்றும் குறிக்கும் பரம்பொருள் ஒன்றே என்பதை இன்று அநேகமாக எல்லோரும் ஏற்றுக் கொள்ளக் கூடிய ஒரு நல்ல மனப்பாங்கு ஏற்பட்டு வரு கிறது. அப் பாங்கையே மிகத் தெளி வாகக் கொண்டவராகிய கி. வா. ஜ. வுக்கு வழிபடும் இஷ்ட தெய்வமாக ஒன்று இருப்பினும் அவர் எல்லா மூர்த்தி களையும் கனிவோடு பாடுகிறார். அவ ருடைய பக்தி உள்ளம் அப் பாடல்களில் வெளிப்படுகிறது.

'மண்காணும் சுவை மறந்து தனித்து மோன அநுபூதி' இன்பத்திலே நாட்டம் கொண்டவர்களுக்கு உள்ளம் கனிவிக் கும் சாதனங்களாக இப் பாடல்கள் நிற் கின்றன. நாத இன்பம் என்பது பரந்த விஷயம். அதை இங்கு விவரிக்க இயலாது. நாதத்திற்கு உருக் கொடுக் கும் பாடல்களைப் படைத்து அவ்வகை யிலும் கி. வா. ஜ. பணி செய்துள்ளார் என்பதை மட்டும் எடுத்துக்காட்டி மகிழ்ச்சியோடு அவருக்குப் பல்லாண்டு கூறுகிறேன். ★

## ஓவியர்கள் தேட வேண்டாம்

காவியம் சொல்லோவியம். அதைப் படிக்கும்பொழுதே உள்ளத்தில் ஓவியக் காட்சி தானே அமைகின்றது. உருவம் இல்லாத பொருள்களையும் உணர்ச்சிகளையும் உள்ளம் உணரும்படி செய்துவிடுகின்றது. காவியத்துக்கு உள்ள பல இயல்புகள் ஓவியத்துக்கும் உண்டு. உலகிற் காணும் பொருள்களின் குறைபாடுகளைப் போக்கி, அவற்றுக்கு ஓர் அழகை ஊட்டி, நித்தியத்துவத்தைத் தருவதில் காவியமும் ஓவியமும் ஒரே நிலையில் இருப்பவை. இரண்டும் வெறும் உருவத்தை மாத்திரம் காட்டுவதோடு நில்லாமல் உணர்ச்சிகளையும் காட்டும்போது சிறப்பை அடைகின்றன.

சங்க காலக் காவிய உலகத்தின் காட்சி ஒவ்வொன்றும் ஒவ்வொரு சித்திரம். கலைத்திறம் கைவந்த ஓவியர்களுக்குச் சங்க நூல் ஒரு பெரிய களஞ்சியம். வண்ண ஓவியங்களும் புனையா ஓவியங்களும் வரைவதற்குப் பொருள் எங்கே என்று தேட வேண்டாம். சங்க நூல்களிலே புகுந்தால் பல்லாண்டுகள் ஓவியம் படைக்கப் பண்டம் இருப்பதைக் காணலாம்.

—'காவியமும் ஓவியமும்', கலைமகள் வெளியீடு.



இலக்கியத்துக்கும் சமயத்துக்கும் அருந்தொண்டாற்றி அறுபதாண்டு நிறைவு காணும் தமிழ்ச் செல்வர் திரு கி. வா. ஜ. அவர்களுக்குப் பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு கூறி வாழ்த்துகிறோம்.

—கல்கி





# இலக்கியக் கட்டுரைகள்

—அ. ச. ஞானசம்பந்தன்

மணிவிழாக் கொள்ளும் வாகீச கலாநிதியின் இலக்கியப் படைப்புகள் மிகப் பல. இன்றைய உலகில் இலக்கியம் என்று கூறினுல் சிறுகதை, புதினம், நாடகம், புதுமுறைக் கவிதை என்பவற்றை மட்டுமே அத் தொகுப்புக்குள் அடக்குவர். ஆனல், மணிவிழாத் தலைவர் பழமைக்கும் புதுமைக்கும் பாலமாய் அமைபவரல்லரோ! பல சமயங்களில் அவருடைய பேச்சைக் கண்ணை மூடிக்கொண்டு கேட்டால், புத்தம் புதிய கருத்துக்களை அவர் வெளியிடுவது கேட்டு மிகவும் புதுமை விரும்பி ஒருவர் பேசுகிறுர் என்றே கருதுவோம். உடனே கண்களைத் திறந்தால், முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருளான ஒரு வடிவை முதுகுடுமிப் பெரியார் ஒருவரை, திருநீறணிந்து சொற்பொழிவாற்றும் ஒருவரைக் கண்டு வியப்படைகிறேம். ஆம்! இந்தப் பழமை விரும்பிதாம் அந்தப் புத்தம் புதிய கருத்தை வெளியிடுகிறுர். இந்த இரு துருவங்களையும் இணைக்கும் பெற்றியர், திரு கி.வா.ஜ.வைப் போன்றேர், இன்று அரியராகிவிட்டனர்.

சிறுகதை, புதினம், பிரயாண நூல் ஆகியவற்றைப் படைப்பதுடன் நாடோடிப் பாடல்களிலும் தம்மைப் பறிகொடுக்கும் தமிழ்ப் பேராசிரியர்கள் பலரில்லை இத் தமிழ் நாட்டில். சாதி, சமயக் குழியில் வீழாமல் தப்பிய பழந்தமிழ்ப் பேராசிரியர்கள் ஒரு சிலரே. அவருள் ஒருவர் கி.வா.ஜ. எத்துணைப் புதுமையை விரும்பினுலும் புதிய இலக்கியத்தைப் படைத்தாலும் புதுமை என்பது பழமையிலிருந்து தோன்றியதுதான் என்ற வலுவான கருத்துடையவர் இவர். பழமையின் தொடர்பு இல்லாத புதுமை, வேரில்லாத மரம் போல்வதாகும்.

கி.வா.ஜ.வின் இலக்கியக் கட்டுரைகள் சங்க நூல்களில் தொடங்கிப் பாரதியார் கவிதைவரை செல்கின்றன. எந்த ஒன்றையும் ஆழ்ந்து கற்கும் பழந்தமிழ்ப் புலவர்களுடைய பண்பைப் பெற்றுள்ளார் அறிஞர். ஆனுலும், இலக்கிய ரசனையுடன் எதிலும் அழகைக் காண முற்படும் புதுக்காலத் திறனுய்வாளனின் பண்பையும் பெற்றுள்ளார். சங்க நூல்களைக் கற்பதற்குத் தனியான பொறுமை வேண்டும். இரண்டாயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட கவிதைகளை இற்றைநாள் மக்கள் கற்று ரசிக்க வேண்டுமாயின் அதற்கேற்ற பயிற்சி வேண்டும். ஆனல் ஜெட் விமான வேகத்தில் செல்லும் இற்றைநாள் மக்களுக்கு இதற்குரிய பொறுமையும் பயிற்சியும் இருக்க நியாயமில்லை. பழந்தமிழில் ஈடுபட்டோர் இவர்களைப் பற்றிக் கவலையுருமல் தத்தம் அலுவலில் ஈடுபட்டனர். புதிய தலைமுறையினரும் தாம் படைக்கும் இலக்கியத்தில் மட்டும் இன்பம் காணத் தொடங்கிப் பழமையை மறந்திருந்தனர். அத்தகைய நிலையில் கி.வா.ஜ.வின் சங்க நூற் காட்சிகள் தோன்றின. கலித்தொகை போன்ற நூல்களிற் சில பாடல்களை எடுத்துக்கொண்டு இக்கால மக்கள் அதன் அழகைக் காணும் வகையில் விளக்கம் எழுதினுர்.

கலித்தொகையில் காணும் கடவுள் வாழ்த்துப் பாடல் மிகச் சிறந்த கவிதை நயம் நிறைந்தது. ''ஆறு அறி அந்தணர்க்கு அருமறை பல பகர்ந்து'' என்ற அடிக்கு நச்சினுர்க்கினியர் உரையைவிடச் சிறந்த உரை காண்கிறுர். ''அறிவாற்றலால் தெளியப்பெருத அரிய இரகசியங்கள் பலவற்றைப் பகர்ந்தவன்'' என்று கி.வா.ஜ. கூறுவது சிறப்பாயுள்ளது. அதிலும் 'பகர்ந்தவன்' என்ற சொல்லாட்சி ஏற்றமுடைத்து. பகர்தல் என்றுல் வாய் திறந்து பேசுதல் என்று பொருள் கொள்வர். ஆனுல் தென்முகக் கடவுள் பகராமற் பகர்ந்தான் என்று நயம்பட ஆசிரியர் எழுதிச் செல்கிறுர்.

''அரிதாய அறன் எய்தி'' என்ற பாடலுக்குரிய விளக்கத்தை ஒரு நாடகமாகவே அமைத்துள்ளார். இதேபோலப்

பிற சங்கப் பாடல்கள் அனைத்தும், புதிய வடிவுடன், கற்பார் மனத்தைக் கவரும் வகையில் அவர் எழுதுகோலி லிருந்து வெளிவந்துள்ளன.

முருகபக்தியில் ஈடு இணையற்று விளங் கும் கி.வா.ஜ. எந்தக் கட்டுரை எழுதி ஞலும் அருணகிரிப் பெருமானை நினைவு கூராமல் இரார். 'வழிகாட்டி' என்ற நூல் முழுவதும் திருமுருகாற்றுப்படைக்கு எழுதிய சிறந்த விளக்கப் பேருரையாக அமைந்திருக்கக் காண்கிறோம். ஆற்றுப் படுப்போனை வழிகாட்டி என்று கூறல் சாலப் பொருத்தமானதே.

திருமுருகாற்றுப்படையைப் பலரும் பாராயண நூலாகக் கொண்டிருப்பினும், அன்றாடம் பாராயணம் செய்யினும், சொல்லிய பாடலின் பொருளுணர்ந்து சொல்லுவார் மிகச் சிலரேயாவர். அத்தகையோர்க்கும், அப் பாடலை இலக் கிய நயங்கருதிக் கற்போருக்கும் ஒருசேரப் பயன் அளிக்கும் வகையில் 'வழிகாட்டி' என்ற நூல் அமைந்துள் ளமை பாராட்டுக்குரியது.

'பாசவதைப் பரணி' என்ற பிற்கால நூல் ஒன்றில், ''என்! பாவும் ஆறு கடல் ஏழு இருந்தும் என் அம்மை, அன்பாளர் கண் அருவி ஆடுவது திருவுள்ளம்'' என்ற ஒரு கண்ணி வருகிறது. புறத் தில் கிடைக்கும் எத்தனை பொருள்களைக் கொண்டு அம்பிகைக்கு நீராட்டினாலும் அவள் மனம் குளிர்வதில்லையாம். அன் பர்களுடைய கண்ணீர் என்ற ஒன்றுக் காகவே அவள் ஏங்கி நிற்கிறாளாம். இக் கருத்தை வலியுறுத்த அழகான கற்பனை ஒன்றை வடித்துத் தந்துள்ளார், 'ஆலைக் கரும்பு' என்ற நூலில். மேலும் அதே நூலின்கண், 'திரு வாரூர் நான்மணிமாலை'யில் வரும் 'தன் ஒக்கும் செல்வக் கமலைப் பிரான்' என்ற பாடலுக்கு நகைச்சுவை வெளிப் படும்படியாகவும் மனத்தில் சென்று பதியும்படியாகவும் பொருள் எழுதி யுள்ளார்.

இலக்கியத்தில் நேரிடையாக நுழைந்து அநுபவிக்க இயலாதவர்கள் தனித் தனிப் பாடல்களில் காணப்பெறும் சுவையை அநுபவிக்கத் தொடங்கினால் பின்னர் இலக்கியத்துள் நுழைய ஆர்வம் பிறக்கும் என்ற முன்னுரை யுடன் 'முல்லை மணம்' என்ற கட்டுரை நூல் எழுதப்பெற்றுள்ளது.

சங்கப் பாடல், தேவாரம், கம்பன் பாடல், தனிப் பாடல் ஆகியவற்றுள் சங்கப் பாடலில் திளைக்கின்றவர் மற்ற வற்றை மட்டமாகக் கருதித் திளைக்க விரும்பாத காலம் ஒன்று இருந்தது. கி.வா.ஜ.வின் எழுத்து ஆற்றலால் இந் நிலை மாறி, ''ஐதே கம்ம இவ்வுலகு படைத்தோனே!'' என்ற நற்றிணைப் பாடல் முதல், ''அற்ற தலைபோக அறாத தலை நான்கினையும்'' என்ற தனிப் பாடல் வரை அனைத்தும் இலக்கிய மணம் கமழ விளங்குகின்றன 'முல்லை மணம்' என்ற நூலில்.

அதே நூலில் ''கொடுத்ததை வாங் கக் காணேன்'' என்ற பழமொழியை ஈற்றடியாக உடைய ''அலைகடல் கடை யக் கண்டேன்'' என்ற பாடலுக்கு நயம்பட ஒரு விளக்க உரை எழுதிய துடன் தமிழ்நாட்டில் வழங்கும் ஒரு கதையையும் காட்டியுள்ளமை போற்றற் குரியது.

'வாழ்வரசி' என்ற கட்டுரைத் தொட ரில் பழந்தமிழர் வாழ்வு, உள்ளம், நாடு, வீடு என்பன எவ்வாறு இருந்தன என்ற செய்திகளைத் தமக்கே உரிய முறையில் ஆசிரியர் எழுதியுள்ளார்.

ஆசிரியரின் 'பேசாத பேச்சு' என்ற கட்டுரைத் தொடர் தமிழ் நாட்டில் பல ருடைய உள்ளத்தைக் கொள்ளைகொண்ட ஒன்றாகும். 'கன்னித் தமிழ்' என்ற கட்டு ரைத் தொடரில் தமிழ்ச் சங்கங்கள் பற்றியும் தொல்காப்பியம் என்ற பழந்தமிழ் இலக்கணம்பற்றியும் பேசி யுள்ளார். 'பொழுதும் போதும்' என்ற கட்டுரை, ஆசிரியரின் ஆராய்ச்சி வன்மைக்கு ஓர் எடுத்துக் காட்டாக ஒளிர்கின்றது. 'கம்பர் முகந்தது' என்ற கட்டுரை, இராமகாதை அதற்கு முன்னர்த் தோன்றிய சீவக சிந்தா மணிக்கு எத்துணைத் தூரம் கடமைப் பட்டுள்ளது என்பதை அழகுற விளக்கு கிறது.

அளப்பிலவாய கட்டுரைகள் எழுதி னாலும் சுவை குன்றாமல், படிப்பவர்க்கு அலுப்புத் தட்டாமல் இலக்கியக் கட் டுரைகள் வரையும் சிறப்புடையார் கி.வா.ஜ. எளிய நடையில் 'கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய், கேளாரும் வேட்ப மொழியும்' இயல்புடைய கி. வா. ஜ. எழுத்துத் துறையிலும் அதே உத்தி யைக் கையாண்டு வெற்றி பெற்றவ ராவார். சிலர் பேச்சு நடைக்கும் எழுத்து நடைக்கும் நிரம்ப வேறுபாடு உண்டு. ஏனெனில் இவை இரண்டை யும் ஒன்றாக்கி அதில் வெற்றி காணுதல் கடுமையே. இக் கடுமையான காரியத் தில் வெற்றி கண்டுள்ள மணிவிழாத் தலைவர் இன்னும் பல்லாண்டுகள் வாழ்ந்து தமிழுக்கும் தமிழ் நாட்டிற்கும் தமிழ ருக்கும் சிறந்த பணிபுரிய, அவர் வணங் கும் காந்தமலைக் கடவுள் திருவருள் பாலிப்பாராக. ★



# பத்திரிகைத் தொண்டு

—கா. ஸ்ரீ. ஸ்ரீ.

கடந்த ஆகஸ்டு மாதத்தில் நான் 'மெலினு'வில் (குடற் புண்ணிலிருந்து கருரத்தம் வருதல்), படுத்த படுக்கையாகக் கிடந்தேன். கருரத்தம் வருதல் நின்று ஒரு வாரமாகியும், உடலில் அசதி தாங்கவில்லை. எழுந்து நிற்க முடியவில்லை. பால் மட்டுமே உணவு. வயிற்று வேதனையும், ஓயாமல் படுத்துக் கிடப்பதும் எனக்கு எரிச்சலையும் வெறுப்பையும் தந்தன. நண்பர் கி.வா.ஜ. என்னைப் பார்க்க வந்தார். கண்டதுமே கண்ணீர் பொங்க, ''உங்களுடைய வேதனையை எனக்குத் தந்துவிடுங்கள்; நான் ஏற்றுக்கொள்கிறேன்'' என்றார். எனக்கும் அழுகை வந்தது; என் கண்ணீரில் வேதனை வெளியே கரைந்தோடும் ஆறுதலும் இருந்தது. சிறிது நேரம் பேசியிருந்து, கி.வா.ஜ. புறப்பட்டுச் சென்றார்.

பௌத்தர்களின் சிறந்த பக்திகாவியமான 'போதிசரியாவதாரம்' என் நினைவுக்கு வந்தது. 'உலகத்திலுள்ள துன்பங்கள் யாவற்றையும் நான் நுகர்ந்து நுகர்ந்து, மக்களுக்கு இன்பம் கிடைக்கச் செய்வேன்' என்று கனிமொழி கூறிய சாந்திதேவாசாரியர் அருளிய உன்னத நூல் இது. பாரத நாட்டிலிருந்து பூடான் வரையில் இதைப் பகவத் கீதையைப் போலப் பாராயணம் செய்பவர்கள் இருக்கிறார்கள்.

சாந்திதேவரின் இருதயக் குரல் இது: ''நோய் நீங்கும்வரையில் நான் நோயாளிகளுக்கு மருந்தாகவும் மருத்துவனாகவும் பணியாளனாகவும் இருக்க வேண்டும். பஞ்சத்திலே உணவாகவும் நீராகவும் உதவ வேண்டும். ஏழைகளிடம் அழியாச் செல்வமாக நான் சேர வேண்டும். மாந்தர் யாவருக்கும் இன்பமளிக்க இந்த உடலை அர்ப்பித்திருக்கிறேன். மக்கள் இதை எப்படி வேண்டுமானாலும் பயன்படுத்திக் கொள்ளட்டும். அவர்கள் இந்த உடலைக் கொல்லலாம், பழிக்கலாம், புழுதியில் எறியலாம், அல்லது இந்த உடலைக் கொண்டு விளையாடலாம், சிரிக்கலாம், மகிழலாம். எதைப்பற்றி எனக்கு என்ன கவலை? இந்த உடலை அவர்களுக்குக் கொடுத்து விட்டேன்.''

கி.வா.ஜ.வுடன் கால் நூற்றாண்டுக் காலம் கலைமகள் ஆசிரியர் குழுவில் நெருங்கிப் பழகும் வாய்ப்புப் பெற்றவன் நான். இத்தகைய பேறு எனக்கு முன்பு யாருக்கும் கிடைத்ததில்லை; இனியும் கிடைக்க வகையில்லை. ஆகையால், அவரைப்பற்றி நான் ஒளிவுமறைவில்லாமல் சொல்ல முடியும்.

அவருடைய வீட்டுக்கு நான் முக்கிய வேலை இல்லாமல் செல்வதில்லை; சென்றாலும் விரைவில் வேலையை முடித்துக் கொண்டு திரும்புவேன். ஆனால், மணிக்கணக்காகப் பேசி அவருடைய அரிய பொழுதை வீணாக்குகிறவர்களையும், அவரிடம் பண உதவி பெற்றுத் திருப்பித் தராமல் ஏமாற்றுகிறவர்களையும் கண்ட போதெல்லாம், அவர்களிடம் மட்டுமின்றிக் கி.வா.ஜ.வினிடமும் நான் ஆத்திரமும் சினமும் கொண்டதுண்டு. ''இந்தக் காலத்தில் பண உதவி செய்கிறவன் மகாபாவி; கடன் வாங்குகிறவன் புண்ணியவான்'' என்று நான் சொல்வதுண்டு.

வருகிறவர்களிடம் நீண்ட நேரம் பேசிவிட்டுக் கி.வா.ஜ. இரவு முழுவதும் கண் விழித்து எழுதுவார். கொடுத்த பணம் போனதைப்பற்றிக் கவலைப்பட மாட்டார். வருமானம் குறைந்திருந்த காலத்திலேயே அவர்வீட்டில் விருந்தினர் அதிகம்.

தம்மிடம் யார் வந்தாலும் அவர்களுடைய மனிதத்தன்மையில் நம்பிக்கை கொண்டவர் கி.வா.ஜ. காந்தி யுகத்துடன் கலந்து வாழ்ந்தவராதலால் அவருடைய இயல்பில் சத்தியமும் அஹிம்சையும் இணைந்துவிட்டன. கி.வா.ஜ.வின் பொழுதையும் பணத்தையும் நற்பண்பையும் தமக்காகப் பயன்

படுத்திக்கொண்டவர்கள் பலர். கி.வா. ஜ. வின் இலக்கியத்தில் கதையோ கட்டுரையோ கவிதையோ எந்த வகையானுலும் மனிதத் தன்மையினிடம் உள்ள அன்பே உயிராக விளங்குவதற்குக் காரணம் இந்த இயல்புதான் என்பதை எடுத்துக் காட்டவே இதை இங்கு விரிவாகக் கூறினேன். அவருடைய கதையில் தர்மந்தான் வெல்லும். அதர்மம் ஓங்கினுலும் வெல்லாது. கெட்டவன் நல்லவனுக மாறுவான். நல்லவன் கெட்டவனுகி அழிய மாட்டான்.

மகாவித்துவான் மீனுட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் ஆசிரியர்களுக்குள் சிறந்தவர்; கவிகளுக்குள் சிகாமணி, குணக்கடல். அவர் பாடிய தல புராணங்களுக்குக் கணக்கே இல்லை. அவருடைய மாணுக்கராக விளங்கிய மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள், தம் ஆசிரியரே காணுத - ஏன், நேற்றைத் தமிழுலகமே காணுத - சங்க இலக்கியத்தையும் மூன்று பெருங்காப்பியங்களையும் மக்களுக்குத் தந்து வான் புகழ் கொண்டார். இன்றும், அவருக்குப் பிறகு, சங்க இலக்கியத்தில் .... என்று குறியிட்ட, கிடைக்காத செல்லரித்த பகுதியையோ, வேறு பழைய இலக்கியத்தையோ எடுத்துக் கொடுப்பார் யாருமில்லை. ஐயரவர்களின் மாணவரான கி.வா.ஜ. கவிஞராகவும் சங்க இலக்கியப் புலவராகவும் விளங்குவதுடன், இன்றைய இலக்கியம் வளரவும் பேருதவி செய்திருக்கிறுர். தாமே சிறு கதைகளும், இலக்கியக் கட்டுரைகளும், ரஞ்சகமான வேடிக்கைக் கட்டுரைகளும், யாத்திரை வர்ணனையும், கவிதைகளும் எழுதியிருப்பதுடன், பலரை எழுதச் செய்து வெளியிட்டிருக்கிறுர். கி.வா.ஜ. எழுதாத தமிழ்ப் பத்திரிகை எதுவும் இல்லை. சிறு கதைகளிலிருந்து சித்தாந்தம் வரை அவர் எழுதாத விஷயம் இல்லை. தீபாவளி மலர்களிலும் பொங்கல் மலர்களிலும் அவர் இல்லை என்றுல் அது பருப்பு இல்லாத கல்யாணம்.

1937-இல் முதல்முதலில் நான் கி.வா.ஜ.வைச் சந்தித்தேன்; அறிமுகமாக்கியவர் மோ.ஸ்ரீ. செல்லம் அவர்கள். காந்தியடிகள் அந்த ஆண்டில் 'பாரதீய ஸாஹித்ய பரிஷத்'தின் இரண்டாவது மகாநாட்டுக்குச் சென்னையில் தலைமை தாங்கினுர். வரவேற்புத் தலைவர் ஐயரவர்கள், தமிழின் பழமை, பெருமை, பரப்பு முதலியவைபற்றி அழகான விரிவுரையாற்றினுர். அந்த விரிவுரையை ஹிந்தியில் ஆக்கும் பெரும்பேறு எனக்குக் கிடைத்ததனுல், கி.வா.ஜ.வுடன் பழகினேன். அவர் வீட்டில் அவருடன் உண்டு அமர்ந்து, ஹிந்தி ஆக்கத்தை நிறைவேற்றிச் சரிபார்த்து அச்சிட்டு வெளிக்கொணர்ந்தேன். ஐயரவர்களின் உரைநடை நூல்கள் வெளிவருவதற்குப் பொறுப்பாக இருந்தவர் கி.வா.ஜ. என்பதை அப்போது அறிந்தேன். ஐயரவர்களின் 'என் சரித்திரம்', தமிழில் புதிய முயற்சி.

இந்த உரைநடை நூல்கள் யாவும் முதலில் பத்திரிகைகளில் வெளியாயின. இவை யாவற்றையும் ஐயரவர்கள் சொல்லிச் சரிபார்க்க, பத்திரிகைகளுக்கு எழுதிக் கொடுத்தவர் கி.வா.ஜ. இந்த நூல்கள் வெளிவராமல் இருந்திருந்தால், தமிழ்நாட்டின் ஒரு நூற்றுண்டுச் சரித்திரத்தை நாம் அறிய வழியில்லாமற் போயிருக்கும். எத்தனை கவிகள், எத்தனை வள்ளல்கள், எத்தனை ரசமான நிகழ்ச்சிகள், ஏடு தேடிய படலங்கள் எத்தனை! - இவ்வளவையும் நாம் அறிந்துகொள்ளவே முடிந்திராது.

கி.வா.ஜ. மொழிப் பகையற்றவர். காசியில் பிரேம்சந்தின் புதல்வர் ஸ்ரீபத்ராய் 'ஹம்ஸ்' என்ற மாத இதழை நடத்தி வந்தபொழுது, 1937 முதல் சுமார் ஐந்தாண்டுகள், நான் தமிழ்க் கதைகள், கட்டுரைகள், கவிதைகள் பலவற்றை ஹிந்தியிலாக்கி இடைவிடாமல் காசிக்கு அனுப்பி வந்தேன். அப்பொழுது கி.வா.ஜ. எனக்குப் பெரிதும் உதவியிருக்கிறுர்.

இந்திய மொழியிலுள்ள கதைகளை, 'கல்ப-ஸம்ஸார-மாலா' என்ற தலைப்பில் தொகுத்துத் தனித்தனி நூலாக ஹிந்தியில் வெளியிட ஸ்ரீபத்ராய் விரும்பினுர்; தமிழ்ப் பகுதிக்கு முழுப் பொறுப்பையும் என்னிடம் ஒப்படைத்தார். 1938-இல் பதினெரு தமிழ்க் கதைகளைத் தொகுத்து மொழிபெயர்த்தேன். இந்தத் தொகுதியில் பெரும்பாலான கதைகள் எனக்குக் கிடைக்கக் கி.வா.ஜ. உதவினுர். இந்தப் புத்தகத்தின் இரண்டு பதிப்புக்கள் வெளி வந்து விற்றுப்போயின.

பிறகு பாரதநாட்டு எழுத்தாளர்களைப் பற்றிய சொற்சித்திரங்கள் கொண்ட 'ரேகாசித்ராங்க்' என்ற சிறப்பு மலரை ஸ்ரீபத்ராய் வெளியிட்டார். அப்பொழுதும், தமிழ் எழுத்தாளர்கள் பலரைப் பற்றிய சொற்சித்திரம் அதில் இடம் பெற எனக்குக் கி.வா.ஜ. உதவினுர்.

பம்பாயில் நான்கு ஆண்டுகள், சம்ஸ்கிருத நூல்களையும் ஹிந்தி நூல்களையும் பதிப்பிக்கும் துறையில் இருந்துவிட்டுச் சென்னையில் ஹிந்திப் பிரசார சபையில் உழைத்து வந்த என்னை ஊக்குவித்துத் தமிழில் எழுதச் செய்தவர் கி.வா.ஜ.வே. அப்பொழுது நான் அவரிடமே வந்து சேருவேன் என்று நினைத்திருக்க

வில்லை; சேர்ந்தபிறகும் இவ்வளவு காலம் நீடித்திருப்பேன் என்று நினைக்கவில்லை. இவை இரண்டும் நடந்திருப்பதற்குக் காரணம் அவருடைய நல்லியல்புதான்.

எங்களுடைய வேலையில் அவர் எப்போதும் தலையிடமாட்டார். 'இதை அப்படிச் செய்யலாமே, அதை இப்படிச் செய்யலாமே!' என்று சொல்லித் துன்புறுத்த மாட்டார். ஸ்ரீ நாராயணஸ்வாமி ஐயரோ, பிறகு ஸ்ரீ நா. ராமரத்னம் அவர்களோ என்னைக் கூப்பிட்டால், என்னவென்று கேட்க ஐயரின் அறைக்குப் போவேன். இதுபோலவே கி. தாமோதரனும், அவருக்குப் பின்பு எஸ். வி. ரமணியும் செல்வதுண்டு. நாங்கள் ஐயரிடம் ஏன் போனேம், ஐயர் என்ன சொன்னர் என்று கி.வா.ஜ. கேட்க மாட்டார். நாங்களாகச் சொன்னல் காதில் போட்டுக்கொள்வார். எங்களுக்குச் சம்பள உயர்வு கிடைக்கும்போது, 'எவ்வளவு கிடைத்தது?' என்று கேட்க மாட்டார்; நாங்களாகச் சொன்னல் மகிழ்வார். அந்த மகிழ்ச்சியில், தம்பியின் மேன்மையைக் கண்டு அண்ணனுக்கு உண்டாகும் பெருமிதம் தோற்றும்.

கலைமகள் தீபாவளி மலரில் படங்களுக்குப் பல வகையான தலைப்புக்களை எழுதிக் காண்பிப்பார். 'இவற்றைவிட நல்லதாக வேண்டும்' என்று நாங்கள் சொன்னல், மறுபடி வேறு எழுதுவார். கி.வா.ஜ.வின் கல்வியறிவு எவ்வளவு உயர்ந்ததோ, அவ்வளவு உயர்ந்தது அவருடைய அடக்கம்.

வேறு மொழிகளைப் பற்றிய செய்திகளை அறிய வேண்டுமென்றால், அந்த மொழிகளை அறிந்தவர்களிடம் கேட்க அவர் தயங்கமாட்டார். தமக்குத் தெரியாததைத் தெரிந்ததாகப் பாவித்துக்கொள்ளும் வழக்கம் அவரிடம் கிடையாது.

கி.வா.ஜ.விடம் தமிழ் கற்றவர்கள் பலர். ஒருவருக்கு ஒன்று விளங்கவில்லை என்றால் பல தடவை திருப்பித் திருப்பிச் சொல்வார். எனக்கு ஆதி சங்கரரைப் பற்றிய நிகழ்ச்சி நினைவுக்கு வரும். ஆதி சங்கரரிடம் ஒரு மாணவன் வந்தான். ஒரு விஷயத்தை அவர் எத்தனை தடவை விளக்கியும் அவன் அறிந்துகொள்ள வில்லை. பக்கத்தில் இருந்த அவருடைய முக்கியச் சிஷ்யர்களுக்கு அலுப்பாக இருந்தது. ''ஸ்வாமி, இந்த மண்டூகத்துக்காக நீங்கள் மண்டையை உடைத்துக் கொண்டு பொழுதை வீணுக்குவது உசிதமல்ல. தாங்கள் செய்ய வேண்டிய சிறந்த செயல்கள் பல இருக்கின்றன'' என்று ஒரு சிஷ்யர் துணிவுடன் கூறினர். சங்கரர் முறுவல்பூத்து, ''இவனை ஞானியாக்குவதுதான் என் வேலை; அதுதான் சிறந்த செயல். இருட்டைப் போக்குவதே ஒளியின் இயல்பு. மாணவனுடைய அறியாமையை நீக்குவதே ஆசிரியனுடைய கடமை'' என்று மொழிந்தார்.

தமிழ்ப் புத்தகங்களைப் பிழையில்லாமல் பதிப்பிக்கும் பணியை, த. நா. ஸேனுபதியும் நானும் கி.வா.ஜ.விடந்தான் கற்றுக்கொண்டோம். அதனுல் இருவருமே நன்மையடைந்திருக்கிறேம்.

இன்றைய முன்னணி எழுத்தாளர்களில் பலரைக் கி.வா.ஜ. தூண்டித் தூண்டி எழுதச் செய்திருக்கிறார். அகிலன், மாயாவி, ராஜம் கிருஷ்ணன், அநுத்தமா, ஆர். சூடாமணி, ஆர்வி, எஸ். லட்சுமி சுப்பிரமணியம், எல்லார்வி முதலியவர்களைக் 'கலைமகள்' கூட்டத்தினர் என்றே சொல்லலாம். ஆனல், தமக்கு வேண்டியவர் என்பதற்காக எந்தக் கதையையும் கி.வா.ஜ. வெளியிடுவார் என்று எதிர்பார்ப்பதோ எண்ணுவதோ தவறு. 'கலைமகளு'க்கு ஏற்றதாக இல்லை என்று கருதினல், இன்னெரு கதை எழுதச் சொல்லி அவர் நயமாக வேண்டுவார். அவர் போடும் தூபத்திலேயே அந்த எழுத்தாளர் இன்னெரு கதை எழுதுவார். சில சமயம் இப்படி ஒருவரிடமே மூன்று நான்கு கதைகள்கூட வாங்கித் திருப்பிக் கொடுத்துச் சிறந்ததாகத் தேர்ந்ததைக் கி.வா.ஜ. வெளியிட்டிருப்பது எனக்குத் தெரியும். பத்திரிகையின் தரத்தை உயர்வாக வைத்திருக்க வேண்டும் என்பதில் அவர் மிகுந்த ஆர்வமுள்ளவர்.

பழம்புலவர்களின் வாரிசாக வந்த கி.வா.ஜ., தமிழ்ப் பத்திரிகை உலகில் புதுமையை விளைவித்திருக்கிறார்; 'கலைமகளி'ன் ஆசிரியராக விளங்கியும், எல்லாப் பத்திரிகைகளுக்கும் எழுதியும் தமிழில் பல துறைகளுக்கு - நாடோடிப் பாடல், பழமொழிகள் முதலியவை உட்பட - வளமூட்டியிருக்கிறார்; நவீன எழுத்தாளர்களின் கதைகளையும் தமிழ்ப் புலவர்களின் கட்டுரைகளையும் வெளியிட்டுப் புதுமைக்கும் பழமைக்கும் உரம் தந்திருக்கிறார்; பத்திரிகையின் இலக்கியத் தரம் குறையாதபடி பார்த்துக்கொள்வதில் கண்ணும் கருத்துமாக இருந்திருக்கிறார்; தமிழ் மக்களின் ஆவல், எழுச்சி, கனவு, உணர்ச்சி, கண்ணீர், சிரிப்பு ஆகிய எல்லாவற்றுக்கும் வடிவமான தமது இலக்கியத்தில் அவர் மனிதத் தன்மையையே உயிர்நாடியாகக் கொண்டிருக்கிறார்.

கி.வா.ஜ.வின் படைப்பில் பெரும் பான்மையான பகுதி, பத்திரிகைகளில் வெளிவந்ததுதான். ஆகவே, அவருடைய வாழ்க்கையே பத்திரிகைத் தொண்டு; பத்திரிகைத் தொண்டே அவருடைய வாழ்க்கை. ★



# பழமொழிகளும் நாடோடிப் பாடல்களும்

—ந. சஞ்சீவி

## 1

அடியேன் பள்ளிச் சிறுவனுக இருந்த பருவம். கால் நூற்ருண்டும் கழிந்துவிட்டது. தமிழ்த் தாத்தா ஐயரவர்கள் திரிசிரபுரத்திற்கு எழுந்தருளியிருந்தார்கள். என் தந்தையார் திரு மு. நடேச முதலியார், உயர்திரு தி. மூ. நாராயணசாமிப் பிள்ளை ஆகியோர் முன்னின்று தமிழ்த் தாத்தாவிற்குத் திருவீதி உலாவைச் சிறப்பாக நடத்தினர்கள். ஆம், 'பட்டணப் பிரவேசம்'. அதில் இந்தக் கன்றுக்குட்டியும் கலந்து கொண்டது இன்னும் நினைவில் இருக்கிறது. அதே போல் மறவாமல் இருக்கும் மற்ற இரு நிகழ்ச்சிகள் உண்டு. ஒன்று, தமிழ்த் தாத்தா அவர்கள் எங்கள் வீட்டிற்கே எழுந்தருளி எங்களை வாழ்த்தியது. மற்ருென்று, மலைக் கோயில் நூற்றுக்கால் மண்டபத்தில் தமிழ்த் தாத்தா தலைமையில் தமிழ்த் தந்தை கி.வா.ஜ. அவர்கள் பெண்மைச் சாயல் பிறங்கத் தேனினும் இனிய தமிழ்க் குரலில் தெள்ளத் தெளிவாகப் பேசியது. அன்றுதான் கி.வா.ஜ. அவர்களை முதல்முதலாகக் கண்டேன். அதற்குப் பின் பல ஆண்டுகள் அவரைக் காணவுமில்லை; கேட்கவுமில்லை; கலந்து பழகவுமில்லை.

ஆனல் இடையில் ஒரு நாள் என் தந்தையார் நூல்நிலையத்தில் இருந்த கி.வா.ஜ.வின் 'கலைஞன் தியாகம்' கண்ணில் பட்டது. ஒரு முறைதான் அந்தப் புத்தகத்தைப் படித்தேன். அதில் வரும் 'கலைஞன் தியாக'மும் 'மிட்டாய்க் காரனு'ம் கால் நூற்ருண்டுக்கு மேலாகியும் என் கருத்தை விட்டு விடை பெறவில்லை.

## 2

சில ஆண்டுகட்குப் பின் சென்னையில் ஒரு நாள் அடியேனின் ஆசிரியப் பெருந்தகையருள் ஒருவராகிய பேராசிரியர் அ. ச. ஞானசம்பந்தன் அவர்கள் வீட்டில் கி.வா.ஜ. அவர்களைக் கண்டேன்; அறிமுகம் செய்து வைக்கப் பெற்றேன். என் தந்தையார் மேலிருந்த அன்பால் - அவர் தமிழ்த் தாத்தாவிடம் வைத்திருந்த பக்தியை நினைந்து - என்னைக் கட்டித் தழுவிக்கொண்டார். அவ்வமயம் அவர் எனக்குப் பொன்னுன அறிவுரை ஒன்று புகன்ருர்: 'பாடல்களை எவ்வளவு மனப்பாடம் செய்ய முடியுமோ அவ்வளவு மனப்பாடம் செய்துகொள்ள வேண்டும். வேட்டைக்குப் போகிறவனுக்கு அம்பருத் தூணியில் ஏராளமான அம்புகள் இருப்பதைப் போலப் பேச்சாளனுக்குப் பாடல்கள் மனப்பாடமாக இருப்பது.'

இவ்வறிவுரை - செறிவுரை - அடிக்கடி அடியேன் நினைவுக்கு வரும்; கூடவே கண்ணீரையும் கூட்டி வரும்.

## 3

சென்னையில் கம்பர் கழகம் என்ற ஒன்று இருப்பதை - இருந்ததை - எவரும் அறிவர். திரு க. சோமசுந்தரம் செயலாளராய் இருந்து அக் கழகத்தைச் சிறப்புற நடத்தியதையும் - நடத்துவதையும் அனைவரும் அறிவர். ஒரு முறை கம்பர் களம் வம்பர் களமாய் - போர்க்களமாய் - மாறியதையும் எல்லோரும் அறிவர். அக் கம்பர் கழகச் சார்பில் 1945-இல் கம்பர் பற்றிய ஒரு பேச்சுப் போட்டி மாநிலம் முழுவதற்குமாய் நடந்தது. சிந்தாதிரிப்பேட்டை உயர்நிலைப் பள்ளியில் நடந்த அப் போட்டிக்கு நடுவணர்களாய் இருந்தோர் மூவர். அவர்கள் பேராசிரியர்கள் ரா. பி. சேதுப் பிள்ளை, தெ. பொ. மீனுட்சிசுந்தரனர், ஈ. த. இராஜேசுவரி அம்மையார். அப் போட்டியில் பலர் கலந்துகொண்டனர். ஆண்டவன் அருளால் அடியேனுக்கு முதற்பரிசு கிடைத்தது. அப் பரிசுக்கு உரிய நூல்களைத் தேர்ந்தெடுக்கும் உரிமை, பரிசு பெற்ற மாணவனுக்கே விடப்பெற்றது. அதனல் அடியேன் இருபதுக்கு மேற்பட்ட (பரிசுத் தொகைக்கு ஏற்ற) நூற்பட்டியல் ஒன்றைத் தயாரித்துக் கொடுத்தேன். அத்தனை புத்தகங்க

ளிலும் கம்பர் கழகத் தலைவர் என்ற முறையில் கி.வா.ஜ. தாமே கையொப்ப மிட்டுத் தந்துள்ளார்கள். இருபது ஆண்டு கட்கு முன்பு பரிசாய்ப் பெற்ற அப் புத்தகங்கள் அனைத்தையும் இன்றும் கண்ணேபோலக் காத்து வருகின்றேன். ஆம், கற்று வருகிறேன் என்று சொல்ல இயலாவிடினும் காத்து வருகிறேன் என்று சொல்லலாம் அல்லவா?

## 4

இந் நிகழ்ச்சிக்குப் பின் கி.வா.ஜ. அவர்களைப்பற்றி என் எண்ணத்தில் அழி யாது இருக்கும் ஒரு காட்சி, 1950-இல் கோவையில் கூடிய தமிழ் வளர்ச்சிக் கழக மாநாட்டில் கட்டாய இந்தியை எதிர்த்து ஸர் ஆர். கே. சண்முகம் செட்டியார் முன்மொழிந்த முடிவை நம் கி.வா.ஜ. அவர்கள் வழிமொழிந்து ஆதரித்ததே ஆகும். அன்று அவர் பேசியது எதுவும் என் ஏழை நினைவில் வாழவில்லை. ஆனால் அறிஞர் ஆர். கே. எஸ். அவர்களும் மதிக்கும் அந்தணாளராய் அவர் விளங்கிய காட்சி மட்டும் இன்றும் என் நினைவுத் திரையில் நீங்காது நிலைத்து நிற்கிறது.

## 5

1950-ஆம் ஆண்டு ஜூலை முதல் *1960* மார்ச் முடிய, காஞ்சிபுரம் பச்சை யப்பர் கல்லூரியில் அடியேன் தமிழ்ப் பணி ஆற்றினேன். அந்தப் பருவத்தில் தான் - சிறப்பாகப் பிந்திய ஐந்து ஆண்டு களில்தான் - கி.வா.ஜ. அவர்களின் அருளை யான் பெரிதும் பெற்றேன். தொடர்ந்து கலைமகளில் கட்டுரைகள் எழுதத் தூண்டினார்கள். எழுதிய கட் டுரைகள் எல்லாவற்றையும் அப்படியே அச்சேற்றி என்னை ஆளாக்கிவிட்டார்கள். இரு முறை தீபாவளி மலரில் என் எழுத்து களை வெளியிட்டு என்னைப் பலர்புகழ் எழுத்தாளனாய் ஆக்கினார்கள். உண்மை யைச் சொன்னால் என்னைப் பலரும் பாராட்டும் எழுத்தாளனாய் ஆக்கியது 'கலைமகள்'தான்; கி.வா.ஜ.வின் கருணை தான். இந்தக் கருணை என்மீது அவர் கட்கு ஏற்படக் காரணம் என்ன? ஒரே ஒரு காரணந்தான்: தம் ஆசிரியப் பெரு மானாகிய தமிழ்த் தாத்தாவின் தலையாய அடியான் ஒருவனின் எச்சம் அடியேன் என்பதுதான். கி.வா.ஜ. வின் கண்பட்ட காரணமே இன்று அடியேன் பலர் கண் படும் நிலையில் இருக்கிறேன்.

கலைமகளில் இன்றும் - இன்னும் - நான் எழுதலாம். ஆனால் ஒரு வகையில் என் பணி எனக்குப் பிணி! என்னைப் பார்க்கும் போதெல்லாம் அப் பணிப் பிணிபற்றி அடியேன் கூறக் கேட்டுக் கி.வா.ஜ.வின் அருள் உள்ளம் மருளும்!

## 6

கி.வா.ஜ.வின் தமிழ் எழுத்து அடியேன் உள்ளத்தைக் கவர்ந்த அமிழ்த எழுத்து. அந்த எழுத்தைத் தெய்வ மென வழுத்தும் உள்ளம் அடியேன் உள்ளம். அத்தகைய என் உள்ளம் ஒரு நாள் என்னிலும் ஆயிர மடங்கு பெரிய ஒருவர் அவர் எழுத்தைப் போற்றும் ஏற்றம் கண்டு துணுக்குற்றது.

பதினாறு ஆண்டுகட்கு முன்பு ஒரு நாள் மாலை அடியேனின் வணக்கத்துக்கு உரிய பேராசிரியப் பெருந்தகை டாக்டர் மு. வ. அவர்களிடம் கல்லூரி மாணவன் என்ற முறையில் - உரிமையில் - அளவளாவிக் கொண் டிருந்தேன். எப்படியோ பேச்சு, கி.வா.ஜ. அவர்கள் எழுத்தைப் பற்றித் திரும்பியது. பேசுவதெல்லாம் 'உபதேசம்' போலவே அமையப் பேசும் பெருந்தவம் பெற்ற பேராசிரியரின் ஒளி சிந்தும் விழிகள் என் விழிகளில் கலக்க, உவகை சிந்தும் உதடுகளால் அவர் என் காதில் ஓதினார்: ''அவர் எழுத்து உயர்ந்த எழுத்து. என் மனைவி தமிழ் கற்க வேண் டும் என்று விரும்பியபோது யான் தந்த முதற் புத்தகங்களுள் ஒன்று கி.வா.ஜ. வின் 'காவியமும் ஓவியமும்'.''

## 7

கி. வா. ஜ.வின் எழுத்தைப் போலவே அவர் பேச்சிலும் நெஞ்சைப் பறி கொடுப்பவன் அடியேன். என்ன காரணம்? ஒன்றே ஒன்றுதான்: அவர் எதை எழுதினாலும் எதைப் பேசினாலும் அதில் இருக்கும் தெளிவுதான். ஆம், தெளிவின் பெயர் கி.வா.ஜ. இவ்வாறு இயம்புவது சற்றும் மிகையாகாது. இலக் கியம் பற்றியும் சமயம் பற்றியும் அவர் எழுதும் எழுத்தும் பேசும் பேச்சும் எளி மையையும் இனிமையையும் இரு சக்கரங் களாய்க் கொண்டு, துகளற்ற தூய நெறியில் ஓடும் தெளிவுத் தேரே ஆகும். ஆம், அந்தத் தேரில் ஏறிவரும் தமிழ்த் தெய்வத்தின் முன், வெள்ளைவெளேரென உடையும் நம் அறியாமைத் தேங்காயை உடைப்போமாக! ஞானத்தீப் பட்டதும் புகைந்தே போகும் நம் ஆணவக் கர்ப் பூரத்தைக் கொளுத்துவோமாக!

## 8

கி. வா. ஜ. தமிழ்க் கலைஞர்; தெய்வத் தமிழ்க் கலைஞர். எதிலும் - எப்போதும் - கலையின் வண்ணமாய் வடிவமாய் விளங்கும் கலைஞர். அவர்தம் கலையுணர்வின் அகம் கடவுள்; புறம் தமிழ். வேறு வகையில் விளம்பினால் விதிவிலக்கான விழுமிய கலைஞர் கி.வா.ஜ. அவர் வெறும் உணர்வுக் கலைஞர் அல்லர்;

உயர்வுக் கலைஞர்; உண்மைக் கலைஞர்; ஒழுக்கக் கலைஞர். கலையைக் காசாக்கிக் கறி(ரி)யாக்கும் கலை அவர் கனவிலும் கல்லாக் கலை. கலையைக் கடவுளுக்குக் காணிக்கையாக்கும் கலை ஒன்றே அவருக்குக் கைவரப் பெற்றது. அவர் எழுத்தையும் பேச்சையும் நுகர்ந்தவர் எவ்வளவோ உயர்ந்திருப்பரே ஒழிய எள்ளளவும் இழிந்திரார். ஆணையிட்டுச் சொல்லத்தக்க மதிப்பீடு இது.

## 9

தமிழர் கி.வா.ஜ.விடம் அடியேன் கண்ட அரிய பண்புகள் இரண்டு. ஒன்று, அவருடைய பொறை; மற்ருென்று, அவருடைய நிறை. எவ்வளவு மாருன கருத்தை - மனத்தைப் புண்படுத்தும் கருத்தை-ப் பேசுவோரிடமும் சினந்து நடவாச் சீர்மை அவர் பொறைக்கு உரைகல். எவரையும் உயர்த்த உதவும் பெருந்தன்மை அவர் நிறைக்குக் கட்டளைக் கல்.

ஒரு முறை காரைக்குடி, கம்பர் விழாவில் அவர் பேசியபின் அவரிடம் ஒருவர் வந்து 'அங்கலாய்த்து'க்கொண்டார்: ''என்ன ஐயா, இந்தக் காலத்தில் எதை எதையோ பேசுகிருர்கள். பழங்காலம் மாதிரி, பாட்டிற்குப் பொருள் தெரிந்து பேசுவதாக இல்லையே!'' என்ருர் அவர். கி.வா.ஜ.வின் உள்ளத்தைக் குத்திக் கீறியிருக்க வேண்டும் அச் சொற்கள். சற்றே உணர்ச்சியோடு - ஆத்திரத்தோடு அன்று - 'அங்கலாய்த்த'வரைப் பார்த்து, ''என்ன பேசவில்லை என்கிறீர்கள்? என்ன தெரிந்துகொள்ளவில்லை என்கிறீர்கள்?'' என்று வினவினர். அப்புறம் பொருந்தா உரை - நயம் - சொல்லும் பழைய 'உருட்டல்' போக்குக்கு ஒரு சான்றைச் சொல்லி, ''இப்படிப் பேச வேண்டும் என்கிறீர்களா?'' என்ருர். குட்ட வந்தவர் எட்டத் தொலைந்தார்! புண்பட்ட நேரத்திலும் பண்பட்ட மனிதர் கி.வா.ஜ. இது கி.வா.ஜ.வின் பொறையின் பண்பு.

எப்போதும் சிலேடைச் சுவையோடு பேசும் கி.வா.ஜ.வின் சிறப்பு இயல்பை அவரோடு பழகிய பலரும் அறிவர். ஆனல் அவர்தம் மற்ருெரு பண்பை, வெம்மை வாட்டும் வேளையிலும் தன்மை கூட்டும் தமிழ்ப் பண்பைச் சிலரே அறிவர்.

ஒரு முறை தமிழ் உரைநடைபற்றி ஒரு கருத்தரங்கு நடந்தது. அதில் கூறத்தகாதன சில கூறப்பட்டன. தலைமை தாங்கிய செந்தமிழ்க் காவலர் டாக்டர் அ. சிதம்பரநாதர் கண்கள் சினத்தீச் சிந்தின; சொற்கள் இடியெனப் புடைத்தன. மேடையை விட்டு இறங்கியபின்னும் அவர் கண்கள் சிவப்பு மாரு நிலை பெற்றன. எல்லோரும் எட்ட நின்றனர். அப்போது கி.வா.ஜ. சற்றே கிட்டச் சென்று, ''என்மேல் தங்கட்கு எதுவும் சினம் இல்லையே!'' என்ருர். உடனே டாக்டர், ''ஐயோ, உங்கள்மேல் என்ன இருக்கிறது!'' என்று கூறிச் சிரித்துவிட்டார்.

## 10

இனி அவர் நிறையின் பயனை நினைப்போம். அண்மையில் கோலாலம்பூரில் உலகத் தமிழாராய்ச்சி மாநாடு-முதல் மாநாடு - நடந்ததை அனைவரும் அறிவர். அதற்குச் சென்று வந்த சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியர் டாக்டர் மு.வ. அவர்கள், பல்கலைக் கழகத்தில் உள்ள மொழியாய்வு வட்டம் தமக்குத் தந்த வரவேற்பில் பேசும்போது ஓரிடத்தில், ''அயல் நாட்டு அறிஞர் பலர் அந்த மாநாட்டிற்கு வந்திருந்தார்கள். அகிலனின் நாவல்களைப் பற்றி ஓர் ஆராய்ச்சியாளர் கருத்துரைகள் கூறியபோது ஆர்வத்தோடும் அகமகிழ்வோடும் அவர்கள் செவி மடுத்தார்கள்'' என்று குறிப்பிட்டார். இந்த நிலை அகிலனுக்கு வந்தது யாரால்? கி.வா.ஜ.வால். இது உண்மை என்பது எவருக்கும் தெரியும்; எல்லோர்க்கும் தெரியும். கண்காணுக் கடவுள் எத்தனையோ பேருக்கு ஆற்றலை மட்டுந்தான் தருகிருன்; ஒரு சிலருக்கே கி.வா.ஜ. போன்ற சான்ருேர்களின் ஆதரவைப் பெறும் ஆகூழையும் சேர்த்துத் தருகிருன். அவன் என்ன செய்வான்! அவரவர் வினை! ஒருவரிடம் ஒரு சிறு தகுதியைக் கண்டாலும் எப்படியாவது அதை வளர வைப்போம், வாழ வைப்போம் என்று நினைக்கும் சங்கத் தமிழ் உள்ளம் கி.வா.ஜ.வின் சால்புள்ளம். அப்படி அவர் நினைத்த நினைப்பால் என் போன்ருரே நாடு போற்றும் நன்னிலையைக் காண நம்பிக்கை கொள்ளும்போது, அகிலனைப் போன்ற உண்மைத் தகுதியுடையார் அகிலம் போற்றும் பெருமையைப் பெறுவதில் என்ன வியப்பு?

## 11

தமிழ் அன்பர்களை - அறிஞர்களை - ஆதரிப்பதே கி. வா. ஜ.வுக்குத் தனி மானியம் தருவது போலும்! எத்தனை பேரை அவர் எப்படியெல்லாம் ஆதரித்து வாழ்வித்துள்ளாரோ? ஆண்டவன் அறிவான்! ஆம், மனிதர் அறியார். காரணம், அவர் தம்மைப்பற்றிப் பறையடிக்கும் தன்மையர் அல்லர் அன்ருே?

எனக்கு மட்டுமே அவர் எவ்வளவு ஆதரவு தந்துள்ளார்! 'கலைமகள்' எழுத்தாளனுய் என்னை அவர் ஆக்கிய

மைக்கே அவர்க்கு நான் எழுமையும் கடமைப்பட்டுள்ளேன். எவ்வளவு பெருஞ் சிறப்பு அது! எத்தனே பேர் அது அடை யாமல் ஏங்குகின்றனர்! அடியேன் கட்டுரையைக் கலேமகளில் வெளியிட்ட ஒவ்வொரு முறையும் என்னே - என் எழுத்தை-ப் போற்றி எழுதி ஊக்குவித்த அவர் உள்ளன்பை என்னென்று போற் றுவேன்? கலேமகளில் வெளிவந்த கட்டுரைகளே நூலாக்கியுள்ளேன். அப் படி ஆக்கிய இரு நூல்களுள்ளும் அக் கட்டுரைகளேப் பற்றிக் கலேமகள் ஆசிரியர் எழுதிய புகழ் மொழிகளேக் 'கலேமகள் கருத்து' என்ற தலேப்பில் அச்சிட்டு அவற்றையே அந் நூல்கட்கு முன்னுரையாய்க் கிடைத்த பொன் னுரை என்று போற்றியிருக்கிறேன். போதாக் குறைக்கு அடியேனுடைய 'இரு பெருந் தலேவர்' என்ற நூலுக்கு அரியதோர் அணிந்துரை வழங்கி வாழ்த்தி யுள்ளார் அருள்வள்ளல் கி.வா.ஜ. அவர்க்கு அடியேன் என்ன கைம்மாறு செய்ய வல்லேன்?

## 12

தமிழ் இலக்கியத் துறையில் கி.வா.ஜ.வின் தனிச் சிறப்பு யாது? பெரும் பேராசிரியர் தெ. பொ. மீனுட்சிசுந்தரனுர் அவர்களே தமது துலேநாவால் எடைபோட்டு எடுத்துக்காட்டிப் போற்றியிருக்கும் ஒரு பெருஞ் சிறப்பே அது. அது எது? பழமைக் கும் புதுமைக்கும் பாலமிட்ட பண்பே. பாலமிட்ட பண்பு மட்டுமன்று, பால மிட்ட புலமையே கி.வா.ஜ.வின் பெருமை. தமிழ் 'வித்துவான்' தேர்வில் முதல் வராய்த் தேர்ச்சி பெற்றுத் திருப்பனந் தாள் மடத்தின் ஆயிரம் ரூபாய்ப் பரிசு பெற்று, எத்தனேயோ சங்கத் தமிழ் நூல்கட்கு இனிய விளக்கங்கள் வரைந்து புலவர் பெருமக்களின் போற்றுதலேப் பெற்ற அவரேதாம் புதுமை எழுத்தாளர்களின் போற்று தலேப் பெற்ற தமது சிறுகதைத் தொகுப்புகளுள் ஒன்ருகிய 'அறுந்த தந்தி'க்குத் தமிழ் வளர்ச்சிக் கழகத் தின் ஐந்நூறு ரூபாய்ப் பரிசையும் பதினறு ஆண்டுகட்கு முன்பு பெற்ருர்.

சிறந்த சிறுகதை எழுத்தாளராய் விளங்கும் கி. வா. ஜ. சிறந்த நாடோடிப் பாடல்களின் நண்பர். அப் பாட்டுகளின் அருமை பெருமைகளேப் புலவர் உலகமும் போற்ற அவர் ஆக்கி யுள்ள நூல்கள், பரந்த புலமை படைத்த ஒருவர் விரிந்த மனப்பாங்கும் படைத்த வராய் விளங்க வேண்டும் என்பதற்குச் சிறந்ததோர் எடுத்துக்காட்டு ஆகும்.

நாடோடிப் பாடல்களில் கி. வா. ஜ. வுக்கு உள்ள ஈடுபாடு வெறும் புத்தக விற்பனேக்கான ஈடுபாடு அன்று என்று காட்ட, ஈண்டு ஒரு சிறந்த நிகழ்ச்சியைக் குறிப்பிடலாம்.

பதினறு ஆண்டுகட்கு முன்பு பூம் புகாரில் (காவிரிப்பூம்பட்டினத்தில்) பேரறிஞர் ஸர் ஆர். கே. சண்முகம் அவர்கள் முயற்சியால் சிலப்பதிகார மாநாடு ஒன்று கூடியது. அம் மாநாட் டில் அழகிய சொற்பொழிவு ஒன்று செய்த கி.வா.ஜ.வும் நண்பர் பலரும் காவிரி கடலொடு கலக்கும் எழில் தவ ழும் இடத்தில் அமர்ந்தனர். அப்போது அங்கிருந்த அனேவர் நெஞ்சும் தித்திக்கச் செய்தது ஒன்று. அது கி.வா.ஜ.வின் நாடோடிப் பாடல்களின் நயம் பற்றிய சுவை நிறைந்த பேச்சே ஆம். அனேவரும் இயற்கை அழகையும் மறந்து, நாடோடி இலக்கிய இன்பக் கடலில் நீராட, 'சங்குச் சக்கர சாமி வந்து சிங்குச் சிங்குன்னு' ஆடியதைக் கி.வா.ஜ. பாடிக் காட்டிய அழகு இன்னும் அடியேன் நினைவில் பளிச்சென்று வாழ்கிறது.

காவிரிநீர் புதுநீர்; கடல்நீர் பழநீர். இரு நீரும் ஒரு நீராய்க் கலக்கும் முந்நீர் முனேயில் அன்று அடியேன் கண்ட கி.வா.ஜ. பழமைக்குப் பழமை, புதுமைக் குப் புதுமை!

நாடோடிப் பாடல்களின் நண்பராய்க் கி. வா. ஜ. விளங்குவதைப் போலவே பழமொழிகளின் பாதுகாவலராயும் திகழும் திறமே திறம். ஆயிரம் ஆயிரம் பழமொழிகளே அகர வரிசைப்படுத்தி அவர் தொகுத்து வைத்திருக்கும் அயரா உழைப்பு, புலவர் பலரும் பார்த்து இன்புற்றுப் பின்பற்றத் தக்கது. காஞ்சி புரம் பச்சையப்பர் கல்லூரியில் அடியேன் பணிபுரிந்தபோது மாணவ நண் பர்களிடமும் மற்ற நண்பர்களிடமும் கேட்டுத் திரட்டிய பழமொழிகளே அவர் கட்கு அனுப்பியது உண்டு. அவற்றை யெல்லாம் பார்த்துவிட்டு, ''பெரும் பாலான பழமொழிகள் முன்னமே தெரிந்தவையே; சிலவே புதியவை. ஆனுல் இப்போதெல்லாம் ஒன்றிரண்டு கிடைப்பினும் மகிழ்ச்சியே'' என்று ஒரு கடிதத்தில் அவர்கள் எழுதியிருந்தார்கள். வைக்கோற் போருக்குள் வைரத்தைக் கண்டவன் அடையும் மகிழ்ச்சி, ஆராய்ச்சியாளன் ஆராய்ச்சித் துறையில் உழன்றபின் அடையும் உவகை என் பதை அந்த மகவைப் பெற்றவரே - துன்புற்றுப் பெற்ற இன்பினரே - அறிவர்!

## 13

இலக்கிய-இலக்கண சமய-மெய்ப் பொருள் துறையில் கி.வா.ஜ.வின்

தனிப்பெருந் தொண்டு யாது? ஓதற்கரியவற்றை எல்லாம் ஓதற்கெளியன வாய்ச் செய்த ஒப்பற்ற தொண்டே அவர் செய்த தனிப் பெருந் தொண்டு; தனிப் பெருந் தமிழ்த் தொண்டு; தனிப் பெருந் தெய்வத் தொண்டு.

இரண்டோர் ஆராய்ச்சி நூல்களைத் தவிர, கி.வா.ஜ. அவர்கள் எழுதியுள்ள நூற்றுக் கணக்கான நூல்கள் இத் திருத் தொண்டின் வழி வந்தவையே. அறியாதாரையும் அறியச் செய்யும் அந்த நூல்களுள் ஒவ்வொன்றும் ஓர் ஒளி விளக்கு.

கி.வா.ஜ.வின் ஆராய்ச்சி நூல்களிலும் ஆராயப்படும் பொருள் வலியது ஆயினும் ஆராயும் முறை எளிமையும் தெளிவும் இனிமையும் நிறைந்தது என்பதை எவரும் மறுக்க முடியாது.

இந்த முத்திறமும் ஆசிரியரின் உரை நடையில் மட்டுந்தான் காணக்கூடும் என்று எண்ண வேண்டா. அவர்தம் பாடல்களிலும் அவற்றைக் காணலாம். அதை அவரே அறிந்துதானே தம் நண்பர்கட்குச் செய்யுள் கடிதமும் தீட்டுகிறார்!

## 14

தமிழ் எழுத்தாளர் சங்கம் போன்ற நிறுவனங்களில் ஆண்டுக்கு ஒரு முறை நடைபெறும் மாநாட்டில் 'எழுத்தாளர் அறிமுகம்' ஒரு பகுதி. பல முறை கி.வா.ஜ. அதில் தம்மை அறிமுகப்படுத்திக் கொள்வதைப் பார்த்திருக்கிறேன். அவர் செய்துகொள்ளும் அறிமுகம் இதுதான்: 'கலைமகள் தொண்டன் கி. வா. ஜகந்நாதன்.'

கி.வா.ஜ. அவர்கள் கலைமகள் தொண்டராய்க் கடந்த ஒரு தலைமுறைக் காலத்தில் ஆற்றியுள்ள அரும்பணிகள், ஒரு பல்கலைக் கழக ஆராய்ச்சிப் பட்டம் ஒன்றுக்கே உரிய நூலில் சிறப்பித்துப் போற்றத் தக்க சீர்மை படைத்தவை. சிறந்த ஒவ்வொரு தமிழ் இதழின் தொண்டையும் ஆராய்ந்து ஆராய்ச்சி நூல்கள் மலர வேண்டும் என்பது என் நெடுங்காலக் கனவு. அக் கனவு நனவாகும் காலத்தில் - கலைமகளின் தொண்டுபற்றிய தனி நூல் பிறக்கும் வேளையில் - கி.வா.ஜ.வின் பெயர் பொன்னெழுத்துகளால் பொறிக்கப் படல் உறுதி.

கி. வா.ஜ.வை ஆசிரியராகக் கொண்ட கலைமகள் இல்லையேல் தமிழ் மொழியில் இலக்கிய ஆராய்ச்சி பற்றிய முதல் நூலாகிய அறிஞர் திரு அ.ச. ஞானசம்பந்தன் அவர்களின் 'இலக்கியக் கலை' ஒளி வீசியிருக்குமோ? ஒவ்வொரு தமிழனும் தன் உயிரெனப் போற்றத் தக்க வரலாற்று உண்மைகளை வாரி வழங்கும் திரு தி. நா. சுப்பிரமணியன் அவர்களின் வரலாற்று ஆய்வுகள் வாழ்வு பெற்றிருக்குமோ? சில ஆண்டுகட்கு முன்புவரை தமிழ் வழங்கா மாநிலத்தில் பல ஆண்டுகள் தகையுண்டு வாழ்ந்த, மனத்திற்கு இனிய, மாயாவி போன்றுரைத் தமிழ் நிலத்தில் குடி இல்லாவிடினும் தமிழ் நெஞ்சில் குடி இருக்கச் செய்திருக்க முடியுமோ? மெய்ப்பொருட் கவிஞர் கோமுகி வேலரின் புகழ் பூத்திருக்குமோ?

எத்தனை எத்தனையோ எழுத்தாளர் வரிசைகளும், எழுத்து வகைகளும் தமிழ்த் தாய்க்குப் பரிசுகளாகக் குவிந்திருக்குமோ? எண்ணற்ற இழுப்புகளும் வழுக்கல்களும் நிறைந்த இந்தத் தமிழ்நாட்டில் மிகப் பெரும் அளவிற்குத் தன் நிலை குலையாமல் ஓரிதழ் - அதுவும் திங்கள் இதழ் - திகழ்கிறது என்றால் அது கலைமகள்தான்; அதற்குக் காரணம் கி.வா.ஜ.தாம்.

## 15

1950 - ஆம் ஆண்டு அடியேன் பச்சையப்பர் கல்லூரியில் மூன்றாவது ஆனர்ஸ் வகுப்பில் இருந்தேன். அப்போது பச்சையப்பர் விடுதியில் இருந்த மாணவர்கள், ஒவ்வொரு திங்களும் கலைமகளின் புதிய இதழைப் பார்க்கத் துடித்தவண்ணம் இருப்பார்கள். அதற்கு ஒரே காரணம், தங்களோடு மாணவராய் இருப்பினும் தங்கள் மதிப்பிற்கும் பெருமைக்கும் வணக்கத்திற்கும் உரியவராய் விளங்கிய நண்பர், சிறை சென்ற செம்மல், செந்தமிழ் அண்ணல் திரு கு. இராஜவேலுவின் நாராயண சாமி ஐயர் பரிசு பெற்ற நாவலைச் 'சுடச்சுட'ப் படிக்க வேண்டும் என்பதே.

## 16

கி.வா.ஜ. அவர்கள் குறையற்ற நாட்டுப் பற்றுளர்; குற்றமற்ற கடவுட் பற்றுளர். அவர்தம் நாட்டுப் பற்றை அவர்தம் உடையே உணர்த்தும். அவர்தம் கடவுட் பற்றை அவர்தம் தோற்றமே தெரிவிக்கும். நீறில்லா நெற்றியை என்றும் எவரும் அவரிடம் காண இயலாது.

நடமாடும் தெய்வமென நான்மறையோர் நவிலும் குருமணி - நம் கலியுகத்தில் கடுந்தவப் பயனுய்க் காட்சி தரும் கற்பகக் கனி - காஞ்சிப் பெரியவர்களின் மாட்சியில் கி.வா.ஜ. அவர்கட்கு உள்ள ஈடுபாடு, உருகாத உள்ளங்களையும் உருகச் செய்யும். ஒரு முறை உயர்திரு தி. மூ. நாராயணசாமிப் பிள்ளை அவர்களும் கி.வா.ஜ.வும் திருவானைக்காத் திருப்பணி பற்றிப் பெரியவர்களிடம் உரையாடிக்கொண்டிருந்த

போது அருகிருக்கும் வாய்ப்பு அடியேனுக்குக் கிடைத்தது. அப்போது பெரியவர்கள் கி.வா.ஜ.விடம் வைத்திருக்கும் அன்பையும் மதிப்பையும் கண்டு அடியேன் புல்லரித்துப் போனேன்.

## 17

தமிழ் வளர்ச்சி ஆராய்ச்சி மன்றம் பற்றித் தமிழறிஞர் அறிவர். அதில் உறுப்பினனாய் இருக்கும் பேறு அடியேனுக்கும் கிடைத்திருக்கிறது. அது இந்த ஏழைக்கு நம் மாட்சிமிகு முதல்வர் இட்ட பிச்சை. அதை ஏற்றிருந்த நிலையில் - அம் மன்றக் கூட்டம் ஒன்றில் - அம் மன்றத்தின் உட்குழு ஒன்றை - உயர் குழு ஒன்றை - உருவாக்க வேண்டிய இன்றியமையாமை எழுந்தது. அப்போது அதில் உறுப்பினராய் இருக்க வேண்டும் என்று நம் மாட்சிமிகு முதல்வர் விரும்பிச் சொன்ன ஒரு பெயர் கி.வா.ஜ.வின் பெயர்தான். அது காரணமாகவே மாட்சிமிகு முதல்வர் தம் பெயரை மொழியும் வரை, வேலைப் பளுவால் 'எந்த வேலையும் தராதீர்கள்' என்று வற்புறுத்திக்கொண்டு இருந்த கி.வா.ஜ., பிறிதொரு மாற்றம் பேசாப் பெருந்தகை ஆனார்.

இது எதைக் காட்டுகிறது? அறிஞர் கி.வா.ஜ.வுக்கு ஆன்மிகத் தலைவரின் அருள் எவ்வளவு நிரம்ப உண்டோ அவ்வளவு நிரம்பவே அரசியல் தலைவரின் ஆதரவும் உண்டு என்பதையே ஆகும்.

## 18

கி.வா.ஜ. அவர்கள் ஓயாமல் படிக்கிறார்; ஓயாமல் எழுதுகிறார்; ஓயாமல் பேசுகிறார். மண்ணவர் மகிழப் பேசும் அவர் இப்பொழுதெல்லாம் விண்ணவரும் வியக்க வானொலியிலும் 'அருள்வாக்கு' வழங்கி வருகிறார். இதற்கும் மேலாக ஊர் ஊராக - ஏன், நாடு நாடாகவும் - சுற்றிச் சுற்றிச் சொன்மழை பொழிந்து வருகிறார். பசையற்ற உள்ளங்கள் பசைபெறவும், பசைபெற்ற உள்ளங்கள் பசுமை பெறவும் தமிழ் மழை - தெய்வமழை - பொழிந்து வருகிறார். கி.வா.ஜ.வுக்குத் தமிழே தெய்வம்; தமிழ்த் தெய்வமே தெய்வம். தமிழுக்குத் - தமிழ் தெய்வத்திற்குத் - தனிப் பெருந் தொண்டாற்றி வரும் அவருக்குத் தமிழ் மக்கள் எவ்வளவு பொற்கிழிகள் வழங்கிப் போற்றக் கடமைப் பட்டவர்கள்? இந்நாளில் நாம் எல்லோரும் மன்னர் அன்றோ? பழைய மன்னர் மரபைக் காக்க வேண்டியது புதிய மன்னர் பொறுப்பன்றோ?

இவ்வளவு ஊர்களைச் சுற்ற - இவ்வளவு சொற்பொழிவுகளைச் செய்ய - இவ்வளவு எழுத்துக்களை எழுதக் கி.வா.ஜ.வுக்குப் பொறுமையும் காலமும் எங்கிருந்துதான் கிடைக்கின்றனவோ? அந்த மந்திரத்தையும் தந்திரத்தையும் எல்லோர்க்கும் அவர் கற்றுத்தரல் ஆகாதோ?

அவரை நினைக்கும்போதெல்லாம் என்னை நினைக்கும் திருக்குறள் ஒன்று உண்டு! அவரை நினைக்கும் ஒவ்வொரு முறையும் 'புரை' ஏறச் செய்யும் அந்தக் குறளை உங்கட்குச் சொல்வேன். ஏறட்டும் திருக்குறள் 'புரை' எல்லோர்க்கும்!

அன்பறிவு தேற்றம் அவாவின்மை
இந்நான்கும்
நன்குடையான் கட்டே தெளிவு.
—திருக்குறள், 513.

[அன்பு, அறிவு, ஐயமில்லாமல் தெளியும் ஆற்றல், அவா இல்லாமை ஆகிய இந் நான்கு பண்புகளையும் நிலையாக உடையவனைத் தெளியலாம்.
— டாக்டர் மு. வ. தெளிவுரை]

கி.வா.ஜ.வின் அன்பு, பகையாளியையும் கவரும் அன்பு. அவர் அறிவு, படிப்பாளியையும் கவ்வும் அறிவு. அவர் தெளிவு, பகையாளியையும் படிப்பாளியையும் தெளிய வைக்கும் தெளிவு. அவர் அவாவின்மையோ - பகையாளியும் படிப்பாளியும் இருக்கட்டும் - பண்பாளியையும் ஈர்க்கும் பண்பு.

பதினாயிரக் கணக்கானவர் அவர் அன்பை அறிவர்; ஆயிரக் கணக்கானவர் அவர் அறிவைப் போற்றுவர்; நூற்றுக் கணக்கானவர் அவர் தெளிவைத் தேர்வர்; ஆனால் பத்துக் கணக்கானவரே அவர் அவாவின்மைப் பண்பை - அரிய பெரிய பண்பை - அறிதல் கூடும். அவருக்கு உடை அன்பு; உடல் அறிவு; உள்ளம் தெளிவு; உயிர் அவாவின்மை. அவர் உடை எல்லோர்க்கும் தெரியும்; அவர் உடல் பல்லோர்க்கும் தெரியும்; அவர் உள்ளமோ சில்லோர்க்கே தெரியும்; அவர் உயிரையோ ஆண்டவனே அறிவான்!

## 19

மணிவிழாக் கொள்ளும் கி.வா.ஜ. நூற்றாண்டு அணிவிழாக் கொண்டாட நன்றியோடும் பணிவோடும் பல்லாண்டு பல்லாண்டு பகர்கிறேன்; வாழ்த்துகிறேன்.

அவர் வாழ்வார்! நாம் வாழ்வோம்! 'தமிழ்த் தாத்தா தந்த தமிழ்த் தந்தை வாழ்க!' எனும் தமிழ்ப் போர் முழக்கத்திற்கிடையே அவரை யான் இரக்கும் பரிசு ஒன்றே ஒன்று உண்டு. அது, அவர் ஆசிரியப் பெருந்தகையார் அவருடைய ஆசிரியர் வரலாற்றை விரிவாக எழுதித் தமிழன்னை உளங்குளிரச் செய்ததுபோல, இவர்களும் தம் ஆசிரியப் பெருமானின் வரலாற்றை விரிவஞ்சாது எழுதித் தமிழ்த் தாய் உளங்குளிர மட்டுமன்று, உயிர் குளிரச் செய்ய வேண்டும் என்பதே. ★



# நடமாடும் இலக்கியக் களஞ்சியம்

—அ. சீனிவாசராகவன்

இருபது ஆண்டுகளுக்கு முன் நடந்தது அது. காரைக்குடியில் கம்பர் விழா கோலாகலமாக நடந்துகொண்டிருந்தது. கூட்டம் சொல்லி முடியாது. அப்பொழுது இளைஞர்போல் தோற்றமளித்த ஒருவர் அந்தக் கூட்டத்தில் உரையாற்றுவதற்காக வேகமாக மேடையை நோக்கி நடந்தார். அவருக்கு மெலிந்த உடல்; குள்ளமாக இருந்தார். சற்றே குழப்பமடைந்தவர்போல் காணப்பட்டார். கட்டுக் குடுமி; நெற்றி நிறையத் திருநீறு; கழுத்தில் கறுப்புக் கயிறு ஒன்றில் கோத்துக் கட்டிக்கொண்டிருந்த ஒற்றை ருத்திராட்சம். இவை, அவர் சமய ஈடுபாடு மிக்கவர் என்பதைப் பறைசாற்றின. நான் தற்செயலாக அவரை நோக்கினேன். அக்காலத்தில் நான் முன்னேற்றக் கருத்துடையவன் என்ற பெருமையில் மூழ்கியிருந்தேன். கம்பனின் காவியத்தை முற்றும் இலக்கிய நோக்குடனே கண்டு வந்தேன். அதில் சமய வாடை தட்டுவதே எனக்கு அப்பொழுது பிடிக்காது. எனவே சமய ஈடுபாடு மிக்க ஒருவர், கம்பர் விழாவில் பேசுவதற்காக மேடையை நோக்கிச் சென்றபோது, எனக்கு எரிச்சலே உண்டாயிற்று. 'இந்த மனிதர் மேடைமேல் ஏறிப் புராணம் படிக்கத் தொடங்கப் போகிருர்; ஒரு மணி நேரம் பழங்கதைகளைச் சொல்லித் தொல்லைப்படுத்தப் போகிருர்' என்று நான் கசப்புடன் எண்ணிக்கொண்டேன். இலக்கிய மகாநாடு ஒன்றில் ஒரு பௌராணிகரை மேடையேற்றி அவர் பேச்சைச் செவிமடுக்கச் செய்துவிட்ட விழாச் செயலாளர்மீது எனக்குக் கோபம் கோபமாக வந்தது. அது சரி; இந்த 'வைதிகப் பிச்சு' யார்? மேடையை நோக்கி நடக்கும்போதே இவ்வளவு தயக்கமும் நடுக்கமும் ஏற்படும் இவர், அறிஞர் நிறைந்த இந்தச் சபையில் ஏன் பேசத் துணிய வேண்டும்? ''யார் ஸார் இந்த ஆள்?'' என்று நான் அண்டையில் இருந்தவரைக் கேட்டேன். ''தெரியாதா? இவர்தாம் கி. வா. ஜகந்நாதன்; மகாமகோபாத்தியாய சாமிநாதையரின் மாணுக்கர்'' என்ருர் அவர்.

''ஓ! இவர்தாம் ஜகந்நாதனு?'' என்று நான் என்னுள்ளே கூறிக்கொண்டேன். 'மகா வித்துவான் சாமிநாதையரிடம் அளவற்ற பக்தி கொண்ட மாணுக்கர்; தாமே ஒரு சிறந்த கல்விமான்' என்ற அளவுக்கு நான் கி.வா.ஜ.வைப் பற்றிக் கேள்வியுற்றிருந்தேன். ஆயினும், உண்மையைச் சொல்வதென்ருல், எனக்கு அப்பொழுது ஏமாற்றமே ஏற்பட்டது. அவருடைய பேச்சைக் கேட்குமுன் அவருடைய தகுதிகளைச் சந்தேகித்துவிட்ட என்மீது எனக்கு அப்பொழுது கோபந்தான் உண்டாயிற்று.

இதற்குள், அவர் பேசத் தொடங்கிவிட்டார். அவருடைய பேச்சைக் கேட்க என்னைத் தயார் செய்துகொள்ளுவதற்கு எனக்கு இரண்டு மூன்று நிமிடங்கள் ஆயின; ஆனல் பிறகு எந்த விதமான முயற்சியும் இன்றிப் பெருகி வந்த பூரிப்புடன் அவரது சொற்பொழிவில் நான் ஆழ்ந்துவிட்டேன். சொற்கள் மணி மணியாக அடுக்கியவைபோல் இசை நயத்துடன் அவரிடமிருந்து துள்ளி வந்தன. அவருடைய பேச்சைக் கேட்கக் கேட்க, என்னிடம் வியப்பு மிகுந்தது. ஏனென்ருல், அந்தச் சொற்பொழிவு முற்றும் இலக்கிய மணம் கமழ்வதாக இருந்தது. அவர் பேசிய பாணியோ எங்களைவிட நவீனமாக இருந்தது. அதே சமயம், 'பழமையும் புதுமையும் இணைய முடியாது' என்ற எங்கள் கருத்தைப் பொய்யாக்கும் வண்ணம் அவர் அவ்விரண்டையும் மிகவும் நன்ருக இணைத்துப் பேசினர். கம்பனின் காவியம் ஜீவனுள்ள மரம். அதைப் பழைய பாணியிலேயே அணுகிப் புதிய மதிப்புத் தரங்களைக் கிளைக்கச் செய்யலாம் என்பதை அவர் அன்று தமது பேச்சின் வாயிலாகப் புலப்படுத்தினர். ஆகா! அவருடைய அன்றைப் பேச்சு எனக்கு

மறக்க முடியாத அநுபவம். ஒரு சிறந்த அறிஞனின் நுட்பம், சுவைத்திற வல்லுநனின் மென்னயம், உண்மையான திறனுய்வாளனின் பரந்த நோக்கம், பரிவிரக்கம், புலவனின் அகத்திற உணர்வு இவையெல்லாம் அவர் பேச்சில் கலந்திருந்தன. தமிழ்க் காவியங்களின் நன்னயமும் நறுமணமும் இணைந்த ஓர் அற்புத நடையில் அவர் பேசினர். இருந்தபோதிலும் யாவருக்கும் எளிதில் விளங்கும்படியாக இருந்தது அவர் பேச்சு. நான் அப்படியே மெய்ம்மறந்து கேட்டுக்கொண் டிருந்தேன். பேச்சு முடிந்ததும், ''இதோ, பரப்பும் ஆழமும் கொண்ட ஓர் உண்மையான அறிவூற்று. பொருளும், அதே சமயம் மந்திரம்போல் ஒலிக்கும் தன்மையும் கொண்ட சொற்கள் வாயிலாக, எடுத்துக்கொண்ட விஷயத்தைப் பிறருக்கு விளங்க வைக்கும் அறிவும் ஆற்றலும் கொண்ட ஒருவர், இதோ!'' என்று நான் கூறினேன்.

அன்று எனக்கு ஏற்பட்ட அந்த வியப்பு, நாள்பட வளர்ந்தது. இன்று, 'கி.வா.ஜ.' என்று ஆயிரக் கணக்கான ஆர்வலர்களாலும் நண்பர்களாலும் சீடர்களாலும் வியந்து பாராட்டப் பெறும் இந்த அறிஞருக்கு அறுபது வயது நிறைவெய்துகிறது. இவருடைய இலக்கிய வாழ்வின் வெற்றியை நான் இப்பொழுது பெருமையுடன் உணர்கிறேன். 'ஜோதி' என்ற புனைபெயருடன் இவர் சிறந்த கட்டமைப்பும் மென்மையும் உடைய, சிந்தையைத் தூண்டிவிடும் கவிதைகள் பலவற்றை நமக்குத் தந்திருக்கிருர். கலைத்திறனும் உள்நோக்கும் உடைய கதைகள் பலவற்றை எழுதியிருக்கிருர். எண்ணற்ற கட்டுரைகளை இவர் எழுதியுள்ளார். அவற்றில் சில, சொந்தக் கருத்துக்களைத் தெரிவிப்பவை. வேறு சில, திறனுய்வுக் கட்டுரைகள். இந்தக் கட்டுரைகளில் ஒவ்வொன்றும், பேரொளி வீசும் ஒவ்வொரு ரத்தினம். புராதனத் தமிழ் இலக்கணம், தமிழ்க் கவிதைகள் —புராதனமானவையும் நவீனமானவையும், சமய நூல்கள் ஆகியவை பற்றியும் இவர் இடைவிடாமல் எழுதி வருகிருர். 'கலைமகள்' ஆசிரியராகப் பதவியேற்று இவர் அந்தப் பத்திரிகைக்குத் தனிப்பட்ட தரம், தனிப்பட்ட மதிப்பு, தலைசிறந்த இலக்கியப் பத்திரிகை என்ற பெயர் ஆகியவற்றை அளித்திருக்கிருர். பல புதிய எழுத்தாளர்களின் எழுத்துக்களைக் 'கலைமகளில்' வெளியிட்டு ஊக்கம் அளித்திருக்கிருர். இன்றைய முன்னணி எழுத்தாளர்களில் பலரின் வளர்ச்சிக்கு இவரே பொறுப்பாளி. எத்தனையோ அலுவல்களுக்கிடையிலும், நாடு முழுவதும் சுற்றுப் பிரயாணம் செய்து, தம் இனிய பேச்சின் மூலம் பிரசாரம் செய்து இலக்கியத்தையும் பக்தியையும் வளர்க்கிருர்.

இன்று இவருக்கு அறுபது வயது. இருந்தாலும் தம் பக்தி வழியில் சிறிதும் சலிப்போ களைப்போ அடையவில்லை. எப்போதும் புதிய யாத்திரைகளை மேற்கொண்ட யுலிஸிஸ் போல, இவரும் உற்சாகத்துடனும் பக்தியுடனும் தம் பணியில் ஈடுபடுகிருர். சிறந்த அறிவாளியும் கவிஞரும் கதை கட்டுரையாசிரியருமான கி.வா.ஜ. பல்லாண்டு வாழ்ந்து, தாம் எடுத்துக்கொண்ட பணியை வெற்றிகரமாகச் செய்யட்டும். கி.வா.ஜ. மேற்கொள்ளும் ஒவ்வொரு பிரயாணத்தினுலும் அபூர்வமான, ஆச்சரியமான இலக்கியச் செல்வங்களை நமக்கு அளிக்கட்டும். மனித இனத்தை மேம்படுத்தும் புதிய இலக்கியச் சிருஷ்டிகள் தோன்றுவதற்குத் தூண்டுதலாகப் புதிய வழியையும் திறத்தையும் இவர் பணி உண்டாக்கட்டும். ★

## யான் கண்ட கி. வா. ஜ.

பூவுலகில் யாண்டும் புன்முறுவலோடு இருப்பவர் மிக மிகச் சிலர். அவர்களில் ஒருவர் திரு கி. வா. ஜ. ஆவர். அன்பர் அவர்கள் பிறந்தது சேலம் மாவட்டத்தைச் சார்ந்த மோகனூர். அங்கே வற்ருத வளம் பெருக்கும் காவிரி உண்டு. சிந்தையைத் தன்பால் ஈர்க்கும் முருகன் காந்தமலை உண்டு. இவருடைய சென்னை இல்லத்துக்குக் காந்தமலை என்னும் பெயர் உண்டு.

இவர் நெற்றியிலே தூய வெண்ணீறு உண்டு. கருணை பொழியும் கண்கள் உண்டு. உதட்டிலே இடையருப் புன்முறுவல் உண்டு. மேனியை அழகுபடுத்த எளிய கதராடை உண்டு. முருகப்பெருமான் திருவடிக்கே பதிந்த நெஞ்சு உண்டு. மேடையிலே ஏறி நின்ருல் தம் குருநாதரை மறவாமல் அஞ்சலிசெய்து அவர் திருவடியை வணங்கும் பண்பு உண்டு. பேசத் தொடங்கினுல் சொல்லிலே இனிமை உண்டு, கனிவு உண்டு, உயர்ந்த கருத்து உண்டு. தமிழகம் மட்டுமின்றிக் கடல் கடந்த இடங்களுக்கும் சென்று சமயத்தையும் தமிழையும் பரப்பிவருகிற சிறந்த தொண்டு உண்டு. நினைத்த மாத்திரத்திலே வாய் திறந்ததும் அழகான கவிகள் இயற்றும் திறம் உண்டு. மன மொழி மெய்யால் ஒருநெறிப்பட்டு நித்திரையிலும் தமிழன்னைக்குத் தொண்டு செய்கிற உயர் கருத்து உண்டு. இவர் நல்ல பல வளத்தோடு நெடிது வாழ வாழ்த்துகின்ற பல்லாயிரம் மக்கள் உண்டு. அவர்களில் யானும் ஒருவன் உண்டு. —இராசை என். அருணசலம்



# வாழ்வில்

—பேட்டி: என். ராமகிருஷ்ணா

சுமார் பதினைந்து ஆண்டுகளுக்கு முன்பு ஒரு நாள் கலைமகள் ஆசிரியர் ஸ்ரீ கி. வா. ஜகந்நாதன் அவர்களைச் சந்தித்தேன். என்னை அவருக்கு யாரும் அறிமுகம் செய்து வைக்கவில்லை. அப்பொழுது நான் சில ஆங்கிலப் பத்திரிகைகளுக்குப் புகைப்படங்களும் கட்டுரைகளும் எழுதிவந்தேன். தமிழில் எழுத வேண்டும் என்ற ஆர்வம் எழுந்தது. கலைமகள் ஆசிரியரைப்பற்றிக் கேள்வியுற்றிருந்தேன். அவர் இளம் எழுத்தாளர்களை ஊக்குவிக்கிறார் என்று கேள்வியுற்றேன். சென்னை சென்றபொழுது அவர் காரியாலயம் சென்றேன். என்னை முதல் சந்திப்பிலேயே அவர் கவர்ந்துவிட்டார்.

என்னுடைய அவாவை வெளியிட்டேன். ''அப்படியா, பேஷாகச் செய்யலாமே? தங்கள் படங்களை நான் பத்திரிகைகளில் பார்த்திருக்கிறேன். தீபாவளி மலர் உருவாகிக்கொண்டிருக்கிறது. சேக்கிழார் பற்றிய வரலாறு போடலாம் என்று உத்தேசம். தாங்கள் படங்கள் எடுத்து எழுதுங்கள்'' என்றார். முதல் சந்திப்பிலேயே, பல வருஷம் பழகியவர்போல் காணப்பட்டார். தம்பியை அண்ணன் கவனிப்பதுபோலக் கவனித்தார். கட்டுரையும் படங்களும் கலைமகள் தீபாவளி மலரில் வெளியாயின.

அவரைப் பார்த்ததும், 'இவர்தாமா ஆசிரியர்! மிகவும் எளிமையாகவும் அன்பாகவும் பேசுகிறாரே. ஆசிரியர் என்றால், அதுவும் கலைமகள் பத்திரிகை போன்ற பிரபல மாத இதழின் ஆசிரியர் என்றால், மிகவும் மிடுக்காக இருப்பார் என்று நான் நினைத்தது மிகவும் தவறு' என்று என்னை எண்ணும்படி செய்துவிட்டார். இப்படி ஆரம்பித்தது எங்கள் தொடர்பு. அன்றுமுதல் ஒவ்வொரு வருஷமும் தீபாவளி மலருக்குப் படத் தொகுப்புக் கட்டுரை ஒன்றை என் பொறுப்பில் விட்டுவிட்டார். சில சமயம் என் கட்டுரை சரியாக இல்லாவிட்டால் அதை வெளிப்படையாகச் சொல்லமாட்டார். ''ஏன், இப்படி இருந்தால் நன்றாக இருக்குமே?'' என்று சொல்லித் தாமே திருத்தம் செய்து, என் பெயரிலேயே வெளியிட்டுவிடுவார். அதனால் அடுத்த கட்டுரை, முன்பு வெளியானதைப் போலவே இலக்கிய மணத்துடன் கமழ வேண்டும் என்று அதிஜாக்கிரதையாக எழுதுவேன்.

சில வருடங்கள் சென்றதும் ஒரு நாள் அவர் சொன்னார்: ''நாம் இருவரும் சேர்ந்து சென்று கட்டுரைகள் எழுதினால் நன்றாக இருக்குமே. நீங்கள் படங்கள் எடுங்கள்; நான் எழுதுகிறேன்.'' பிரயாணக் கட்டுரைகள் வெளிவந்தன. கி.வா.ஜ. அவர்களுடன் செல்வதே தனி இன்பம். எல்லாரிடமும் இனிமையாகப் பழகுவதனால் அவருக்கு நண்பர்கள் அதிகம். என்னைப்பற்றிச் சொல்லும்போது, ''இவர் என் நண்பர். நன்றாகப் படம் எடுப்பார். பாம்பு படம் எடுத்தால் எல்லாரும் ஓடுவார்கள். இவர் எடுத்தால் எல்லாரும் நெருங்குவார்கள். பல பத்திரிகைகளுக்குப் படம் உதவுகிறார். எங்களுக்கும் படம் எடுக்கிறார். இவரைப் 'புகைப்படக் கலைஞர் என்று அறிமுகம் செய்வதைவிட, என் நண்பர் என்று சொல்.வதில் பெருமைப்படுகிறேன்'' என்று சொல்லுவார். பல இடங்களில் சொற்பொழிவாற்றச் செல்லும்போது எனக்கு எழுதுவார். கடிதங்களுக்குப் பதில் போடுவதில் அவரை யாரும் மிஞ்ச முடியாது. ஓர் ஊருக்குச் சென்று சென்னை திரும்பியவுடன், தாம் சந்தித்தவர்களுக்கு நன்றிக் கடிதம் போடுவார்.

கி.வா.ஜ. அவர்களுக்குக் குழந்தைகள் என்றால் மிகவும் பிரியம். எங்கே சென்றாலும் அவருடைய பேச்சு மாலையில்தான் இருக்கும். காலையிலேயே வந்துவிடும் அவர், தாம் தங்கியுள்ள வீட்டில் இருக்கும் குழந்தைகளுடன் அளவளாவுவார். அவர்களுக்குக் காக்கா கதை, பாட்டி கதை, ராஜாராணி கதை

முதலியன சொல்லுவார். மிகவும் நய மாகவும் தமாஷாகவும் நீதிகள் நிறைந்த கதைகள் சொல்வதில் அவர் வல்லவர். பெரியவர்களிடம் மிகவும் பக்தியுடனும் அன்புடனும் மரியாதையுடனும் நடந்து கொள்வார்.

எனக்கு நன்ருக ஞாபகம் இருக்கிறது: 1954-இல் அவருக்குத் தருமை ஆதீனத் தில் 'செந்தமிழ்ச் செல்வர்' என்ற சிறப்புப் பட்டம் வழங்கினர்கள். இரவு பத்து மணி சுமாருக்கு வீட்டுக்கு வந் தார். நானும் உடன் இருந்தேன். என் மாமா வீட்டில் இருந்தார். அவர் வயசில் முதிர்ந்தவர். வாசலில் வந்த வுடன் கி. வா. ஜ. தாம் அணிந்துகொண் டிருந்த பொன்னுடையையும் தங்க மெடலையும் அவரிடம் சமர்ப்பித்து, ''என்னை நீங்கள் ஆசீர்வாதம் செய்ய வேண்டும்'' என்று சாஷ்டாங்கமாகப் பெரியவருக்கு நமஸ்காரம் செய்தார். என்னே அவ ருடைய பணிவு, முதியவர்களிடம் கொண்ட பக்தி!

காஞ்சி ஆசாரியர்களிடம் பரம பக்தி கொண்டவர். ''நடமாடும் தெய்வம் என்ருல் பெரியவர்கள்தாம்'' என்று சொல்லிக்கொண்டே இருப்பார். மற்ற மடாதிபதிகளிடமும் அன்பும் பக்தியும் கொண்டவர். சைவம், வைணவம் இரண் டிலும் பற்றுடையவர். பல காவியங்களைப் படித்துப் பாண்டித்தியம் பெற்றவர்.

கி.வா.ஜ. மணிவிழா மலருக்கு அவ ரைப்பற்றிக் கட்டுரை வேண்டும் என்று மாயாவியும் அகிலனும் கேட்டுக் கொண்டபோது, கி. வா. ஜ.வை ஏன் பேட்டி கண்டு கட்டுரை எழுதக் கூடாது என்று எனக்குத் தோன்றியது. சமீபத்தில் அவருடைய அறுபதாண்டு நிறைவு விழாவின்போது அந்தப் பணியை மேற்கொண்டேன்.

நான் அவரை ''ஸார்'' என்றுதான் அழைக்கும் பழக்கம். ஆரம்பத்தில் இப் படிக் கூப்பிட்டதனுல் இன்றும் அதையே கடைப்பிடித்து வருகிறேன். ''ஸார், உங்களைப் பேட்டிகாண வந்திருக் கிறேன். பல கேள்விகள் கேட்கப் போகிறேன்'' என்று ஆரம்பித்தேன்.

''பேட்டி என்ன ஸார்? என்னைத் தான் உங்களுக்குப் பதினைந்து ஆண்டு களாகத் தெரியுமே. என்னைப்பற்றிய கருத்துக்களை எழுதுங்கள் ஸார்'' என்ருர். அதனுல்தான் ஆரம்பத்தில் கி.வா.ஜ. பற்றிய ஞாபகக் குறிப்புக் களைக் கொடுத்திருக்கிறேன். மேலும், அவர் வாழ்க்கை வரலாற்றை அவர் வாயிலாகக் கேட்டால் இன்பம் அடைய லாம் என்றும் எண்ணினேன்.

**1. தங்களுடைய இளமை நாட்களைப்பற்றிச் சொல்ல முடியுமா?**

ஓ! பேஷாகச் சொல்லுகிறேன். நான் 1906-இல் கிருஷ்ணராயபுரத்தில் பிறந் தேன். நான் சிறுவனுக இருந்தபோது என் தந்தையார் வாசுதேவ ஐயர், காவிரிக்கு அக்கரையில் சேலம் மாவட் டத்தில் இருக்கும் மோகனூர் என்ற ஊருக்குக் குடியேறினர். சிறு பையனுக நான் வளர்ந்த இடம் மோகனூர். மோகனூரில்தான் உள்ளது 'காந்தமலை' என்ற முருகன் இருப்பிடம். ஆரம்பத்தி லிருந்தே அவனிடம் எனக்குப் பற்று. நடுநிசியிலுங்கூடத் தனியாகச் சென்று முருகன் சந்நிதியில் பல மணி நேரம் இருப்பேன். வீட்டில் இருப்பவர்களுக் குக்கூடத் தெரியாது. முருகனுடைய அருளால் சிறு வயசிலேயே கவி பாடும் திறம் பெற்றேன். பள்ளிப் படிப்பு, குளித்தலையில். 1921-இல் வயசு குறைவு காரணமாக எஸ். எஸ். எல். ஸி. எழுத முடியவில்லை. உங்களுக்குத் தெரி யாது ஸார்! நான் கணக்கிலும் விஞ்ஞா னத்திலும் முதல் மார்க் வாங்கினேன். பின்புதான் தமிழில் புலமையடைந்து அதனுல் பெயர் பெற்றேன். ஆயினும் இளமையிலேயே எனக்குத் துறவு மனப்பான்மை மனத்தில் ஓங்கி வளர்ந்து கொண்டிருந்தது. சந்நியாசிகளின் தொடர்பு ஏற்பட்டது. 1924-இல் சேந்த மங்கலம் அவதூத சுவாமிகளின் சந்திப்பு ஏற்பட்டது.எனக்குச் சந்நியாச ஆசிரமம் கொடுக்கும்படி கேட்டுக்கொண்டேன். ''நீ சிறியவன், உன் பெற்ருேர்களுக்கு ஒரே மகன். ஆதலால் சந்நியாசி ஆவது கூடாது. ஆனுல் சுப்பிரமணிய பூஜையும் உபாசனையும் செய்'' என்று கட்டளை யிட்டார். சுவாமிகள் சொற்படி செய்து வந்தேன்.

**2. தங்களுடைய மேடைப் பேச்சு எப்போது ஆரம்பமாயிற்று? எப்படி?**

1924 - இல் முதல்முதலில் மோக னூர்க் கோவிலில் என் பேச்சு நடை பெற்றது. சேந்தமங்கலத்திலிருந்து வந்திருந்த ஓர் உடையார் அவர்கள் என் பேச்சைக் கேட்டு ரசித்துத் தம் முடன் ஊருக்கு வந்து சில பையன்களுக் குப் பாடம் சொல்லித் தரும்படி வேண்டி னர்கள். சேந்தமங்கலம் குருநாதன் பக்கலில் இருக்கப் போகும் வாய்ப்பை எண்ணி மகிழ்ந்து அதை ஒப்புக்கொண் டேன். அங்கே சேந்தமங்கலம் ஜமீன் தாரின் அறிமுகம் ஏற்பட்டு, அவர் ஏற் பாடு செய்து தந்த ஆசிரமத்தில் வசித்து

வந்தேன். பஞ்சாயத்து ஆபீசில் சிறு உத்தியோகமும் கிடைத்தது. எனக்கு நன்ருக ஞாபகம் வருகிறது. ரெவரண்ட் துரோவர் என்ற பாதிரிக்குத் தமிழ்ப் பாடம் கற்றுக் கொடுத்து அதனுல் அவர் முதல் வகுப்பில் தேர்ச்சி பெற்ருர். அப்பொழுது எனக்கு வயசும் அதிகம் ஆகவில்லை.

**3. தமிழ்த் தாத்தா ஐயரவர்களின் தொடர்பு தங்களுக்கு எப்படி ஏற்பட்டது?**

சேந்தமங்கலத்தில் நான் இருந்த பொழுது ஒரு நாள் காசி சுவாமிகள் என்ற நிஜானந்த ஸரஸ்வதி சுவாமிகள் அங்கு வந்தார்கள். என்னுடைய தமிழ்ப் பேச்சையும் புலமையையும் கண்டு, ஐயரவர்களிடம் செல்லும்படி கூறினுர்கள்.

அப்பொழுது ஐயரவர்கள் சிதம்பரம் மீனுட்சி தமிழ்க் கல்லூரியில் முதல்வராக இருந்தார்கள். சேந்தமங்கலம் ஜமீன்தார் என்னைச் சிதம்பரம் அழைத்துச் சென்ருர். ஐயரவர்கள் பல கேள்விகள் கேட்டார்கள். கம்பராமாயண விளக்கம் கேட்டார்கள். மிகவும் மகிழ்ச்சி அடைந்து, ''மகாராஜாக்கள் காலமாக இருந்தால், சிறுவன் புலமைக்கு அக்ஷர லக்ஷம் கொடுப்பார்கள்'' என்று ஆசிர்வதித்தார்கள்.

ஐயரவர்கள் அப்பொழுது ஓய்வு பெறும் சமயம். ''மீனுட்சி கல்லூரியில் சேர்ந்து தமிழ் படிக்கிருயா அல்லது என்னேடு இருந்து தமிழுக்குச் சேவை செய்கிருயா?'' என்று கேட்டார்கள். ஐயரவர்களிடமே கற்க விரும்பினேன். சென்னை செல்ல முடிவு செய்தேன். கிராமத்துக்குச் சென்று பாடம் சொல்லிக் கொடுக்கும் என் பணியை முடித்துக்கொண்டு, சென்னைக்கு மூட்டை கட்டினேன்.

**4. சென்னையில் தாங்கள் ஐயரவர்களிடம் இருந்த காலத்தில் செய்த பணிகள் யாவை?**

1927-இல் சென்னை வந்தேன். அப்பொழுது ஐயரவர்கள் தமிழ் நூல்கள் பதிப்பிக்கும் பணியை மேற்கொள்ளவில்லை. தமிழ் இலக்கியங்களையும் இலக்கணங்களையும் பாடம் சொல்லி வந்தார்கள். பழைய ஓலைச் சுவடிகளைத் தேடி எடுத்தார்கள். கறையான் தின்று கொண்டிருந்த தமிழ்க் காப்பியங்கள் கொஞ்சங் கொஞ்சமாகக் காப்பாற்றப் பட்டன. ஊரூராகச் சென்று சுவடிகள் சேகரித்தோம்.

ஐயரவர்களின் வாழ்க்கையிலும் என் வாழ்க்கையிலும் ஒரு புது யுகம் ஆரம்பமாயிற்று. 1928-இல் 'தக்கயாகப் பரணி' முதல் முதலாகப் பதிப்பிக்கப்பெற்றது. ஐயரவர்களின் பதிப்பு வேலைகளில் நான் முழு மூச்சுடன் ஈடுபட்டேன். ஐயரவர்களும் என்னைத் தக்க சீடனுக அங்கீகரித்தார்கள். 'குறுந்தொகை' முகவுரையில் என்னைப் பற்றிச் சிறப்பாகக் குறிப்பிட்டிருப்பதை இப்பொழுது படித்தாலும் எனக்கு இன்பம் ஏற்படுகிறது.

**5. கலைமகளுக்கும் தங்களுக்கும் எப்போது தொடர்பு ஏற்பட்டது?**

மதராஸ் லா ஜர்னல் பிரஸ் அதிபர் திரு ஆர். நாராயணஸ்வாமி ஐயர் அவர்கள் 1932-இல் கலைமகள் பத்திரிகையை ஆரம்பித்தார்கள். ஐயரவர்களுடைய கட்டுரைகளைத் தொடர்பாக வெளியிட வேண்டும் என்ற ஆவலைத் தெரிவித்தார்கள். அப்பொழுது என்னை உதவி ஆசிரியனுகச் செய்யலாம் என்று ஐயரவர்கள் சொல்ல, உடனே அவர் கோரிக்கை ஏற்றுக்கொள்ளப்பெற்றது. நான் உதவி ஆசிரியனுகப் பணியேற்றுக் கலைமகள் தொண்டை ஆரம்பித்தேன். ஒவ்வோர் இதழிலும் ஐயரவர்களின் கட்டுரை முதற் கட்டுரையாக வெளிவந்தது. ஐயரவர்கள் வசன நடையிலும் சிறப்பாக எழுதுவார்கள் என்பது புலனுயிற்று.

**6. தாங்கள் கதை கட்டுரை அப்பொழுது எழுதியதுண்டா?**

உண்டே! ஆனுல் என் பெயரில் எழுதவில்லை. ஏன், ஐயரவர்கள் இருந்தவரையில் என் முழுப் பெயர் அச்சில் வரவில்லை. ஆனுல் 'அனுஷம்', 'கபிலன்' என்ற புனைபெயர்களில் எழுதி வந்தேன். கதை, கட்டுரை, கவிதைகள் எழுதினேன்.

**7. தாங்கள் வித்துவான் பட்டமும் கல்லூரிப் பட்டங்களும் பெற்றது எப்பொழுது; எப்படி?**

1932-இல் எனக்குத் திருமணம் நடைபெற்றது. 1933-இல் சென்னைப் பல்கலைக் கழக ஓரியண்டல் டைடில் தமிழ் வித்துவான் பரீட்சைக்கு உட்கார்ந்து, முதல்வனுகத் தேர்ச்சி பெற்றுக் காசி மடம் திருப்பனந்தாள் ஐந்தாம் ஜார்ஜ் அரசர் ஆயிரம் ரூபாய்ப் பரிசைப் பெற்றேன். பிறகு பி.ஓ.எல். பாஸ் செய்து, தமிழில் எம்.ஏ. பட்டம் பெற்றேன். கல்லூரியில் படிக்காமலே வீட்டில் படித்து இவற்றைப் பெற்றேன். கலைமகள் தொண்டையும் விடாமல் செய்து வந்தேன். 1934-36-இல் சென்னைப் பல்கலைக்கழக ஆராய்ச்சி மாணவனுக இருந்து, ஐயரவர்களின் மேற்பார்வையில், 'தமிழ்க் காப்பியங்கள்'

என்ற தலைப்பில் ஆராய்ச்சி நூல் எழுதினேன். இதைச் சென்னைப் பல் கலைக் கழகத்தார் வெளியிட்டார்கள்.

**8. தங்களுக்குத் திருமணம் நிகழ்ந்தது எப்பொழுது? எவ்வளவு குழந்தைகள்?**

எனக்கு 1932-இல் திருமணம் நடந்தது. அது சுவையான கதை. ஐயரவர்களின் நண்பர் சென்னையில் இருந்தார். என் மனைவிக்கு அவர் உறவினர். ஐயர வர்கள் ஒரு நாள் நண்பரிடம் என்னைக் காட்டி, ''இவனை உங்கள் சொத்தாக்கிக் கொள்ளுங்கள்'' என்றார். அவருக்குப் புரியவில்லை. ''அப்படி யென்றால்?'' என்றார். ''பெண்ணைக் கொடுத்து மாப் பிள்ளை ஆக்கிக்கொள்ளுங்கள்'' என்றார் ஐயரவர்கள். என் திருமணம் நடைபெற்றது. ஐயரவர்களின் ஆசி யுடன் நடைபெற்ற மணம் அல்லவா? சமீபத்தில் அறுபதாண்டு நிறைவு விழா மணமும் நடைபெற்றது. எனக்கு மூன்று புதல்வர்களும் ஒரு மகளும் இருக்கிறார்கள். மூத்தவன் ஐயரவர் களின் நினைவாகச் சாமிநாதன். மற்றவர் முருகன் நினைவாகக் குமரன், முருகன். பெண் உமா.

**9. ஐயரவர்களிடம் எவ்வளவு ஆண்டுகள் தொண்டு புரிந்தீர்கள்?**

*1942*-ஆம் ஆண்டில் ஐயரவர்கள் காலமானார்கள். அதுவரையில் அவருட னேயே இருந்தேன். பதினாறு வருடங்கள். அவ்வாண்டிலேயே என் தந்தையையும் இழந்தேன்.

**10. அதற்குப் பிறகு தாங்கள் தமிழுக்குச் செய்த தொண்டு என்ன?**

ஐயரவர்கள் காலமான துக்கத்தை மறக்கச் சில காலம் ஆயிற்று. கலை மகள் தொண்டு செய்த நேரம் போக மீதியைச் சொற்பொழிவுகளிலும், சுற்றுப் பிரயாணத்திலும் சிறுகதை எழுது வதிலும் கழித்தேன்.

**11. தாங்கள் எழுதியுள்ள புத்தகங்கள் எவ்வளவு?**

சிறுகதைகளும் கட்டுரைகளும் கணக் கில் அடங்காதவை. சுமார் 150 புத்த கங்கள் எழுதியிருக்கிறேன். நாடோடிப் பாடல்கள் தொகுப்பு ஒன்று சேகரித் தேன். சுமார் 8000 பாடல்கள் கொண்ட அந்தப் புத்தகத்தை யாரோ எடுத்துச் சென்றுவிட்டார்கள். மறுபடியும் அம்மாதிரி சேகரிப்பது கடினம். திரும்பவும் கிடைக்கும் என்று ஆவ லுடன் இருக்கிறேன். தேவாரம், திரு வாசகம், நாயன்மார்கள் வரலாறு முதலியவற்றைப் பற்றியும் இலக்கியம் சமயம் முதலியவைபற்றியும் எழுதி யிருக்கிறேன்.

**12. தாங்கள் பெற்றுள்ள விருதுகளும் பட்டங்களும் யாவை?**

காஞ்சி காமகோடி பீடாதிபதி பெரி யவர்கள் 'வாகீசகலாநிதி', 'திருமுரு காற்றுப்படை அரசு' என்ற பட்டங்களைக் கொடுத்துள்ளார்கள். சிருங்ககிரி ஆசார் யர்கள் 'தமிழ்க் கவிபூஷணம்' என்றும், புஷ்பகிரி மடாதிபதி, 'உபன்யாஸகேசரி' என்றும், தருமை ஆதீனகர்த்தர், 'செந்தமிழ்ச் செல்வர்' என்றும், சென்னை மாநிலத் தமிழ்ச் சங்கம், 'தமிழ்ப் பெரும்புலவர்' என்றும், மதுரை ஞானசம்பந்தர் மடம், 'திருநெறித் தவ மணி' என்றும் பட்டங்கள் கொடுத்துள் ளார்கள். இன்னும் எவ்வளவோ. மேலும், நான் பல கமிட்டிகளிலும் அங் கத்தினனாகத் தொண்டு புரிந்து வரு கிறேன்.

**13. தாங்கள் வெளி நாடு சென்றதுண்டா?**

உண்டு. சில ஆண்டுகளுக்கு முன்பு பர்மா சென்று சொற்பொழிவுச் சுற்றுப் பிரயாணம் செய்து வந்தேன். இலங்கைக்குப் பதினாறு முறை சென்று வந்துள்ளேன். சமீபத்தில் மலேசியா சென்று உலகத் தமிழ் விழாவில் கலந்துகொண்டு ரேடியோவிலும் டெலி விஷனிலும் சொற்பொழிவு ஆற்றினேன்.

**14. தங்களுக்கு அரசியலில் தொடர்பு உண்டா?**

எனக்கு நேரிடையாக அரசியலில் தொடர்பு இல்லாவிட்டாலும் நான் காந்தி பத்தன். *1920*-ஆம் ஆண்டி லிருந்து கதர் உடுத்துகிறேன். நான் சென்னை வந்த வருஷம் 1927, மறக்க முடியாத வருஷம். அப்பொழுது டாக்டர் அன்சாரி தலைமையில் காங்கிரஸ் மாநாடு சென்னையில் நடந்தது. நான் ஆர்வத்துடன் கலந்துகொண்டேன்.

கி. வா. ஜ. அவர்களைப்பற்றியும் அவ ருடைய குணாதிசயங்களைப்பற்றியும் பக் கம் பக்கமாகப் புத்தகமாகவே எழுதலாம். அவர் வாய்திறந்தால் சிலேடை உதிரும். சுருக்கமாகச் சொன்னால், அவர் தமிழில் 'நடக்கும் அகராதி'. அவர் பல்லாண்டு வாழ்ந்து தமிழுக்குத் தொண்டு செய்து சதாபிஷேகத்தைக் கொண்டருள்வாராக என்று இறைவனைப் பிரார்த்திக் கிறோம். ★



# இளைஞர்களின் குரு

—ஜே. சுப்பிரமணிய ஐயர்

எந்தக் கவிஞரும் சரி, எந்தக் கற்றறிந்த புலவரும் சரி, இன்று திரு கி. வா. ஜகந்நாதன் எய்தியுள்ள அளவுக்குப் புகழ் எய்தியதில்லை என்று சொல்லலாம். ஆம், இன்றைக் கவிஞர்களில் எவரும் அவரளவு பாராட்டைப் பொது மக்களிடையே பெற்றதில்லை. ஏறக்குறைய முப்பது ஆண்டுகளுக்கு மேலாகத் தமிழன்பர்களின் பேணுதலை அவர் பெற்று வருகிறார். ஏன்? சிலர் அவரைத் தமிழன்னையின் அவதாரமாகக் கூட வழிபட்டு வருகிறார்கள். திரு கி. வா. ஜ. இத்தகைய பெருமையும் புகழும் எய்தக் காரணம் யாது? இன்றைத் தமிழ் இலக்கியத்தின் தலையாய வியாக்கியான கர்த்தா என்று மக்கள் அவரை ஒரு முகமாகக் கொண்டாடி வருவது ஏன்? கி. வா. ஜ.வைப்பற்றிய பேச்சு எழும் போது சாதாரணமாகக் கேட்கப்பெறும் கேள்விகள் இவை. இந்தக் கேள்விகளுக்கு விடை தரும் முயற்சியே இந்தக் கட்டுரை.

''சிலர் பிறவியிலேயே பெரியோராய்ப் பிறக்கிறார்கள்; சிலர் தம் திறமையால் பெரியோராகின்றனர்; வேறு சிலர் பெரியோர் ஆக்கப்படுகின்றனர்.'' நம் கவிஞர் இவற்றுள் எந்த ரகத்தைச் சார்ந்தவர்? அவர் கடைசி ரகத்தைச் சார்ந்தவரல்ல என்பதை எல்லாரும் ஒப்புக் கொள்ளுவார்கள். ஆயினும், முதல் இரண்டு ரகங்களுள் அவர் எதைச் சார்ந்தவர் என்பதில் கருத்து வேற்றுமை ஓரளவு இருக்கிறது. கி. வா. ஜ. வை வியந்து பாராட்டுவோரில் சிலர், அவர் பிறவிக் கவிஞர் என்று கூறியபோதிலும் அவர் அதை மறுத்துரைப்பார்; ''ஒருவன் கவிஞனாகவோ புலவனாகவோ அறிஞனாகவோ ஆக வேண்டுமென்றால் தொண்ணூறு சதவீதம் உழைப்பும் பத்துச் சதவீதம் ஊக்கமும் தேவை'' என்று தமக்கே உரிய திட்ப நுட்பத்துடனும் அழுத்தத்துடனும் கூறுவார்.

திருச்சி மாவட்டத்தில் கிருஷ்ணராயபுரம் என்ற குக்கிராமத்தில் பிறந்த கி.வா.ஜ. உள்ளூர்ப் பள்ளியில் ஆரம்பக் கல்வி பயின்றார். சிட்டுப்போன்ற உடலமைப்பு; கழுத்தில் ருத்திராட்சம். இதுவே அவரது இளமைக் கோலம். அப்பொழுது அவர் பள்ளியில் யாவருக்கும் 'தம்பி'; யாவருக்கும் செல்வக் குழந்தை. நெற்றி நிறைய நீறு துலங்க அவர் இனிய குரலில் இறைவன் புகழ் பாடுவார். அந்தப் பாட்டும் அவர் தோற்றமும் அப்பொழுது யாவரையுமே மெய்ம்மறக்கச் செய்துவிடும். இவையே அன்று அவருக்குப் பெயரையும் புகழையும் தேடித் தந்தன. இறைவன் அருளால் அந்தப் பெயரும் புகழும் அவருக்கு என்றும் நிலைத்துவிட்டன. கி. வா. ஜ. வின் தந்தையார் பெயர் வாசுதேவ ஐயர். ஏழைக் குடும்பந்தான். எனினும் பத்தாவது வயசிலேயே கி.வா.ஜ.வின் கவிதைகள் அன்றைப் பத்திரிகைகளில் வெளியாகத் தொடங்கிவிட்டன. 'ஒற்றுமை' என்ற பத்திரிகையில் தம் கவிதையை முதல் முதலாக அச்சில் கண்டபோது, அவர் அடைந்த ஆனந்தந்தான் என்னே! அன்றைய நிகழ்ச்சியை அவர் இன்றும் மகிழ்ச்சியுடனும் உணர்ச்சியுடனும் அடிக்கடி கூறுவதுண்டு.

சென்ற ஏப்ரல் மாதம் ஒன்பதாம் தேதி, சென்னை மயிலாப்பூரிலுள்ள நாராயணி அம்மாள் கல்யாண மண்டபத்தில் அவருடைய ஷஷ்டியப்த பூர்த்தி விமரிசையாக நடந்தது. அந்த அறுபதாண்டு விழாவைக் கண்கொள்ளாக் காட்சி என்றே சொல்லலாம். அன்று அவருடைய எண்ணற்ற நண்பர்களும் அன்பர்களும் திரளாகக் கூடித் தங்கள் மனத்துக்குகந்த அந்த மாமேதையின் பாதாரவிந்தங்களில் பக்தி சிரத்தையுடன் விழுந்து வணங்கினர். விதவிதமான மக்கள், அமைச்சர்கள், கவிஞர்கள், எழுத்தாளர்கள், ஏன்? சிறுவர் சிறுமியர்கூட, அகமும் முகமும் மலர நின்ற திரு கி.வா.ஜ. தம்பதியரைக் கண்டு அளவற்ற ஆனந்தமும் மன

நிறைவும் பெற்றனர். அந்த அமரகவி, அந்தப் புரவலர், ஜகத்குரு காமகோடி பீடாதிபதி ஸ்ரீ சங்கராசாரியர்களின் அரிய அன்பளிப்பான தங்க ருத்திராட்ச மாலை கழுத்தில் துலங்க நின்ற அந்த அற்புதக் காட்சி! ஆகா! அது வானோரும் கண்டு மகிழ வேண்டிய காட்சி. ஏழை பணக்காரர் என்ற எந்த விதமான ஏற்றத்தாழ்வும் இன்றி, திரு கி.வா.ஜ. வின் பக்தர் குழாம் அனைத்தும் அன்று அந்தத் தம்பதிகளின் பாதங்களில் விழுந்து வணங்கி, அவர்களின் அருளை யும் ஆசியையும் பெற்றனர். தமிழன்னை யின் தெய்விகப் பேரொளி வீச அந்தத் தம்பதிகள் நின்ற காட்சிதான் என்னே! என்னே! தமிழாலயத்தின் மூலவரைத் தரிசித்தது போன்று அன்று ஒவ்வொருவர் உள்ளத்திலும் வழிந்தோடிய பக்திப் பிரவாகந்தான் என்னே, என்னே! தமிழ் இலக்கியம் கற்றோர் அனைவரும், அதன் ஒவ்வொரு பிரிவின் சுவையையும் நுகரும் பேறு பெற்றோர் அனைவரும், தங்கள் அற்பத்தனமான கருத்துக்களையும் செயல்களையும் ஒதுக்கிவிட்டு, திரு கி.வா.ஜ.வைத் தெய்வமாக வழிபடா விட்டாலும், அவருடைய உண்மையான பக்தராகாமல் இருக்க முடியாது; அவ ருடைய சிறப்பையும் இனிமையையும் புகழ்ந்து பாடாமல் இருக்க முடியாது. சுருங்கச் சொல்வதென்றால், அவர் உண் மையான கவிஞர். அவருடைய உள்ளத் தில் அறிவு நிரந்தரப் பெருக்கெடுத்து வழிந்தோடுகிறது. எனவே, அவ ருடைய கவிதைகள் அமர காவியங் களாக என்றும் அறிவுச் சுடர் வீசு கின்றன.

கி.வா. ஜகந்நாதன் தலைசிறந்த தமிழ்ப் பேச்சாளர். தம் சொற்பொழிவைக் கேட்போரை மணிக்கணக்கில் மெய்ம் மறக்கச் செய்யும் பேச்சுத் திறனுடைய வர். சொற்கள் அவரிடமிருந்து இன் னிசையாகக் கிளம்பி வருகின்றன; உன் னதமான தூய கருத்துக்கள் அமுதமாகப் பொங்கி வெளிப்படுகின்றன. பேச்சுத் துறையில் அவர் ஈடு இணையற்றவர் என்பதை அவருடைய சொற்பொழிவைக் கேட்கும் ஒவ்வொருவரும் உணர்வர். அரசியல் பேச்சாளர்களைப் போல் பண்பற்ற சொற்களோ, கடும் பழிப்புக் களோ மறந்தும் அவரிடமிருந்து வெளிப் பட மாட்டா. சிறப்பும் வீறமைதியுமே அவருடைய பேச்சில் காணப்படும். கம்ப ராமாயணச் சொற்பொழிவாகட்டும், சங்க கால இலக்கிய விளக்கமாகட்டும், எதை அவர் பேசினாலும் அது உயர்வான எண்ணங்களை ஊட்டுவதாகவே இருக்கும். அவருடைய நகைச் சுவை, சுடரிடும் உடனெதிர் மொழி, எளிய முறையில் யாவருக்கும் புரியும்படியான விளக்கம், தம் ஆழ்ந்த புலமையின் சான்றாக அவர் எடுத்துக்காட்டும் பலதரப்பட்ட மேற் கோள்கள், எல்லாவற்றுக்கும் மேலாகப் பலதரப்பட்ட மக்களையும் ஒருநிலைப் படுத்திவிடும் அவருடைய வாய்மையும் நேர்மையும் - இவை யாவும் ஒப்புவமை இல்லாதவை; கி. வா. ஜகந்நாதன் எப் படிப்பட்ட மேதை என்பதை யாவருக்கும் விளக்கக்கூடியவை. அவருடைய சொற் பொழிவுகள் அனைத்துமே சுருக்கெழுத் தில் பெருநிதியெனப் போற்றிச் சேமிக்க வேண்டியவை. ஏனென்றால் அவை சாதாரணமான பழகிப்போன பேச்சுக்க ளல்ல; ஒவ்வொரு பேச்சும் ஓர் அறிவுக் கருவூலமாகும். பாரத நாடெங்கும், பாரதநாடு மட்டுமென்ன, தமிழ் எங்கெங் கெல்லாம் வழங்குகிறதோ, எங்கெங் கெல்லாம் தழைத்தோங்கியிருக்கிறதோ, அங்கெல்லாம் அவருடைய உவகை வெறி யூட்டும் குரல் ஒலிக்கிறது. அவர் தமிழ்த் தாயின் தவப் புதல்வராக வழி படப்பெறுகிறார். இத்தகைய அதிசயத் திறமை வாய்ந்தவர்களை நாம் காண்பது அரிது. பக்தப் பெரியார்கள் மறு அவ தாரம் எடுத்துக் கி. வா. ஜ.வின் உருவில் இந் நிலவுலகில் நடமாடுகின்றனர் என்று கூட ஐயத்துக்கு இடமின்றிக் கூறலாம். அவருடைய நடத்தை, பண்பும் இரக்க மும் கொண்டது. அதில் இறுமாப்பு மருந்துக்கும் கிடையாது; ஈடுபாடும் மேன்மையுமே அதில் எப்பொழுதும் இருக்கும். ஆம், பிறர் பார்த்துப் பின் பற்றி நடக்க வேண்டிய நடத்தை யுடையவர் அவர். அதனால்தான் அன்றும் இன்றும் எத்தனையோ இளைஞர்கள் அவரைத் தங்கள் குருநாதராகத் தொழு தேத்தி வருகிறார்கள். ★

### *ஐயரவர்களின் பாராட்டு*

கி. வா. ஜகந்நாதையரின் பேராற்றலையும் எழுதும் வன்மையையும் தமிழன்பையும் என் மனமாரப் பாராட்டுகின்றேன். அவருக்கு எல்லா நன்மைகளையும் அளித்தருளும் வண்ணம் தோன்றாத் துணையாக நிற்கும் முழுமுதற் கடவுளை இறைஞ்சுகின்றேன்.

—குறுந்தொகை முகவுரை, *12-8-1937*



# இலக்கிய முழு மனிதர்

—ச. மெய்யப்பன்

தொன்றுதொட்டு வரும் தமிழ் மரபுகளைக் கற்ற தமிழறிஞர்; இக் காலத்து மக்கள் வழக்கில் இருக்கும் பத்திரிகைத் தமிழோடும் மிகுந்த தொடர்பு கொண்டவர்; பழைய தமிழையும் புதிய தமிழையும் இணைக்கும் பாலமாய் அமைந்தவர்; 'கலைமகளி'ன் தலைமைத் தொண்டர்; புதுமைக்குப் புதுமையாய் விளங்கும் சிறுகதை, கட்டுரைகள் முதலியன வரைவதில் வல்லவர்; பழைய இலக்கண வகைகளை எளிதாக்கி எல்லார்க்கும் வழங்கும் தமிழ் அறிஞர்; இரு வகை இலக்கியங்களிலும் தொடர்பு கொண்டு புலவர் தமிழைப் பேணிப் பத்திரிகைத் தமிழை வளர்த்துச் சிறந்து விளங்குபவர் - இத்தனையும் சேர்ந்த தமிழ் உருவமே திரு கி.வா.ஜ. அவர்கள்.

இவர், சங்கத் தமிழை வெளிக் கொணர்ந்து தமிழகம் உணரச் செய்த தமிழ்ப் பேரறிஞர் டாக்டர் உ.வே. சாமிநாதையரவர்களின் முதன்மையான மாணவர்; நல்ல ஆசிரியருக்கேற்ற நன்மாணுக்கர்; இலக்கியங்களைப் பதிப்பிப்பதிலும், உரைகள் எழுதுவதிலும் அடிக்குறிப்புக்கள் வரைவதிலும் இன்று ஐயரவர்களின் வாரிசாக விளங்குபவர்; நன்றி மறவாத நன்மாணுக்கர்; தாம் சொற்பொழிவு தொடங்கு முன் குருவணக்கமாகச் சாமிநாதர் அடிகள் வணங்கிப் புகழை வாழ்த்தியே தொடங்குபவர்.

திரு கி.வா.ஜ. நல்ல கவிஞர் என்பது பலருக்குத் தெரியாது. உரைநடை எழுத்தாளர் என்பதே ஊரறிந்த உண்மையாக இருக்கின்றது. 'ஜோதி' என்னும் புனைபெயரில் ஒளிந்து நின்று கவிதை ஒளி பரப்பும் கலைமதி இவர். 'மேகமண்டலம்' என்னும் கவிதைத் தொகுதியில் சொற்சுவை, பொருட்சுவை, உவமை நலம், கற்பனை நயம் தோன்றப் பக்திப் பாடல்கள் பல யாத்துள்ளதை அறிந்தவர், இவர் கவிஞர் என்பதனை உணர்வர். இலக்கண மரபு பிறழாத கவிதை பாட வேண்டும் என்னும் விருப்பம் உடையவராதலால் 'கவி பாடலாம்' என்ற தலைப்பில் கவிதையின் முக்கிய இலக்கணங்களையும் சிறந்த மரபுகளையும் எளிமையாக எழுதியுள்ளார். 'ஒரு விளக்கு ஆயிரம் விளக்குகளை ஏற்றுகிறது' என்பதைப் போல், ஒரு ஜோதி பல இளங் கவிஞர்களைத் தோற்றுவித்துள்ளது. இவர் விரைந்து பாடும் ஆற்றல் மிக்கவர் என்பதனைக் கண்டவர்கள், இவர் உள்ளக் கோவிலிலே கலைமகள் இடம் பெற்றதன்றி நாவிலும் நடம் பயில்வாள் போலும் என்று எண்ணுவர்.

இக்கால இளைஞர்கள் கண்டு அஞ்சும் கம்பராமாயணம், பெரிய புராணம் ஆகியவை இளமையிலேயே இவரோடு இரண்டறக் கலந்த இலக்கியங்கள். 'நவக்கிரகங்கள்' என்னும் இவரது நூலில் தியான சுலோகம், தோத்திரங்கள், கீர்த்தனங்கள் வெள்ளம்போல் பெருக்கெடுத்து அமையக் காண்கிறோம்.

இக்காலத்தில் அச்சுத் தமிழ் ஆரவாரத்தில் மக்கள் நாடோடி இலக்கியத்தை மறந்தனர். இலக்கிய வகைகளில் நாடோடிப் பாடல்களைச் சேர்க்கவும் மயங்கினர்; மறுத்தனர். நல்லது கண்டால் நயமுடன் போற்றும் இயல்பினர் இவராதலால், தமிழகத்து நாடோடிப் பாடல்களில் சொல்லழகும் சுவைநலமும் கண்டு, அவற்றில் ஈடுபட்டுப் பல திசை வழங்கும் பாமரர் பாட்டுக்களையும் பரப்பும் பணியைத் தம் இலக்கியத் தொண்டில் ஏற்றுக்கொண்டு அவற்றிற்கும் வாழ்வளித்தார். நாடோடி இலக்கியத்தின் தன்மையைக் 'குழந்தை உலகம்', 'மச்சு வீடு' என்னும் தொகுதிகளாக நாம் உணர அச்சேற்றினர்.

கட்டுரை இலக்கியம் ஆங்கிலத்தில் சிறந்துள்ளதுபோல் தமிழில் சிறக்க

வில்லை என்று கூறுபவர்கள் இவருடைய கட்டுரைகளைச் சற்று நோக்க வேண்டும். பிரயாணக் கட்டுரைகள் தமிழுக்குப் புதிய துறைதான். ஆயினும் கி.வா.ஜ. தமது பர்மாப் பயணம் குறித்துக் 'கலைமகளி'ல் எழுதியுள்ள கட்டுரைகள் பிரயாண இலக்கியத்திற்குச் சிகரம் அமைத்ததுபோல் உள்ளன. பர்மா நாடு பற்றிய பற்பல அற்புதச் செய்திகள், மக்கள் வாழ்வு, மனநிலை, இயற்கை இன்பம், இன்ன பிறவற்றை யெல்லாம் வரலாற்று ஆசிரியர்போல் வரைந்து காட்டியுள்ளார். கி.வா.ஜ.வின் கட்டுரை இலக்கியங்களை இரு வகையாகப் பகுக்கலாம். தெய்வப் பனுவல்களி லுள்ள திருப்பாடல்களை விளக்கும் கட்டுரைகள் ஒரு பகுதி; சங்க இலக்கியங்கள் பற்றி எழுதிய விளக்கக் கட்டுரைகள் மற்றொரு பகுதி. ஐம்பதுக்கு மேற்பட்ட கட்டுரை நூல்களை இவர் யாத்துள்ளார். திருமுறைகளின் எழிலை யெல்லாம், பாவலர்களின் பக்தி அநுபவங்களை எல்லாம், பக்தர்தம் உள்ளத்து உணர்ச்சிகளை எல்லாம் தெவிட்டாத தீந்தமிழில், 'திருமுறை மலர்களி'ல் அழகு ஒழுக எழுதிக் காட்டியுள்ளார். சில தமிழ்ப் புலவர்கள் பக்தி இலக்கியப் பணியோடு அமைந்துவிடுவர்.

இவர், இக்காலத்தில் இலக்கியச் சொற்பொழிவாளர் வரிசையில் முதலிடம் பெறத் தக்கவர்; கம்பராமாயணம், கந்த புராணம், திருமுருகாற்றுப்படை முதலிய பேரிலக்கியங்களை எழுத்தெண்ணிப் படித்தவர்; ஆதலால் இவர் சொற்பொழிவுகள் கருத்தாழத்தோடு கவர்ச்சியாக விளங்குகின்றன. மணியோசையன்ன கணீரென்ற குரலால் வளமான சொற்களை அமைத்துக் கேட்டார்ப் பிணிக்கும் தன்மையராய், சபையினைத் தம்பால் இழுக்கும் வல்லமையுடையவராய் விளங்குகின்றார். இவர் சொற்பொழிவுகளில் உவமைகள், உபகதைகள், பாடல் மேற்கோள்கள் குற்றாலத்தருவிபோல் தமிழிசை முழங்கி வரக் கேட்கிறோம். பக்திச் சொற்பொழிவுகளில் கதா காலட்சேப பாணியைப் பின்பற்றாமல் கருத்துள்ள இலக்கிய இன்பமும், பக்தியின் மூலநாதமும் ஒலிக்கக் கேட்கிறோம். கருத்தாழம் மிக்க கந்தரலங்காரச் சொற்பொழிவுகளே பற்பல நூல்களாக அமைந்து சொற்பொழிவு உரைநடை நூல்களாகச் சிறந்து திகழ்கின்றன.

இவர் எழுதிய குறிப்பிடத் தகுந்த ஆராய்ச்சி நூல், 'தமிழ்க் காப்பியங்கள்' என்பதாகும். வடமொழியிலும் தமிழிலும் காப்பியத்திற்குப் பலவேறு இலக்கணங்களும் மரபுகளும் உள்ளன என்பதனைத் தம் நுண்மாண் நுழைபுலத்தால் ஆய்ந்து இந் நூலில் விளக்கிக் காட்டியுள்ளார். அல்லும் பகலும் அயராது உழைத்துத் திருக்குறளுக்குப் பலர் எழுதிய உரையோடு கூடிய ஆராய்ச்சிப் பதிப்பினை, ஐயரவர்கள் பதிப்பு முறையில் கொண்டு வந்துள்ளார். இந்தப் பதிப்பின் அருமையை உணர்ந்து, கேரளப் பல்கலைக் கழகம், இந் நூலுக்குப் பரிசு வழங்கிப் பாராட்டியுள்ளது. கல்லூரிகளில் ஆசிரியராக அமையாவிட்டாலும், கல்வி கற்பிக்கும் நல்ல ஆசிரியருக்கு அமைய வேண்டிய அருங்குணங்கள் அனைத்தும் அமையப் பெற்றவர்.

தமிழ் வாழ்கிறது, வளர்கிறது, தமிழ் இலக்கணம் வாழ வேண்டும் என்ற கருத்தில் தொல்காப்பியச் சொல்லதிகார இலக்கணங்களை 'வாழும் தமிழ்' என்ற நூலில் எவரும் எளிதில் உணர, இவர் எளிமையாக்கிக் காட்டியுள்ளார். தொல்காப்பியம், படித்த பண்டிதருக்கே அச்சத்தைத் தருவது. 'அச்சம் தவிர்' என்னும் பாரதியின் ஆத்திசூடியினை உணர்ந்த இவர், 'பயப்படாதீர்கள்' என்னும் நூலில் இலக்கணத்தை எளிதில் உணரும்படி விளக்கியுள்ளார். இந் நூல், தமிழ் கற்பார் பலரது பயத்தைத் தெளிவித்ததோடு, 'தமிழ் வளர்ச்சிக் கழக'த்தின் பாராட்டையும் பெற்றுள்ளது. தொன்னூற்கு அஞ்சும் இயல்பு இவருக்கில்லை. இன்னும் சிலர், சங்க இலக்கியங்களே சாலும் எனப் பக்தி இலக்கியத்தைப் பார்க்கவும் மறுப்பர். கி.வா.ஜ. இரு வகை இலக்கியத்திலும் புலமையும் அநுபவமும் பெற்றவர். இரண்டையும் கற்றுணர்ந்து பரப்பும் கல்வியாளர். ஒவ்வொரு வகை இலக்கியத்தில் உள்ள உயர்வினையும் கருதுபவர். அணிசெய் காவியங்களில் ஆழ்ந்திருக்கும் கவி உள்ளம் கண்டு களிப்பவர்; நக்கீரர், கபிலர் முதலியோரின் பழமை இலக்கியம் முதல், அகிலன் போன்ற இக்காலப் புதிய இலக்கிய ஆசிரியர்கள் வரை நன்கு மதித்துப் போற்றுபவர். சிறுவர் இலக்கியத்திலும் சிந்தை செலுத்தி வருபவர். 'கவிஞர் கதை', 'வினையும் பயிர்' என்னும் நூல்கள் பள்ளிச் சிறுவர்தம் உள்ளம் கவர்ந்த தெள்ளு தமிழ் இலக்கியங்களாகும். கட்டுரைகளில், கருத்து மட்டுமல்லாமல், கூறும் திறமும் சேர்ந்துள்ளது. இலக்கியச் செய்திகளைக் கதைபோலக் கவினுறக் கூறுவர். இவரது எழுத்து, அறிவுக்கும் உணர்ச்சிக்கும் உவகையூட்டும் சொல்லோவியமாகும். புதிய இலக்கிய

வகையாகிய சிறுகதைத் துறையிலும் இவர் வெற்றி பெற்றுள்ளார். 'அறுந்த தந்தி' என்னும் புத்தகம் மனத்தைக் கவரும் நடையில், சிந்தனையைத் தூண்டும் முறையில் எழுதியுள்ள சிறுகதைத் தொகுதியாகும். இது தமிழக அரசின் பரிசினைப் பெற்ற கதை நூலாகும்.

கி.வா.ஜ.வின் தொண்டால், மூன்று வழியில் தமிழ் வளர்கிறது. சொற்பொழிவு ஒரு பக்கம்; பத்திரிகைப் பணி மற்றொரு பக்கம்; இலக்கிய நூல்கள் யாத்துப் பரப்பும் ஒளி பிறிதொரு பக்கம். இவ்வாறு முப்பக்கம் பட்டை தீட்டப்பெற்ற நல்ல வைரமாக நம் கி.வா.ஜ. அவர்கள் திகழ்கிறார். இவர் நூல்கள் பல கற்றவர்; சிற்றிலக்கியங்களைச் சிந்தையைக் கவரும் உரையாடல்களில் கலந்து வெளியிடுபவர்; சமரச நோக்குடன், காழ்ப்பின்றிச் சைவ வைணவ இலக்கியங்களைப் போற்றுபவர். ஆரவாரமில்லாது தமிழ்ப்பணியை அன்பாக நடத்தி வரும் பேரறிஞர்.

இயல்பான தமிழ் ஆர்வம், தமிழ் காத்த ஐயரவர்களிடம் பயின்ற பயிற்சி, 'கலைமகளி'ன் பணி, சமய இலக்கியங்களில் திளைத்த அன்புள்ளம், தொன்மை இலக்கியங்களுடன் கொண்ட தொடர்பு, நாடோடிப் பாடல் போன்ற மக்கள் இலக்கியங்களில் கொண்ட நாட்டம், புதுமை இலக்கியப் படைப்பில் கொண்ட ஈடுபாடு, இவ்வாறு நீண்ட நெடிய வரலாற்றுப் பெருமையுடைய தமிழ் மொழியின் எல்லாக் காலத்து இலக்கியங்களிலும் ஒன்றி நின்று அவற்றை விளக்கும் திறம், கேட்டார்ப் பிணிக்கும் தகையவான பேச்சு, நயத்தக்க நாகரிகமான பண்பாடு - இவையனைத்தும் கி.வா.ஜ. அவர்களை நல்ல இலக்கிய முழு மனிதராக ஆக்குகின்றன. ★

## அருட் கவி

*14-6-1964* அன்று இராசிபுரம் கைலாயநாதர் ஆலயத்தில் ஆறுமுகப் பெருமான் சந்நிதியில் கி. வா. ஜ. அவர்கள் கண்மூடிக் கரங்குவித்து மெய்சிலிர்க்க ஒருநெறி நின்று பாடிய பாட்டுக்கள் இவை—

சூறம்வளர்க்கும் எழில்மங்கை கரிவளர்க்கும் பேரணங்கு குழைந்து மேவும்
திறம்வளர்க்கும் மணவாளன் பன்னிரண்டு கண்ணுடைய செவ்வேள் வெற்றி
மறம்வளர்க்கும் ஓரிபணி இராசைபுரத் திருக்கோயில் வளரும் ஐயன்
அறம்வளர்க்கும் நாயகியாள் தரும்மைந்தன் ஈரடியை அடைந் துய்ந்தோமே. (1)

மின்னிரண்டு திரண்டனைய மங்கையர்கள் இருமருங்கும் விளங்க மேவி
என்னிரண்டு கண்குளிரக் கோலங்கொள் பெருமானை இலங்கு பூவாம்
பன்னிரண்டு கண்ணுடைய குமரோனை இராசைநகர்ப் பதியில் மேவித்
தன்னிரண்டு தாள்மலரைக் காட்டும்பிரான் தனைவணங்கிச் சார்ந்து வாழ்வாம். (2)

தமிழ்மணக்கும் திருவாயான் தயைமணக்கும் திருவுளத்தான் சாரும் உம்பர்
அமிழ்தனைய பாடலெல்லாம் தனிமணக்கும் திருத்தோளான் அன்பின் ஏத்திக்
கமழுமுளச் சாந்தமுறும் பக்தர்கள்தம் கருத்தினிலே கவின் மணக்கும்
இயழிசைசேர் சேவலெனும் கொடியுடையான் இராசைநகர் இருந்த செவ்வேள். (3)

ஆதரம் பெருக நின்பால் அடைந்துநின் புகழைப் பாடித்
தீதறும் நெஞ்சத் துள்ளே திருவுருத் தேக்கி என்றும்
மாதுயர் தீர்க்கும் நாமம் வாயினால் பாடி வாழக்
காதலேன் அருள்க ராசைக் கந்தனே எம்பிரானே. (4)



# தமிழின் திருவுருவம்

—தி. ம. பாஷ்யம்

கன்னித் தமிழ்ச் செல்வர், இலக்கிய உலகம் போற்றும் இன்சொல்லாசிரியர், மேதகு பெருந்தகை, நண்பர் திரு கி.வா. ஜகந்நாதன் அவர்கள் நம் நற்றமிழ் மக்கட்கு நற்றமிழின்பம் ஊட்டிய பெரும் புகழ் வேந்தர் என்பதைத் தமிழ்ப் பெரும் புலவர்கள் நன்கறிவர். இத் தமிழின் திருவுருவத்தை அடியேன் சில ஆண்டுகளுக்கு முன்பு பூக்கடை ஸ்ரீசென்னை மல்லீசுவரர் கோயில் அநுபூதி மண்டபத்தில்தான் கண்டேன். அன்று நம் கி. வா. ஜ. அவர்கள் 'கந்தர் அநுபூதி' பற்றி அருமையான சொற்பொழிவு நிகழ்த்தினார்கள். அவர்களுடைய இனிமைக் குரலும், எடுப்பான பேச்சும், இலக்கியப் புலமையும் என் உள்ளத்தை முழுமையாக ஈர்த்துவிட்டன. இத்தகு தமிழின் திருவுருவத்தை எத்தனை முறை வணங்கினாலும் போதாதென்றே அடியேன் மனத்தில் பட்டது. ஆயினும் அன்று அடியேன் மன நிறைவிற்காக ஒரு முறை விழுந்து வணங்கினேன். இன்னும் அதிருப்திதான். இத் தமிழ்த் திருவுருவம், இன்று அறுபது வயதை நெருங்குவதறிந்து உண்மையில் அடியேன் வியப்படைகிறேன். இந்தத் தருணத்தில் அடியேனுக்கு ஒரு வரலாறு நினைவுக்கு வருகிறது.

திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரைப்பற்றிய ஒரு சிறந்த பாடல் அவரை 'ஞானத்தின் திருவுரு' என்று புகழ்கிறது. அவருடைய இளமைப் பிராயத்தே சிவபெருமானே தன்னைத் ''தோடுடைய செவியன், விடையேறி, ஓர் தூவெண்மதி சூடி'' என்றெல்லாம் விசேடித்து ஆனந்திக்குமாறு அருள் செய்தான். இத்தகைத்தான பரமனின் அருள் விசேஷம் வேறு யாருக்குக் கிட்டும்? ஆகவே அவரை 'ஞானத்தின் திருவுரு' என்று கூறுதல் பொருந்துமன்றோ? அவருக்கு இப்பெயர்ப் பொருத்தம் பற்றிய சில காரணங்களைக் கீழ்வரும் பாடல் தெரிவிக்கிறது—

''ஞானத்தின் திருவுருவை
நான்மறையின் தனித்துணையை
வானத்தின் மிசையன்றி
மண்ணில்வளர் மதிக்கொழுந்தை
தேன்நக்க மலர்க்கொன்றைச்
செஞ்சடையார் சீர்தொடுக்கும்
கானத்தின் எழுபிறப்பைக்
கண்களிப்பக் கண்டார்கள்.''

இப்பாடலில் ஞானசம்பந்தப் பெருமான் 'ஞானத்தின் திருவுரு', 'நான்மறையின் தனித்துணை', 'வளர்மதிக் கொழுந்து', 'கானத்தின் எழுபிறப்பு' என்றெல்லாம் போற்றப் பெறுகின்றார். இதேபோல், நம் மதிப்புக்குரிய மணிவிழாப் பெருவள்ளல் கி.வா.ஜ. அவர்களும் தமிழ் இலக்கியங்கள் போதிக்கிற அறம் பொருள் இன்பம் வீடு என்ற நான்கினையும் முழுதுணர்ந்த 'ஞானத்தின் திருவுரு'வாகவும், அந்தணர்களுக்கு உரிய கடமையான - ஆசார அநுஷ்டானக் கிரமங்களான - திரிகால ஸந்த்யாவந்தனாதிகளைச் செய்து ஒழுக்க நியதிகளிலே விரதங்களை அநுஷ்டித்துக்கொண்டு வழுவாது நடந்து தம் சமய உபந்நியாசங்களிலே வேதார்த்தக் கருத்துக்களை எடுத்துச்சொல்லி ஆஸ்திகர்களையெல்லாம் நற்கதி பெற்றுய்யச் செய்வதனால் 'நான்மறையின் தனித்துணை'யாகவும், காலத்தால் அழியாத நம் கன்னித் தமிழ் மொழிக்குத் தம் 'கன்னித் தமிழ்' நூலால் இலக்கண வரம்பு நெறிகளைத் தெள்ளிதின் அனைவருக்கும் விளங்குமாறு கூறி 'முன்னோர் மொழி பொருள்' காத்து, தமிழிலக்கிய 'வானத்தின் மிசையின்றி' அறிஞர் குழாத்திடையே 'வளர்மதிக் கொழுந்தா'கவும், தம் இயற்றமிழ்ச் சொற்பொழிவுகளிலும் இசைத் திறமையை நிலைநாட்டிக் கேட்போர் அனைவரையும் இசைவித்தலால் 'கானத்தின் எழுபிறப்பா'கவும், மணிவிழாத் தருணமாகிய இதுபோது அவரன்பர்களாகிய நாமனைவரும் 'கண்களிப்பக் காணுமாறு' விளங்குகின்றாராதலால், இவர் 'அறுபதில் இளையோரே' ஆவர். இளைஞர்களுக்கு வழிகாட்டிப் பல்லாண்டு வாழ்க கி.வா.ஜ. என்று இறைவனை வேண்டுகிறேன். ★

## நண்பருக்கு இனிய நண்பன்

### மு. வரதராசன்

செந்தமிழ் ஈன்ற செம்மல்
சாமிநா தையர் என்னும்
விந்தையாம் அறிவின் செல்வர்
விரும்பியே வளர்த்துப் போற்றி
இந்தநற் றமிழ்நாட் டிற்கே
இனியதம் கொடையே ஆகத்
தந்ததோர் தமிழின் தொண்டன்
தகவுசேர் சமயத் தொண்டன். (1)

நலந்தரு நூல்கள் எல்லாம்
நாடொறும் தேர்ந்தும் துய்த்தும்
பலவகைப் பனுவல் ஆக்கிப்
பயன்மிக நல்கி யுள்ளோன்
உலைவிலாச் சொல்லின் மாரி
ஊர்தொறும் தழைக்கச் செய்தோன்
கலைமகள் எழில்வி ளங்கக்
கவினெழுத் தாணி ஏற்றோன். (2)

பண்புகள் நிறைந்த மேலோன்
பரந்தமெய் யுணர்வு சான்றோன்
நண்பருக் கினிய நண்பன்
நவில்சகந் நாத அண்ணல்
தண்மையே செயலில் சொல்லில்
தழைத்திடுந் தூய நெஞ்சன்
அண்மையில் அறுப தானோன்
அகமகிழ்ந் தென்றும் வாழி! (3)



## மணிமங்கலம்

### நா. கனகராஜ ஐயர்

உத்தம தான புரத்தி லுதித்தருள் ஒப்பில் தமிழ்ப்புலவர்
உத்தம தான புரத்தினை யெய்திய ஒள்ளிய செந்தமிழான்
சத்தம தானதோர் தத்துவ மெய்ப்பொருள் தந்தை பெறத்தருவான்
சுத்தம தான திருப்பெயர் நன்கு துணிந்தெழு நாவுடையான். (1)

தண்டமிழ் நூனெறி நன்கு தெளித்தருள் சாமிநா தையரையே
ஒண்டமிழ் தந்தருள் தெய்வ மெனக்கொளும் உத்தம பத்தியினன்
வெண்டமிழ் செந்தமிழ் பைந்தமிழ் என்று விரிந்துள உரைநடையில்
ஒண்டமிழ் புக்கு வளர்ந்திட நன்னர் உழைத்த எழுத்துடையான். (2)

மலைமகள் செல்வனை நெஞ்சுள் நிறுத்தி வணங்கிய கையுடையான்
அலைமகள் செவ்விய மலர்மகள் வந்துதன் அகமுற மேவியவன்
கலைமகள் என்றதோர் திங்க ளிதழ்ப்பணி கண்ட கருத்துடையான்
தலைமகள் நெஞ்ச மகிழ்ந்துற அறுபது தாண்டிய திருவுருவான். (3)

உறுவது தேறலர் முயறலு மற்றவர் ஒன்பது கோடியரே
அறுபது சேரிலென் எண்பது மேவலும் அவனி மகட்பொறையே
நறுவிது பைந்தமிழ் தேர்ந்தன னெழுதிய நாவொடு கையுடையான்
அறுபது வீறிய தவனி மகட்கமை ஆக்கம் விளைப்பதுவே. (4)

சிவனை மதிப்பது சிவசுதன் மெய்யருள் சேர நினைப்பதுவே
தவனை மிகுத்தது காண்மி னெனப்புகல் தண்டமிழ் வாழ்வுடையான்
இவனை மதித்தவர் எத்தனை யாயிரர் என்பதை யாரறியார்?
தவனை நனைப்புறு பொற்குட நீர்விழ வதனையு மெய்துவனே. (5)

மகளிருமைந்தரு மாண்பினெ டெய்தி மகிழ்ந்து மலர்சொரியப்
புகழினி லோங்கிய புலவர் சிகாமணி பொற்பமை கலைமகளின்
தகவு விளக்கிய தமிழர் சிரோமணி தாரினே டேருறவே
மிகவும் விளங்குறு காந்த மலைக்குள வியனிலை யெளியதுவோ. (6)

சாந்த மலைக்கிணை யாகிய உத்தம தானபுரப் புலவர்
ஈந்த மலைக்கிணை யாகிய கல்வியோ டேற்ற மடைந்தமனை
காந்த மலைக்கு ளிகத்திணை யின்மை கலித்துறு நாவலவன்
ஏந்த மலைக்குறு நெஞ்சினை வைத்தவன் இனிதுற வாழியவே. (7)

நாடு நினைத்த புகழ்ப்பெரு மாளிகை நண்ணிய சகநாதன்
தேடு தமிழ்த்திரு நீடு நிலைப்புறு சேவைபுரிந் துயர்க
பாடு திறத்தொடு நாவின் வளத்தொடு பாரக மேத்துநடை
ஏடு புகுத்திடு கைவள முள்ளவன் இன்புற வாழியவே. (8)



# கலைமகள் தந்தை

## ஆறுமுக நாவலர்

பாரில் புகழ்பெறு பாரத நாட்டில்
சீர்பெற் றிலங்கும் செந்தமி ழகத்தின்
சென்னி யெனத்திகழ் சென்னைநன் னகரில்
பன்னரும் நூற்பல பயின்றநற் புலவன்
பாமாலை புனையும் பண்புமிக் குடையோன்
பூமாலை இறைவர்க்குச் சாத்திப் பூசிக்கும்
புண்ணியன் கண்ணியன் நண்ணிடும் அன்பர்
எண்ணிய எண்ணம் ஈடேற்ற வல்லான்
அந்தமில் புகழுடைச் செந்தமிழ்க் குரவன்
சுந்தர சாமி நாதரின் சீடன்
கலைகள் நிரம்பிய கலைமகள் தன்னை
தலைமைப் புதல்வியாய் ஈன்றநற் றந்தை
முருகனை வழிபட முயல்வோர் தங்கட்
கொருவழி காட்டும் உரைவளம் உடையோன்
செந்தமிழ் தழைக்கவும் சிவநெறி ஓங்கவும்
எந்தநே ரமும்இணை யிலாப்பணி பலபல
ஆற்றியே வாழும் ஆற்றல்மிக் குடையோன்
சாற்றரும் சீரியன் தாரணி அதனில்
அறுப தாண்டு அறநெறி பிறழாது,
ஆறு முகத்தோன் அருளினல் வாழ்வோன்
கி.வா. ஜ.எனில் கீழ்மேல் உலகும்
நீவா எனவே நித்தமும் நவிலப்
பேரும் புகழும் பெருகப் பெற்றுச்
சீரும் சிறப்பும் சிறக்கப் பெறவே,
அருவும் உருவும் ஆகிய முருகன்
திருவடி தன்னைத் தினமும்
ஏற்றிப் போற்றி இனிதுவாழ்த் துதுமே.

# தமிழ்த் தரு

## மீரா, மிதிலைப்பட்டி

மங்கலப்பொற் சென்னையினில் வளர்தமிழ்நல்
 இதழெனும்பேர் மருவத் தோன்றித்
திங்கள்தொறும் அறிஞர்தரு சிறந்தகதை
 கட்டுரைகள் திகழத் தாங்கி,
எங்கணுஞ்சென் றமிழ்தெனுஞ்செந் தமிழ்வழங்கும்
 கலைமகளுக் கேற்ற சீர்த்தி
தங்குமுயர் ஆசிரியன் சட்டியப்த
 பூர்த்திவிழாத் தமிழர் பொன்னாள். (1)

மன்னுதமிழ் மிதிலையழ கியசிற்றம்
 பலமுதவு மதுரைச் சாத்தன்
பன்னுமணி மேகலைசி லம்பெழிற்சீ
 வகன்கதைகள் பத்துப் பாட்டோ
டின்னுமனே கந்தமிழ்நூல் எமக்களித்த
 உ.வே.சா. இனிய சீடன்
மின்னுபுகழ்ச் சகந்நாத வித்தகன்பின்
 எண்பதுறு விழாவும் கொள்க! (2)

மட்டவிழ்வெண் தாமரைமின் கோயிலெனத்
 தமிழ்த்தாத்தா வழுத்து மிந்தத்
தட்டறுசெந் தமிழ்மிதிலைக் கவனிறுதி
 நல்வரவு தந்த போதிற்
கிட்டியதிச் சகந்நாதப் பெருந்தகைநட்
 பெனக்குமிகக் கிடைக்கப் பெற்றேன்;
ஒட்டியமர்ந் திவனிடந்தம் உடைமையென
 வழங்குகவி உரைப்பே ரின்பம். (3)

சொற்பொழிவில் நூற்பொருளைத் தொகுத்துரைசெய்
 திறத்தினில்தேன் சுவைய ளாவும்
அற்புதச்செந் தமிழ்க்கவிதை அமைப்பதில்கட்
 டுரைகதைகள் அறிஞ ரேற்பப்
பொற்புறுநற் கலைமகளில் பொறிப்பதில்வல்
 லுநனெனப்பேர் புகழ்பெற் றோங்கும்
சற்குணவான் கி.வா.ஜ. தமிழ்த்தருபல்
 ஊழியிவண் தழைத்து வாழ்க! (4)



# சொல் மேதை

## க. கணேசன்

முத்தமிழில் நற்கலையில் மூழ்கி நல்ல
 முத்தான கருத்துக்கள் முகிழ்க்கச் செய்யும்
சத்துநிறை சொல்மேதை கவிஞ ரேறு
 சமயத்தில் பெரும்பற்று, கடவு ளன்பர்
இத்தரையில் 'கலைமகளால்' மொழிக்குச் சேவை
 இனிதாகச் செய்கின்ற தமிழின் தொண்டர்
தித்திக்கும் நற்றமிழின் தேர்ந்த ஞானி
 திருவாளர் கி.வா.ஜ. வாழி வாழி!

# கம்பன் வழித்தோன்றல்

## ஆர். சிவோகம்

ஐந்தெழுத்தின் பெருமையினை அறிஞர்கள்பாற் கேட்டதுண்டு;
செந்தமிழ்த்தாய் சேவடிக்கே சென்மமெலாம் தொண்டுசெயும்
சுந்தரச்சொல் உடையான்றன் தூயதமிழ் மூவெழுத்தின்,
முந்துமதன் பெருமையினை மொழிந்திடயாம் வல்லேமோ! (1)

அன்னையினும் அன்புடையன், அண்ணலாம் ஆரமுதன்,
கன்னலினும் இனிப்புடையன், கற்கண்டுக் கட்டியிவன்,
மன்னுலகின் பேறனைத்தும் வாய்த்திட்ட மாவழகன்,
இன்னமுதத் தேமொழியான் இணையிவனுக் கில்லையில்லை. (2)

கன்னித் தமிழ்மொழியில், கதை,கவிதை, கட்டுரையை
இன்னமுதாய்த் தீட்டியநல் இணையற்ற எழுத்தாள!
கன்னலோ! கனிரசமோ! கற்கண்டோ! தேன்பாகோ!
பொன்னனைய நின்னெழுத்து? பொற்புடைய கி.வா.ஜ. (3)

கவிஞர்பிரான் தற்காலக் கம்பனுடை வழித்தோன்றல்!
புவிபுகழும் உ.வே.சா. பெறற்கரிய பெருஞ்சீடா!
அவியுணவின் அருமையைப்போல் அன்புடையாய் நின்னெழுத்தைக்
கவினுறவே போற்றிடுவேம் காசினியில் எங்கணுமே. (4)

திருக்காந்த மலைதனிலே தினமணிபோல் உதித்தனையால்!
சருக்கரையோ! கற்கண்டோ! தேன்பாகோ! கனிரசமோ!
உருக்கமுடன் பெருக்கெடுக்கும் ஊற்றேநின் சொற்பெருக்கு!
செருக்கறவே தமிழறிந்த செந்தமிழின் தேவேயோ! (5)

ஆறுபஃ தாண்டுநிறை அருமைமணி விழாவினிலே
ஏறனையாய்! எங்கோவே! எழிலுடைய கி.வா.ஜ.
வீறுடனே எழுந்தருள்வாய்! வியனுற்ற முருகனைப்போல்
பேறெனயாம் கொண்டுருகும் பெறலரிய பெற்றியனே! (6)

மன்னனும் மகரிஷியாம் மதிப்பமைந்த ராஜாஜி
பொன்னெனவே போற்றுகின்ற பெருமைகொளும் கி.வா.ஜ.
அன்னவன்வாழ் சென்னையிலே அன்பர்நிதி வழங்கினரால்,
இன்னும்பல் லாண்டிருந்தே, இன்தமிழ்க்காய் வாழியவே! (7)



# எழுத்துலக வேந்தர்

## ந. ரா. முருகவேள்

அன்பருள் புலமை பண்பா
டனைத்தும்ஓர் உருவாம் சான்றோர்,
தென்கலைச் செல்வர் என்னும்
சிறப்புயர் சுவாமி நாத
மன்பெரும் பேரா சான்றன்
மாணவ மணியாம் தோன்றல்,
நன்குயர் கி.வா. ஜ.தாம்
நலமெலாம் பெற்று வாழ்க! (1)

செந்தமிழ்நற் செல்வர், சிறந்துயர்ந்த பேச்சாளர்,
தந்தைஎன எற்கருளும் தண்ணளியார்,—முந்தும்
எழுத்துலக வேந்தர், இணையில்கி. வா.ஜ.
செழித்தினிது வாழ்க! சிறந்து. (2)

முருகனடி மறவாத மூதறிஞர், பெருந்தகையார்,
பெருகுதமிழ்த் திருவினராய்ப் பிறங்குநல்லார், என்போல்வார்
கருதிமிகத் தொழும்சிறந்த கலைப்புலவர், கி.வா.ஜ.
ஒருகுறைவின் றின்பமிக உவந்தூழி வாழ்க!நன்றே. (3)

# அமுத கங்கை

## தமிழழகன்

செந்தமிழாம் தேன்கடலைக் குடித்த தீரன்;
சிந்தையெலாம் கவிதைமணம் கமழும் செம்மல்;
சந்ததமும் மொழிநலனைக் காக்கும் தக்கான்;
சங்கத்தார் பரம்பரையை நாட்டும் சான்ருேன்;
எந்தவொரு வேளையிலும் இனிய பேச்சான்;
இலக்கியமே வாழ்க்கையெனக் கொண்ட மூச்சான்;
முந்துதமிழ்த் தெய்வத்தின் மூத்த பிள்ளை;
மூதறிஞன் கி.வா.ஜ. வாழி!வாழி! (1)

ஆறுமுக அண்ணலுக்கோர் அன்பன்; வான
அமுதகங்கை சொரிவதுபோற் பெருஞ்சொற் கொண்டல்;
மாறுமுகம் இல்லாத மலர்மு கத்தோன்;
மனம்வாக்குக் காயமெலாம் தூய செல்வன்;
வேறுமுகாம் உள்ளவரும் விரும்பிப் போற்றும்
வித்தகனுய் ஆண்டறுபான் வாழ்ந்து கண்ட
பேறுமுகந் தருமைமணி விழாவும் பெற்ருேன்;
பேரறிஞன் கி.வா.ஜ. வாழி!வாழி! (2)

புகழ்நாதம் எத்திசையும் எதிரொலிக்கப்
புலவனெனும் சொல்லுக்கே உரைவ குக்கத்
திகழ்நாத ஞும்நம்முன் தவங்கள் சேர்ந்து
திருவருளால் வந்துற்ருன்; புரிந்த தொண்டும்
யுகநாத மாய்த்தமிழ்தான் வாழு மட்டும்
உச்சிமிசைக் கொண்டாடப் பெறுமாம்! அந்தச்
சகந்நாதன்; நம்சாமி நாதன் தந்த
தமிழறிஞன் கி.வா.ஜ. வாழி! வாழி! (3)



# இன்னமுதம் கண்டளித்தான்

## ப. சி. ஜகந்நாதன்

செல்லரியாத் தேவாரம் தேயமுயத் தேர்ந்தளித்து
நல்லூழால் நற்புகழை நாட்டினன்—வல்லியக்கோ;
பண்டைத் தமிழ்ப்பனுவற் பாற்கடலாழ்ந் தின்னமுதம்
கண்டளித்தான் கி.வா.ஜ. காண். (1)

'வழிகாட்டி' நூலெழுதி வள்ளிமகிழ் நன்ருள்
வழிகாட்டி நின்று வயங்கப்—பழிபிறங்காப்
பண்டைத் தமிழ்நெறிகள் பாருவப்பப் பாரியென
விண்டான் விறலேத்து வாம். (2)

கேட்டார்ப் பிணிப்பவாய்க் கேளாரும் வேட்பவாய்
நாட்டுபுகழ் மேடையெலாம் நல்லுரைகள்—நாட்டுவான்;
கட்டுரைப்பான்; நூல்யாப்பான்; காழினிய ஆய்வுரைகள்
கொட்டுவான்; வாழ்க!தமிழ்க் கோ. (3)

உ.வே.சா. பேணும் உரனுர் புலமைக்
கி.வா.ஜ. கேட்டோம் கிளர்ந்தே—உவாமதிபோல்
நின்றன் மணிவிழவில் நேயமுளோர் இன்புறல்போல்
என்றும்நீ வாழ்க இனிது. (4)

ஆயிரத்துத் தொள்ளா யிரத்தறுபா னறதனில்
மேயவரும் ஏப்ரல்சேர் மும்மூன்றில்—சேயவனேர்
கி.வா.ஜ. எய்தும் அறுபானுண் டிந்நாளில்
நாவார வாழ்த்துதும் நாம், (5)

# வாக்கின் செல்வ!

## வீ. ர. வேங்கடதீட்சிதன்

காவிரி காவிரி கவினுறு மருதத்
தாவெழின் மிக்க மோகைத் தலத்தில்
ஏந்தெழின் மிக்க காந்த வெற்பிடை
சண்முக நாதன் தாளிணைப் போற்றும்
கோசிக மரபின் வாசுதே வற்குப்
பார்வதி பயந்த பல்கலைக் குரிசில்!
முத்தமிழ் வித்தகன் சாமி நாதன்
உத்தம தான புரமுதித் தோன்றன்
இணையடி புணையா இன்றமிழ் கடந்தோய்!
செவிவழி நுகரும் செம்மல்நின் பாக்கள்
எண்ணி லென்றன் எண்ணி லடங்கா.
உரைநடைத் திறத்தை உரைக்க என்றன்
வரையறைக் கியலுமோ வாக்கின் செல்வ! நின்
சொற்பொழி வதனில் சொக்கிடும் புலவோர்
பற்பல ராகப் பன்னநாள் யார்கொல்?
மாணவர் பைங்கூழ் மழைகண் டன்னநின்
போதனைச் சிறப்பால் பொலிவுபெற் றிடுதல்
மன்னில மறியும் மற்றிவை நின்பால்
நன்ன ராக நாமகள் படைத்தபின்
என்னினித் தேனும் பாலும் எமக்கினி
நின்னடித் தொழும்பின் நிற்படர்ந் தெம்போல்
பன்மா க்கர் பரசுவ ராகக்
கன்மலை யாறு கதிரவன் விளங்கும்
கால மெல்லாம் கவின்பெற
வாழி வாழி வழிசிறந் திடவே.

# முருகன் அநுபூதி

எண்கொள்ளாப் பெரும்புகழ்சேர் சிலம்புத் தாளும்
இடையிலங்கும் பொன்னுடை எழிலும் மார்பில்
விண்கொள்ளாத் தேவரெலாம் போற்றும் தாரும்
விளங்குமணி மதாணியும்கை வேலும் வீரத்
திண்கொள்ளா மற்பொங்கித் திரண்ட தோளும்
திருமுகமும் இருவிழியும் கொண்டைப் பாங்கும்
கண்கொள்ளாப் பேரழகு பொங்க நிற்கும்
காட்சியிலே முருகனெதிர் நின்ருன் அம்மா! (1)

கண்காணும் பேரழகும் கருத்திற் காணும்
கதிருருவும் இளமுருகன் அருளால் காண்பார்
பண்காணும் பாட்டிசைப்பார்; இன்ப துன்பப்
பகுதியின்வேற் றுமைஅறியார்; ஞானனந்தத்
தண்காணும் அருட்கடலில் குளிப்பார்; தேகம்
தாங்கினும்ஒட் டாதிருக்கும் தகைமை காண்பார்;
மண்காணும் சுவைமறந்து தனித்த மோன
வானத்திற் பறக்கும்அநு பூதி ஆர்வார். (2)

—ஜோதி



# என் பாட்டனருடன்

—க. சுப்பிரமணியன்

மண்கண்ட வெண்குடைக் கீழாக
மேற்பட்ட மன்னருமென்
பண்கண் டளவிற் பணியச்செய்
வாய்; படைப் போன்முதலாம்
விண்கண்ட தெய்வம்பல் கோடியுண்
டேனும்வி ளம்பிலுன்போற்
கண்கண்ட தெய்வ முளதோ
சகலக லாவல்லியே!

என்ற குமரகுருபரர் தோத்திரப் பாடலை என் பாட்டனர் டாக்டர் ஐயரவர்கள் பிரசங்கத் தொடக்கத்தில் சொல்லுவது வழக்கம். கலைமகளை அவர் கண்கண்ட தெய்வமாக வாழ்க்கை முழுவதும் அநுபவித்ததே இதற்குக் காரணமெனக் கருதுகிறேன். இத்தகைய பேராசிரியரிடம் நம் கி.வா.ஜ. அவர்கள் 1927-ஆம் ஆண்டின் இறுதியில் வந்து சேர்ந்தார். ஆசிரியருக்கு மாணவரிடம் விசேஷ அன்பும், மாணவருக்கு ஆசிரியரிடம் விசேஷ பக்தியும் ஏற்படுவது அரிது. இந்த வகையில் டாக்டர் ஐயரவர்களும், வாகீச கலாநிதி, திருமுருகாற்றுப்படையரசு, செந்தமிழ்ச் செல்வர் கி.வா.ஜ. அவர்களும் தமிழுலகுக்கே எடுத்துக்காட்டாக விளங்கினர்கள். 1927 முதல் 1942 வரை, சுமார் பதினைந்து ஆண்டுகள் இவ்விருவர் வாழ்க்கையிலுமே ஒரு புதிய யுகம் என்று சுருங்கக் கூறலாம்.

தியாகராச விலாசத்துக்குக் கிருஷ்ணராயபுரம்வாசுதேவ ஜகந்நாதன் அவர்கள் கதராடையுடுத்து, ருத்திராட்சமணிந்து திருநீற்றுப் பொலிவுடன் சீலராக வந்து சேர்ந்த காட்சி என் மனக்கண் முன் இன்றும் நின்று நிலவுகிறது. அழகிய எழுத்து, தூய சிந்தனை, நல்ல வாக்கு; இவை மூன்றும் ஒருங்கே பெற்ற கி.வா.ஜ., ஐயரவர்களின் உள்ளத்தைக் கவர்ந்தார்.

ஐயரவர்களுக்குத் தமிழ்ப் பணியில் உதவி செய்ய எப்பொழுதும் இரண்டு மூன்று மாணவர்கள் இருப்பது வழக்கம். சிலர் படித்த பண்டிதர்களாகியும், ஐயரவர்களிடம் தொண்டு செய்யச் சேர்ந்தார்கள். அவர்களிற் பெரும்பாலோர், பிரதி செய்தல், புத்தகங்கள் அச்சிடுங்கால் ஒப்பு நோக்குதல் (புரூப் பார்த்தல்) முதலிய வகையில் ஐயரவர்கள் இட்ட பணியையே செய்து வந்தார்கள்; அவர்களிடம் புதிய கருத்தை எடுத்துக் கூறவோ, தாமும் சிந்தித்து ஏதாவது தெரிவிப்பதற்கோ முற்படவில்லை. ஆனல் கி.வா.ஜ. சேர்ந்தபின், அவர் தனிப்பட்ட வகையில் ஐயரவர்களின் பேரன்புக்குப் பாத்திரராக விளங்கினர். செய்யுள் நயங்களை ஐயரவர்கள் அநுபவிக்கும் பொழுது, கி.வா.ஜ. தாமும் அநுபவிப்பதுடன், தம் மனத்தில் தோன்றும் புதிய எண்ணங்களை எடுத்துக்கூறி மகிழ்விப்பார். இயற்கையாகக் கவி பாடும் ஆற்றலை இளமையிலேயே பெற்றிருந்த கி.வா.ஜ., செய்யுள்நயத்தைத் தம் புதிய கவிகளில் புகுத்தி ஐயரவர்களை அநுபவிக்கும்படி செய்வார். இந்த முறையில் மாணவரும் ஆசிரியரும் பழகலாயினர். ஆதலின் அவர்களிடம் அன்பும், நூல் நயங்களைச் சுவைப்பதில் நாளுக்கு நாள் ஆர்வமும் பெருகலாயின.

யார் பார்க்க வந்தாலும் கி.வா.ஜ.வை, அவர்கட்கு அறிமுகம் செய்து வைப்பதில் ஐயரவர்கள் பெருமிதமடைந்தார். படித்த பேரறிஞர்களிடம் கி.வா.ஜ. கவி பாடுதலும், புதிய கவிகளை அவர்கள் முன் இயற்றிக் காட்டுதலும் தினசரி நிகழ்ச்சிகளாக இருந்தன. ஐயரவர்கள் வெளியூர் யாத்திரை செல்லுங்காலும், கி.வா.ஜ.வுடன் செல்வார். அங்கே சந்திக்கும் கனவான்களிடமெல்லாம் தம் மாணவரின் திறனைப்பற்றி ஐயரவர்கள் எடுத்துக் கூறுவார். இத்தகைய சூழ்நிலைகளில் ஐயரவர்களின் தமிழாராய்ச்சி விரிவடைந்தது. வசன நடையில் தம் கருத்தை ஐயரவர்கள் அதிகம் செலுத்தும்படி செய்தவர் கி.வா.ஜ. அவர்களே.

இளமையிலேயே பத்திரிகைக்கு எழுதுவதில் ஈடுபட்டிருந்தமையால், தமிழ் அறிவு வளர வளர, வசன நடையில் எந்த நூற் கருத்துக்களையும் செவ்வனே அமைத்தல் கி.வா.ஜ.வுக்கு எளிதாயிற்று.

ஐயரவர்கள் பதிப்பித்த பத்துப்பாட்டுக்குப் பொருட்சுருக்கம் என்ற பகுதியைக் கி.வா.ஜ. திறம்பட எழுதியுள்ளதை நான் பல முறை படித்து இன்புறுவதுண்டு. இவ்வண்ணமே பரிபாடல், புறப்பொருள் வெண்பாமாலை முதலியவற்றுக்கெல்லாம் ஐயரவர்கள் கருத்துப்படி விரிவான முறையில் விளக்கங்கள் எழுதுவதில் தம் திறனை வெளியிட்டார் கி.வா.ஜ.

சென்னைப் பல்கலைக் கழகத்தில் ஆராய்ச்சித்துறை மாணவர் என்ற வகையில் சில ஆண்டுகள் கி.வா.ஜ. பணிபுரிந்தபோது, குறுந்தொகைக்கு ஆராய்ச்சிக் குறிப்புரையும் விசேடவுரையும் எழுதுவதில் ஈடுபட்டார். குறுந்தொகைப் பதிப்பின் சிறப்புக்கு ஜகந்நாதையரே முக்கிய காரணம் என்று ஐயரவர்கள் பல முறை பாராட்டிக் கூறியதுண்டு. வித்துவான் தேர்வில் முதலிடம் பெற்ற கி.வா.ஜ. வெறும் பள்ளி ஆசிரியர் தொழிலை விரும்பவில்லை. கட்டுப்பாடில்லாத சுதந்தர வாழ்க்கையை விரும்பினர். கட்டுரை எழுதுதல், நூல் ஆராய்தல், புதுக் கவிகள் புனைதல் இவற்றிலேயே நாட்டமுற்றார். ஆதலின் ‘கலைமகள்’ பத்திரிகையின் துணை ஆசிரியராகச் சேர்ந்தபின், வாழ்நாளில் எல்லாத் துறைகளிலும் தம் முழுத் திறனையும் காட்டி வெற்றியடைந்தார் நம் கி.வா.ஜ. அவர்கள்.

பத்திரிகாசிரியர்களை எல்லாம் ஐயரவர்களைச் சந்திக்கும்படி செய்து அவரவர்கள் பத்திரிகைகளில் ஐயரவர்களின் கட்டுரைகள் வெளிவரும்படி செய்தார். ஐயரவர்களின் மனத்தில் நூற்றுக்கணக்காகப் பொதிந்திருந்த கருத்துக்கள், செய்திகள், புலவர் வரலாறுகள், ஆலயச் சிறப்புக்கள் அனைத்தும் வெளிவரத் தக்க வாய்ப்பு ஏற்பட்டது. இங்ஙனம் வெளிவந்த கட்டுரைகள் பின்னர் நூல் வடிவிலும் வெளியாயின. இந்த வகையில் ஐயரவர்களிடம் கி.வா.ஜ. தொண்டு புரிந்து அவருடைய முழு அன்பைப் பெற்றார். தம் ஆசிரியப்பிரானுகிய மகா வித்துவான் பிள்ளையவர்களின் சரித்திரத்தை எழுதி வெளியிட, டாக்டர் ஐயரவர்களுக்குப் பெருந் தொண்டராக இருந்தார், தலைசிறந்த மாணவராகிய கி.வா.ஜ. அவர்கள்.

அம்மட்டோடு நிற்காமல் கி.வா.ஜ.வின் பெருந் தொண்டு யாதெனில், ஐயரவர்களின் சுயசரிதம் ‘ஆனந்த விகடனி’ல் வாரந்தோறும் வெளிவருமாறு செய்ததுதான். ஐயரவர்கள் எளிதில் உடன்படவில்லையாயினும், தம்முடைய கருத்துக்களை எடுத்துக்கூறி, சரித்திரம் தமிழ்நாட்டு வரலாறுதலின் அவசியம் வெளிவர வேண்டும் என்பதை வற்புறுத்தவே ஐயரவர்களும் மனமிசைந்தார். வாரந்தோறும் சுணங்காமல் சரித்திரப் பகுதி ஓர் அத்தியாயம் வெளிவர, கி.வா.ஜ. அவர்கள் சிறந்த தொண்டு புரிந்தார். அவ்வப்பொழுதுதான் விஷயங்களைச் சொல்லுவார்கள் ஐயரவர்கள். அவற்றை முறைப்படுத்தி, வகைப்படுத்தித் தொடர்பு அறுவண்ணம் தம் முழுக் கவனத்தையும் செலுத்தி, கி.வா.ஜ. நல்ல வடிவத்தில் ஐயரவர்களின் அருகில் இருந்தே எழுதினர். இந்தத் தொண்டில் பல ஆராய்ச்சிகள் இடம் பெற்றன. குருபக்தி கி.வா.ஜ.வுக்கு நாளுக்கு நாள் பெருகியதே தவிரச் சிறிதும் குறையவே இல்லை. ஆசிரியருக்கோ மாணவரிடம் பற்று வளர்ந்துகொண்டே வந்தது. முதுமை அடைய அடைய, மாணவர்மீது தழுதழுத்த வகையில் அன்பு மீதூர்ந்தது.

ஜகந்நாதையரை ஒரு நாள் பார்த்துப் பேசாவிட்டால் சோர்வடைவார் ஐயரவர்கள் என்று சொன்னுல் அது பிழையாகாது. இத்தகைய ஆசிரியரையும் மாணவரையும் காணுதல் மிகமிக அரிதே. ஆசிரியர் மனத்தில் மாணவர் குடி கொண்டார். எல்லா மாணவர்களுக்கும் இத்தகைய வாய்ப்புக் கிடைக்குமா என்பதை எண்ணும்பொழுதுதான் வியப்பு ஏற்படுகிறது. ‘தமிழ் செய்த தவப் பயன்’ என்ற தொடருக்கு, டாக்டர் ஐயரவர்களிடமும் கி.வா.ஜ. அவர்களிடமுந்தான் நாம் விளக்கம் காணலாம். நிலையான புகழைப் பெற்ற ஒரு பேராசிரியர், நிலையான புகழடையும்படி தம் மாணவரையும் செய்வித்தார். அதில் பெருமிதம் அடைந்தார். இன்று மணிவிழாக் கொள்ளும் கி.வா.ஜ. அவர்கட்கு, ஐயரவர்கள் வானுலகத்திலிருந்து தம் நல்லாசியை வழங்குவார் என்பதில் ஐயமில்லை. ஐயரவர்களின் பேரன் என்ற முறையில் என் மனமார்ந்த நல்வாழ்த்துக்களையும் வணக்கத்தையும் கி.வா.ஜ. அவர்களுக்கு இந்தக் கட்டுரையின் மூலம் தெரிவித்துக் கொள்ளுகிறேன். கி.வா.ஜ. வாழ்க பல்லாண்டு!

★



# டாக்டர் சாமிநாதையரவர்களுடன்

—ரா. விசுவநாதன்

கி. வா. ஜ. (கிருஷ்ணராயபுரம் வாசுதேவ ஐயர் குமாரர் ஜகந்நாதையர்) அவர்கள் கருவிலே திருவுடையவராகப் பிறந்தார்.

அகண்ட காவேரிக் கரையிலுள்ள புகழ் வாய்ந்த அக்கிரகாரமாகிய கிருஷ்ணராயபுரத்திலேயே இவர் இளமையில் வசித்து வந்தார். இவர் தமக்கு நினைவு தெரிந்து தமிழ் நூல்களைக் கேட்கவும் படிக்கவும் திறமை உண்டானதிலிருந்தே திருவாசகம் திருப்புகழ் முதலான நூல்களிலிருந்து பாடல்களைக் கேட்கவும், தாம் படிக்கக்கூடிய நூல்களிலிருந்து அந்தப் பாடல்களைப் படிக்கவும் விரும்பி வந்தார். இவருக்குப் பதினொரு பிராயம் நடந்துகொண்டிருந்தபோது, இலக்கண விதிகளைப் பற்றிய அறிவு பெறாத காலத்திலேயே, மோனை, எதுகை, ஓசையழகு அமையப் பாடல் பாடும் திறமை உண்டாயிற்று. ஒரு நாள் மாலை கிராமத்திலுள்ள கோயிலுக்கு மக்கள் சென்று திரும்புவதைப் பார்த்துக்கொண்டிருந்த இவருடைய நாவிலிருந்து பின்வரும் பாடல் உதயமாயிற்று—

மன்றிலே காலை வைத்து
மன்றிலே நடனம் செய்த
மன்றுளெம் பெருமான் றன்னை
வாழ்த்தியே செல்வ மான
கன்றுகள் தாயை விட்டுக்
கண்களில் நீரை வார்த்துச்
சென்றது போலுந் தாங்கள்
சேர்ந்தன ரகங்கள் மன்னோ.

தம் ஆயுளுள், பல்லாயிரக் கணக்கான பாடல்களைப் பாடியும், பல நூறு மேடைப் பிரசங்கங்களை இயற்றியும், நூற்றைம்பதுக்கு மேலான நூல்களை எழுதி வெளியிட்டும் விளங்கி வரும் இக்காலத்தில், கி.வா.ஜ. அவர்களே மேலே உள்ள தம் முதற் பாடலைக் காணும்போது எவ்வாறு உணர்வார்களோ அறியோம். ஆனால் பதினொரு பிராயமுள்ள பள்ளி மாணவன் இத்தகைய பாடல் பாடுவதை நாம் பார்க்கும்போது நமக்கு இவருடைய வருங்காலப் பெருமைக்கு உரிய விதை அந்த இளமையிலேயே வேர்விட்டது என்பது புலனாகிறது. அப்பொழுது இவர் தினந்தோறும் உடன் பயிலும் பிள்ளைகளோடு தம் ஊரிலிருந்து ஏறக்குறைய ஐந்து மைல் தூரத்தில் இருந்த குளித்தலைக்குச் சென்று அங்கிருந்த ஹைஸ்கூலில் படித்து வந்தார்.

இவருடைய பாடல் திறமை, கிராமத்திலும் பள்ளிக்கூடத்திலும் மக்களிடையே பரவியது. கிராமத்துச் சிறுவர்களும் சிறுமியரும் தங்கள் மனத்தில் பட்டவற்றுக்கெல்லாம் நம் இளங் கவிஞரைப் பாட்டுப் பாடித் தர வேண்டுவர். அவ்வாறே இவரும் பாடல்களைப் பாடி அளிக்க, அந்தச் சிறுவர்கள் அவற்றைப் பெற்றுத் தாமே பாடிக் கொம்மாளம் அடிப்பதைக் காண்பது இவருக்கு மிகுந்த களிப்பை அளிக்கும். இது நடந்தது 1917-ஆம் ஆண்டில். இவருடைய வகுப்பு மாணவர்களுக்கும் இவருடைய கவிதா சாமர்த்தியம் மிகுந்த மகிழ்ச்சி அளித்தது. அவர்களுள் ஒருவன், இவருக்கு 'இளம்பூரணன்' என்ற பெயரைச் சூட்ட, அதுவே சில காலம் இவருக்கு மாணவர்களிடைய வழங்கும் பெயராயிற்று.

இவ்வாறு உடனிருந்தவர்களாலும் ஊராராலும் தூண்டப் பெற்றதனால் நம் பாலகவிஞர்க்குத் தன்னம்பிக்கை அதிகம் உண்டாக, அதே ஆண்டில் 'போற்றிப் பத்து' என்ற பதிகம் ஒன்றைப் பாடி, அக்காலத்தில் வழங்கி வந்த 'ஒற்றுமை' என்ற பத்திரிகைக்கு அனுப்ப, அதன் ஆசிரியர் அதனைப் பதிப்பித்து வெளியிட்டார். அதைக் கண்டதும் மகுடம் பெற்றது போன்ற பெருமை நம் கவிஞர்க்கு உண்டாயிற்று. அக்காலத்தில் லால்குடிப் பள்ளியில் தமிழ்ப் பண்டிதராக இருந்த நரசையர் என்பவர் இச்செய்தியைக் கேட்டு, கி.வா.ஜ.வை மிகவும் பாராட்டினர். இந்தப் பாராட்டு இவருக்கு மிகுந்த ஊக்கத்தை

அளித்தது. முன்னைவிடத் திருவாசகம், திருப்புகழ் முதலிய நூல்களை இவர் அதிகமாகப் படிக்கத் தொடங்கினர். விநோதரச மஞ்சரி என்னும் நூலைப் பெற்று அதிலுள்ள செய்யுள்களை மாதிரி யாக வைத்துக்கொண்டு நூதன முறை யில் பலவகைப் பாடல்களை இவர் பாடத் தொடங்கினர். இவ்வாறு சில ஆண்டுகள் கழிந்தன.

1921-ஆம் ஆண்டில் காந்தியடிகள் தலைமையில் தேசீயப் போராட்டம் தொடங்கியது. அதில் பெரிதும் இணக் கம் கொண்ட நம் வீரக் கவிஞர் தாமே கதர் நூற்றும், கதராடையே கட்டி யும், திலகர் வாசகசாலை போன்ற சங்க நடவடிக்கைகளில் கலந்துகொண்டு செயலாற்றியும் வந்ததுடன், தேசீய கீதங்களை ஒன்றன்மேலொன்ருக யாத்து உலகுக்கு அளித்து வந்தார். அக்காலத் தில் இவர் பாடியவற்றுள் சுதந்தர தேவி திருப்பள்ளியெழுச்சி, சுதந்தர தேவி திருக்கோயில் முதலியன சிறந் தவை. இப்பொழுது இவர் தாமே படித்து வந்த நூல்களின் எண்ணிக்கை யும் பெருகலாயிற்று. தேவாரத்தோடு, தமக்குக் கிடைத்த தமிழ்ப் புராணங் களையெல்லாம் இவர் படித்து வந்தார்.

ஆத்மிக வளர்ச்சியும் இவரிடம் வளரலாயிற்று. நாள் தவருமல் சிவ பெருமான்மீது இவர் ஒரு வெண்பாப் பாடி வருவதை நியமமாகக் கொண் டிருந்தார். தினந்தோறும் சிவ பூஜை செய்வதும் உண்டு. இக்காலத்தில் இவர் பெற்ருேர்கள், அருகில் இருந்த மோகனூரில் குடியேறினர்கள். அவ்வூர்ச் சிவாலயத்துக்குக் கி.வா.ஜ. நாள் தவருமல் போய் வந்தார். இவ ருக்குப் பஞ்சாக்ஷர உபதேசம் செய்து கொள்ள வேண்டும் என்ற விருப்பம் உண் டாயிற்று. அதற்கேற்ற குருவை இவர் நாடினர். கடைசியாகக் கோயிலிலுள்ள தக்ஷிணமூர்த்தியையே தம் குருவாகக் கொள்ளத் தீர்மானித்து, ஓர் ஏட்டில் ஐந்தெழுத்து மந்திரத்தை வரைந்து, அக் கடவுளின் திருவடிகளில் சமர்ப் பித்து அதனை எடுத்துக்கொண்டார்.

மோகனூருக்கு அருகில் காந்த மலை என்ற சிறிய மலையில் முருகப்பெருமான் கோயில் கொண்டுள்ளார். அக் கோயிலுக் கும் இவர் அடிக்கடி சென்று இரவில் வெகு நேரம் நின்று அப் பெருமானை வழிபடுவதும் அவர்மீது பல சந்தப் பாடல்களைப் பாடி மகிழ்வது மாகியவற்றை மேற்கொண்டார். காந்த மலையில் அடிக்கடி பெரியோர்கள் எழுந்தருளித் தமிழ்ச் சொற்பொழிவுகள் இயற்றுவது உண்டு. நம் கி.வா.ஜ. வும் அவற்றில் கலந்து கொண்டு பாடுவதையும் பேசுவதையும் பழக்க மாகக் கொண்டார். இவரிடம் நெருங் கிப் பழகியவர் இவரை அக்காலத்தில் 'முருகன் அருள் பெற்ற முனிவர்' என்று அழைப்பது வழக்கம்.

இவ்வாறு சாதுக்களுடன் பழகி வந்த தனுலும், நல்ல நூல்களைப் படித்து வந்த தனுலும், பக்திப் பாடல்களைப் பாடி அடிக்கடி மனமுருகி வந்ததனுலும், ஜபங் களை விடாமல் செய்து வந்ததனுலும் நம் இளைஞர் மனத்தில் விவேகம் தோன்றி வளரலாயிற்று. அத்துடன் உலக விரக்தி யும் தோன்றிற்று. அக்காலத்தில் சேலம் நகரை அடுத்த சேந்தமங்கலம் என்னும் கிராமத்தில் ஸ்ரீ ஸ்வயம்பிரகாச பிரம் மேந்திர ஸரஸ்வதி என்ற பெரியார் ஆசிரமங் கொண்டு அடியார்களை அநுக் கிரகித்து வந்தார். அம் முனிவரைத் தாம் அடைந்து அவர்களிடம் துறவு பெற்றுக்கொள்ள வேண்டும் என்ற அவா, பண்பட்ட மனம் பெற்ற நம் இளைஞ ருக்கு உண்டாயிற்று. அப்பொழுது இவருக்குப் பிராயம் பதினேழு.

இடுப்பில் கட்டிய ஒரே கதர் வேஷ்டி யுடன் பதினேழு பிராயமுள்ள இவ் வாலிபர் தம் ஊரிலிருந்து பத்தொன்பது மைல் நடந்து சேந்தமங்கலம் அடைந்து, முனிவரின் அணுக்கத் தொண்டராக இருந்த சங்கரானந்தர் என்பவர் துணை யுடன் அப் பெரியாரை அடைந்து அவர் முன்பு நெடுஞ்சாண்கிடையாகத் தண்ட னிட்டுத் தம் பிரார்த்தனையை அவரிடம் விண்ணப்பித்து நின்ருர். ஆனல் முனிவர் வந்தவரின் பிராயம், குடும்ப நிலைமை முதலியவற்றைக் கேட்டறிந்து இவரை நோக்கி, ''உனக்குச் சந்நியாசம் வேண் டாம்; உபாசனை பண்ணிக்கொண்டிரு; அதுவே போதுமானது'' என்று சொல் லவே, கி.வா.ஜ. ஒருவாறு மனத்தைத் தேற்றிக்கொண்டு ஊர் திரும்பினர்.

அதன் பிறகு இவருடைய உள்ளம் கடவுள் தியானத்திலும் ஜபங்களிலும் நிலைக்கலாயிற்று. அக்காலத்தில் காயத் திரி ஜபத்தை நாளொன்றுக்குப் பதி ஞயிரம் வீதம் செய்து முடித்தார். காந்தமலையில் தரிசனமும் அங்கு நெடு நேரத் தியானமும் முருகன் மீது பாடல் களின் ஆக்கமும் அதிகமாயின.

இவ்வாறு இருந்த காலத்தில் சேந்த மங்கலத்துக் கிச்சு உடையார் என்பவர் காந்தமலைக்கு வந்து, அங்கு அறநெறியில் திளைத்திருந்த இளைஞரான கி.வா.ஜ.வின் முகப்பொலிவைக் கண்டு உள்ளங் களித்து இவரைத் தம்முடன் சேந்தமங்கலம் வந்து தங்கியிருக்கும்படி அழைக்க, அது தம் மானசிக குருவின் இடமாதலால் இவர் மிகுந்த மகிழ்ச்சியுடன் அந்த அழைப்பை ஏற்றுக்

கொண்டார். அங்கு உடையார் அமைத்திருந்த தெய்விக ஆசிரமத்தில் தங்கியிருந்து, அங்கு நடந்து வந்த பள்ளிக்கூடத்துப் பிள்ளைகளுக்கு இவர் ஆங்கிலம் கற்பித்து வந்தார். அந்த ஊர் ஜமீன்தார் ஐராவத உடையாருடைய நட்பால் இவருக்கு அவ்வூர்ப் பஞ்சாயத்து அலுவலகத்தில் ரூபாய் இருபது சம்பளத்தில் குமாஸ்தா வேலை கிடைத்தது. அப்பொழுது அந்த ஊரில் கிறிஸ்தவப் பாதிரியாரான ஆங்கிலேயர் பூஜ்யர் த்ரோவர் என்பவர் தமக்குத் திருக்குறள் பாடம் சொல்லச் சிறந்த தமிழ் அறிஞரை நாடியிருந்தார். அதற்கு ஏற்றவர் நம் கி.வா.ஜ.வே என்று ஊரிலுள்ளார் இவர் பெயரைச் சிபாரிசு செய்ய, துரை இவரையே தம் ஆசிரியராக ஏற்றுக் கொண்டார்.

இவ்வாறு சேந்தமங்கல வாசம் இவருக்குப் பல வழிகளிலும் பயன்பட்டது. ஸ்வாமிகளையும் இவர் அடிக்கடி தரிசனம் செய்து வந்து அவர் அநுக்கிரகத்துக்குப் பாத்திரரானார். திருப்பாதிரிப்புலியூர் ஸ்ரீ ஞானியார் முதலிய பெரியோர்கள் அவ்வூருக்கு அடிக்கடி வந்து சொற்பொழிவுகளை ஆற்றும்போது நம் கி.வா.ஜ.வும் அவர்களுடன் கூடிப் பழகித் தாமும் சொற்பொழிவுகள் ஆற்றி வந்தார். இவ்வளவு சிறப்புக்கள் பெற்றாலும், உண்மையான தமிழ் இலக்கண இலக்கிய அறிவு தமக்கு உண்டாக வேண்டும் என்ற தாகம் ஒருபால் தோன்றி வளரலாயிற்று. அதை அறிந்த சேந்தமங்கலம் ஸ்வாமிகளின் சீடர்களுள் ஒருவரும், வடமொழி தென்மொழி இரண்டிலும் வல்லுநருமான நிஜானந்த ஸ்வாமிகள் என்பவர், அப்பொழுது சிதம்பரம் மீனாட்சி தமிழ்க் கலாசாலைத் தலைமைப் பதவியைத் தாங்கியிருந்த மகாமகோபாத்தியாய ஐயரவர்களே அதற்குத் தக்கவர் என்பதை எடுத்துச் சொல்ல, வருங்காலத்தில் தமிழுலகத்தில் மிக உயர்ந்த நிலையை ஏற்கப்போகும் நம் இளைஞரின் உள்ளத்தில் அவ்வுபதேசம் வேரூன்றியது. அப் பெரியாரை எப்போது காண்போம் என்று இவர் ஏங்கி நின்றார்.

இவர் விருப்பம் நிறைவேறக் காலமும் நெருங்கியது. 1926-ஆம் ஆண்டில் வடலூரில் நடந்த தைப் பூசத் திருவிழாவுக்குச் சேந்தமங்கலத்திலிருந்து சில பிரமுகர்கள் செல்வதை அறிந்த நம் கி.வா.ஜ., அவர்களுடன் தாமும் புறப்பட்டார். அவர்களுள் இவருக்கு வேண்டியவரான கிச்சு உடையாரும் ஒருவர். அவருக்குச் சிதம்பரத்தில் ஸ்ரீ ஐயரவர்களிடம் தமிழ் பயிலும் நடேச முதலியார், ஆறுமுக முதலியார் என்ற இருவரைத் தெரியும். அவர்கள் வழியாக ஸ்ரீ ஐயரவர்களிடம் கி.வா.ஜ.வை அறிமுகப்படுத்தக் கூடும் என்று உடையார் கருதினார். அவர்கள் வடலூர்த் தரிசனத்தை முடித்துக்கொண்டு கூடலூர் சென்று ஸ்ரீலஸ்ரீ ஞானியார் அவர்களையும் தரிசித்துக்கொண்டு சிதம்பரம் சென்றார்கள்.

அங்கே ஸ்ரீ ஐயரவர்களின் ஜாகைக்குச் சென்று, அவர்கள் தம் இல்லத்திலிருந்து வெளியே வருவதை எதிர்நோக்கி அவ்வீட்டுத் திண்ணையில் அமர்ந்திருந்தனர். அப்பொழுது இவர்கள் கி.வா.ஜ.வுடன் ஐந்து பேர்கள் இருந்தனர். இவர்கள் திண்ணையில் இருந்த போது அவ் வீட்டினுள்ளிருந்து ஒரு பெரியவர் வெளியே வர, அனைவரும் எழுந்து மரியாதையுடன் நின்றனர். வந்தவர் வியந்து, தாம் ஸ்ரீ ஐயர் அல்ல என்றும், தம் பெயர் நாகப்ப செட்டியார் என்றும் கூறி அகன்றார். பிறகு ஸ்ரீ ஐயரவர்களே வெளியே வர, அனைவரும் அவரை வணங்கி அவர் உத்தரவுடன் உட்கார்ந்தனர். கி.வா.ஜ.வைப்பற்றி ஸ்ரீ ஐயரவர்களிடம் கிச்சு உடையார் கூறி, அவரைச் சீடராக ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொண்டார்.

ஸ்ரீ ஐயரவர்கள் அனைவரையும் மிக்க அன்புடன் விசாரித்துத் தம் முன் நிற்கும் வாலிபரின் முகத்தைக் கூர்ந்து கவனித்தபின் அவரை நோக்கி, ''நீர் படித்த பாடல்களுள் ஏதேனும் ஒன்றைச் சொல்லும்'' என்று சொல்ல, இவர் மிகுந்த பயபக்தியுடன் தாம் நன்றாகக் கற்று வைத்திருந்த பின்வரும் கம்பராமாயணப் பாடலைக் கூறினார்—

> ஆடவர் நகையுற ஆண்மை மாசுறத்
> தாடகை யெனும்பெயர்த்
> தைய லாள்படக்
> கோடிய வரிசிலை இராமன் கோமுடி
> சூடுவன் நாளைவாழ் விதுவெனச்
> சொல்லினாள்.

இது அயோத்தியா காண்டத்தில், கைகேயியின் உள்ளத்தைத் திரிக்கக் கூனி கூறிய பாடல்களுள் ஒன்று. இதை நிறுத்திப் பொருள் விளங்குமாறு இளைஞர் கூற, ஐயரவர்கள் அதனைக் கேட்டு மகிழ்ந்து தலையை அசைத்து, ''இதற்குப் பொருள் கூற முடியுமா?'' என்று கேட்க, உலகம் வழக்கமாகக் கூறி வருகிற முறையில் பொருள் கூறி, ''இதற்கு இரட்டுற மொழிதலாகக் கூனி தன்னை அறியாமலே இராமபிரானைப் புகழ்ந்ததாகவும் பொருள் கூறலாம். ஆஞ்ஞையானால் சொல்லுகிறேன்'' என்று விண்ணப்பித்தார். ஸ்ரீ ஐயரவர்கள் மிகுந்த மகிழ்ச்சியுடன், ''சொல்லலாமே'' என்று

கூற, கி.வா.ஜ. ''ஆடவர் (என்பதை ஆள் தவர் என்று பிரித்து) தவத்தை ஆள்கின்ற முனிவர்கள்; நகை உற-மகிழ்ச்சி கொள்ள, ஆண்மை மாசு உற அ தாடகை பட - ஆண்மக்களின் வீரம் குறைபடுவதற்குக் காரணமான (வலிமை மிக்க) உலகறிந்த தாடகை அழியுமாறு என்று கொண்டால் இராமபிரானை அவள் தன்னை அறியாமலே புகழ்ந்தாள் என்று கொள்ளலாம்; இன்னும் சில கோடிய இராமன் என்பதற்கு, 'வில் லை வளைத்த இராமன்' என்றும் கூற லாம்'' என்று சொன்னார்.

இதைக் கேட்ட ஐயரவர்கள் மிகவும் மகிழ்ந்து, அங்கிருந்தவர்களிடம், ''கம்ப சூத்திரம் என்பது இதுவே. கூனி கைகேயியினிடம் இராமனைப் 'பெண் கொலை புரிந்த பேடி' என்று இழித் துச் சொன்ன சொற்களையே கொண்டு எவ்வளவு கௌரவமான பொருளைக் காட்டிவிட்டார் பார்த்தீர்களா? மகா ராஜாக்கள் வாழ்ந்த காலத்தில் இப்படிப் பொருள் சொல்பவர்களைக் கண்டால் அக்ஷரலக்ஷமன்றோ அவர்களுக்கு அளிப் பார்கள்?'' என்று பாராட்டிவிட்டு, கி.வா.ஜ.வை நோக்கி, ''நீர் இங்கே கலாசாலையில் சேர்ந்து படிக்க விரும்புகிறீரா? சில மாதங்களில் நான் இவ் வேலையிலிருந்து விலகிச் சென் னைக்கே செல்ல விரும்புகிறேன்; அங்கு வந்து என்னுடன் இருந்து படிக்கிறீரா?'' என்று கேட்டார்.

ஜகந்நாதையர் இவ்வாறு ஸ்ரீ ஐயரவர் களின் நன்மதிப்புக்குத் தாம் உரியவ ரானமையை எண்ணி மிகவும் மகிழ்ந்து, ''சேந்தமங்கலத்தில் ஒரு துரைக்குத் தமிழ்ப் பாடம் சொல்லி வருகிறேன். அவருக்குப் பரீட்சை சில மாதங்களில் நடந்தேறும். அது முடிந்தவுடன் சென் னைக்கே வந்து சேருகிறேன்'' என்று கூறினார்.

அன்று ஸ்ரீ ஐயரவர்கள் மூன்று மணி நேரம் வந்தவர்களுடன் பேசினார். தாம் மகாவித்துவான் பிள்ளையவர்களி டம் பெற்ற அநுபவங்கள் பலவற்றை அப்பொழுது கூறினார். சில மாண வர்கள் சில மாதங்கள் படித்துத் தாம் தமிழின் கரையைக் கண்டுவிட்டதாகக் கருதிப் பிரிந்து போவதுண்டு என்றும், ஜகந்நாதையர் அந்தக் கோஷ்டி யினரைச் சாரமாட்டார் என்று தாம் நம்புவதாகவும் கூறினார். பிறகு மிகுந்த மகிழ்ச்சியுடன் அனைவரும் அவர்களிடம் விடைபெற்றுப் பிரிந்தனர்.

ஸ்ரீ ஐயரவர்களை முதல்முதல் பார்த்த கி.வா.ஜ.வுக்கு, 'இவர் ஒரு நாயனாரோ?' என்று தோன்றிற்றும். ஐயரவர்களும் வரப் போகும் சீடரின் முகப்பொலிவை யும், நீறு விளங்கும் நெற்றியையும், ருத்திராக்ஷ கண்டி விளங்கும் மார்பை யும், அவர் பணிவுடன் பேசிய பான்மை யையும், கம்பராமாயணப் பாடலுக்கு அவர் கூறிய நயமான உரையையும் கண்டு, 'இவர் நம் பெயரை உலகில் நிலை நிறுத்தத் தக்கவர்' என்று கருதியிருக்கக் கூடும்.

இவ்வாறு ஐயரவர்களைச் சந்தித்துப் பிரிந்தபின் கி.வா.ஜ. தம் நண்பர் களுடன் சேந்தமங்கலம் திரும்பினார். தம்மை அன்புடன் ஏற்றுக்கொண்ட தற்காக நன்றி கூறி ஆசிரியப்பா ஒன் றெழுதித் தம் வருங்கால ஆசிரியருக்கு அனுப்பினார். பிறகு துரைக்குப் பாடம் சொல்லுவதில் முனைந்து, அவர் பரீட் சையில் சிறந்த முறையில் தேர்ச்சி பெற ஆக வேண்டிய முயற்சிகளைச் செய்து முடித்தார். சென்னையில் தங்குவதற்குத் தமக்கு வேண்டிய பொருளைத் தேடுவதில் முயன்று, அதனையும் ஒருவாறு நிறை வேற்றிக் கொண்டார். இவையெல்லாம் நிகழ்ந்தபின், 1927 டிசம்பரில் சென் னைக்கு வந்து ஸ்ரீ ஐயரவர்களைக் கண்டு அவர்களால் ஏற்றுக்கொள்ளப்பெற்றார். அப்பொழுது இவருக்குப் பிராயம் இருபது.

ஸ்ரீ ஐயரவர்கள் சிதம்பரம் கல்லூரி வேலையை விட்டுச் சென்னைக்குத் திரும்பி விட்டார்கள். அப்பொழுது கையில் பதிப்பு வேலை எதனையும் எடுத்துக் கொள்ளவில்லை. கி.வா.ஜ.வையன்றி வேறு மாணவரும் அப்பொழுது அவர்களிடம் படிக்கவில்லை. ஆகவே கி.வா.ஜ.வின் கல்வியிலே பெருங் கவனம் செலுத்து வதற்கு ஸ்ரீ ஐயரவர்களுக்கு நேரம் இருந்தது. மாணவரும் 'பருகுவன் அன்ன ஆர்வத்தனாகி, செவி வாயாக நெஞ்சு களனாகக் கேட்டவை கேட்டவை விடாதுளத் தமைக்கும் ஆற்றல் உடைய வராக' அமைந்ததனால் தினந்தோறும் நெடுநேரம் பாடம் நடக்கும். நாள் ஒன்றுக்கு முந்நூறு நானூறு செய்யுட்கள் வரை ஸ்ரீ ஐயரவர்கள் பாடம் சொல்லு வார். முதலில் திருவிளையாடற் புராணத் தையும் பிறகு பலவகைப் பிரபந்தங்களை யும் படித்துச் சொன்னார்கள். அந்தப் பிர பந்தங்களிற் பல, அச்சாகாதவை. நன் னூலை முறையாகப் பாடம் சொன்னார். மாணவர் தமக்கு வாய்த்த பேராசிரியரின் ஆழ்ந்த கல்வியைக் கண்டு வியந்து தமக்கு இருந்த கவியியற்றும் ஆற்றலை அவர் முன்னே தோற்றுவிக்காது ஒதுக்கி வைத்திருந்தார். வெளியிலே பிரசங்கம் செய்வதையும் நிறுத்திக் கொண்டார். சென்னைக்கு வருவதற்கு முன்னே பல புலவர்களையும் கவிஞர்களையும் சொற் பொழிவாளர்களையும் கண்டும் அவர்க

ளுடன் பழகியும் அவர்களை வியந்து வந்த இவருக்கு, ஸ்ரீ ஐயரவர்களின் கல்வி மேம்பாட்டையும், அவர் நூல்களை எளிதில் போதிக்கும் திறமையையும் கண்டு, 'இங்கு நான் காண்பது மேரு; முன்பு கண்டன வெல்லாம் சிறிய குன்றுகளும் மேடுகளுமேயாம்' என்ற எண்ணம் உண்டாயிற்று.

ஒரு நாள் ஸ்ரீ ஐயரவர்கள் தம் சீடரை நோக்கி, ''உனக்குச் சாகித்தியம் செய்ய வருமா?'' என்று வினவினர். இவர், 'சாகித்தியம் என்பது சங்கீதத்துக்கு உரிய கீர்த்தனம் முதலியன ஆகும்' என்று எண்ணி, ''வராது'' என்றார். ''செய்யுள் இயற்ற வருமா என்று கேட்கிறேன்'' என்று மேலும் அவர்கள் விளக்கிக் கூற, இவர், ''ஒருவாறு முயலலாம்'' என்றார். அதன்மீது அவர்கள், ''தரனை நினைக நெஞ்சம்'' என்ற ஈற்றடியைக் கொடுத்து, ''இதனை ஒரு வெண்பாவாக முடிக்க'' என்று கூறி, ''இதற்கு இப்போது அவசரம் இல்லை; நன்றாக ஆராய்ந்து இயற்றி நாளைக்குக் கூறுக'' என்று சொல்லித் தம் வேலைகளைப் பார்த்துக் கொண்டிருந்தார். மிக எளிதில் சந்தப் பாடல்களையும் இயற்ற வல்ல கி.வா.ஜ. அவர்கள், மிக நுணுகிய நேரத்தில் வெண்பாவை முடித்து, ''சுந்தரனை நினைக நெஞ்சம்'' என்று முடித்து அதனைக் கூறினர். அதைக் கேட்டு ஸ்ரீ ஐயரவர்கள் மிகுந்த மகிழ்ச்சியடைந்து, ''உனக்குக் கலைமகள் கடாட்சம் பூர்ணமாக அமைந்திருக்கிறது. நிரம்பப் பாடி வருக'' என்று ஆசீர்வதித்தார்கள்.

இக்காலத்தில் ஸ்ரீ ஐயரவர்களிடத்தில் சிதம்பரம் தமிழ்க் கலாசாலையில் மாணவர்களாக இருந்த வித்துவான் வி.மு. சுப்பிரமணிய ஐயரும், வித்துவான் கோதண்டராமையரும் சென்னைக்கு வந்தனர். அவர்களும் ஐயரவர்களுக்குத் தொண்டு புரியவும் பாடம் கேட்கவும் அவர்களின் இல்லத்துக்கு வருவாராயினர். இவ்வாறு ஓராண்டு நிரம்பியது. கி.வா.ஜ. தமிழ்க் கல்வியின் ஆழத்தை ஒருவாறு கண்டுகொண்டார். மேலும் மேலும் ஐயரவர்களிடம் நூல்களைக் கற்றுத் தெளிய வேண்டும் என்ற ஆவல் இவரிடம் நிலைத்தது. இவ்வாறு இருந்தபோது இவருக்கு முடக்கு வாதம் என்ற நோய் வந்ததனால் மிகவும் தொல்லைப்பட்டார். இக்காலத்தில் ஐயரவர்கள் இவருக்குச் செய்த உதவிகளை இவர் எப்பொழுதும் எண்ணி வருகிறார். பெற்ற அன்னையை விட அதிகப் பரிவுடன் ஆசிரியர் தமக்குக் கஞ்சி முதலியன தம் கைகளாலேயே அருளிக் காத்தமை இவர் என்றும் மறவாதது என்பர். அவ்வாறு இருந்தும் நோய் குணமாகாமற் போகவே, இவர் ஆசிரியரிடம் விடை பெற்றுத் தம் ஊர் சென்றார். உடல்நலம் முழுமையும் நன்றாக மாதங்கள் எட்டாயின.

உடம்பு சௌக்கியம் பெற்றவுடன் கி. வா. ஜ. அவர்கள் சென்னைக்குத் திரும்பி வந்து தம் ஆசிரியரை அடைந்தார். அப்பொழுது ஸ்ரீ ஐயரவர்கள் கவிச் சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தர் இயற்றிய 'தக்கயாகப் பரணி' என்னும் நூலையும் உரையையும் பல பிரதிகளைக் கொண்டு பரிசோதித்து, தாம் நூதனமாக எழுதிய பலவகைக் குறிப்புகளுடன் தயாரித்துக்கொண்டிருந்தார். ஸ்ரீ ஐயரவர்களின் தம்பி ஸ்ரீ வே. சுந்தரேச ஐயரும், ஐயரவர்களின் மாணவர்களும் அப்பொழுது சென்னையில் கல்விச்சாலைகளில் தமிழாசிரியர்களாக இருந்து வந்தவர்களுமான வித்துவான் சு. கோதண்டராம ஐயரும் வித்துவான் வி.மு. சுப்பிரமணிய ஐயரும் ஐயரவர்களின் பதிப்புத் தொண்டில் அவர்களுக்கு உதவி வந்தனர். கி.வா.ஜ.வும் இவர்களுடன் சேர்ந்தார்.

ஸ்ரீ ஐயரவர்களின் பதிப்பு முறை தனித் தன்மையுற்றது. ஒரு நூல் வெளிவர அவர்கள் அதற்குமுன் பல ஆண்டுகள் அந்தப் பணியில் ஈடுபட்டு உழைப்பார்கள். சரியான பாடம் கிடைக்கப் பல ஏட்டுச் சுவடிகளை ஒப்பிடுவார்கள். ஒரு சுவடியினால் விளங்காதவற்றைப் பிற சுவடிகளால் விளக்கம் செய்துகொள்வார்கள். மூலத்திலும் உரையிலும் பயிலும் சொற்களுக்கும் கருத்துக்களுக்கும் மேற்கோள்கள், ஒப்புமைகள் முதலியவற்றைச் சேகரிப்பது, அகராதிகளைத் தொகுப்பது முதலிய பலவற்றைச் சித்தம் செய்துகொள்வார்கள். பிறகுதான் பதிப்பு வேலை தொடங்கும். அச்சாகும் காலத்தில் புரூப்களைத் திருத்தல் மிகவும் அரிய சோதனை. இவற்றிலெல்லாம் கி.வா.ஜ. முதல்முதலாக இறங்கினர். இவருக்கு இயற்கையாக அமைந்த தமிழறிவும், எடுத்த காரியத்தைப் பிழை சிறிதும் நேராமற் பார்த்துக்கொண்டு முடிக்கும் திறமையும், விடா முயற்சியும் இவர் புகுந்த இந்த நூதனத் துறைக்கு மிகவும் உதவின. அக்காலத்தில் தேவி விஷயமாக நாட்டில் வெளிவந்திருந்த ஆங்கில நூல்களை இவர் மிகுந்த ஆர்வத்துடன் படித்து வந்தமையால் தக்கயாகப் பரணியில் தேவி பூஜை சம்பந்தமான பல கருத்துக்களைப் புரிந்துகொள்வது இவருக்கு எளிதாயிற்று. தக்கயாகப் பரணிப் பதிப்பில் நூலும் உரையும் 253 பக்கங்களில் அடங்கியிருக்க, முகவுரைப் பகுதிகள், விசேடக்

குறிப்புக்கள், அகராதி முதலியன 314 பக்கங்கள் கொண்டுள்ளன. இவற்றைச் சேகரிப்பதில் சிறந்த பங்கு கொண்ட ஜகந்நாதையரின் பெயரைப் பிற உதவி யாளரின் பெயர்களோடு சேர்த்துக் கூறியதுடன், ஸ்ரீ ஐயரவர்கள், ''இவர் களுள் ஜகந்நாதையர் எடுத்துக் கொண்ட உழைப்பு, பாராட்டத்தக்கது'' என்று எழுதியுள்ளார்கள். இந் நூல் வெளிவந்தது 20-1-1930-இல்.

இதன் பிறகு, ஸ்ரீ ஐயரவர்கள் எழுதி வெளியிட்ட நூற்பதிப்பு ஒவ்வொன் றின் தயாரிப்பிலும் கி.வா.ஜ.வுக்குச் சிறந்த பங்கு உண்டு. ஸ்ரீ ஐயரவர்கள் இவருடைய திறமையை மிகவும் மெச்சி, இவருடைய உதவி தமக்குக் கிடைத் ததைத் தம் பதிப்புக்களில் பாராட்டி எழுதியுள்ளார். ஸ்ரீ மீனுட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் சரித்திரம், என் சரித் திரம் முதலிய ஐயரவர்களின் சிறந்த வசன நூல்களை எழுதும்போது ஜகந்நாதைய ரவர்கள் ஐயரவர்களுக்குப் பெரிதும் உதவினுர்.

ஐயரவர்கள் வெளியூர்களுக்குப் பிர யாணம் செய்யும் காலத்திலும், தம் இல் லத்துக்கு வந்து தம் முன் பழகும் பிரமுகர்கள், அறிஞர்கள் முதலானவர் களின் முன்னிலையிலும் இவர் நிழல்போல அவர்கள் அருகிலேயே இருந்துவந்ததனுல் இவருக்குப் பல சிறந்த விஷயங்கள் தெரிந் தன. ஜகந்நாதையர் 1933-இல் சென்னைப் பல்கலைக் கழக வித்துவான் பரீட்சை யில் முதல் வகுப்பில் முதன்மையாகத் தேர்ச்சி பெற்றுப் பல்கலைக் கழகம் அளித்த ரூபாய் ஆயிரம் பரிசு பெற்றுர். இந்த நிகழ்ச்சி இவரது கல்வித் திறமை யைத் தமிழ் நாடெங்கும் பரவச் செய் தது.

1932-இல், மயிலையில், மதராஸ் லா ஜர்னல் பிரஸ் உரிமையாளர் 'கலை மகள்' என்ற சிறந்த இலக்கியத் திங்கள் வெளியீட்டைத் தொடங்கினுர். அதன் நிர்வாகிகளும் பத்திரிகை ஆசிரியக் குழு வினரும் ஸ்ரீ ஐயரவர்களிடத்தில் பெரு மதிப்புக் கொண்டவர்கள். இதன் முதல் வெளியீட்டின் முதல் கட்டுரை 'கலைமகள்' என்ற தலைப்பில் ஸ்ரீ ஐயரவர்கள் எழுதிய தாகும். அவ் வெளியீட்டின் முகப்பில், கலைமகள் வாழ்த்தாக உள்ள ஆறு விருத் தங்கள் ஸ்ரீ கி.வா.ஜ. இயற்றியவை. இவ் வாறு தொடங்கிய பத்திரிகைக்கு உதவி ஆசிரியராக அமையும் பேறு இவருக்கே கிடைத்தது. அன்றுமுதல் இவர் 'கலை மகளின்' தொடர்பு பெற்று இன்று அதன் தனிப்பெரும் ஆசிரியராக உலகம் போற்ற விளங்குகிருர்.

1927-ஆம் ஆண்டிலே தொடங்கிய ஸ்ரீ ஐயரவர்களுடைய தொடர்பு, 1932-இல் இவர் கலைமகள் காரியாலயத்தை அடைந்த பின்னும் மாறவில்லை. இன்னும் அதிகமே ஆயிற்று. ஸ்ரீ ஐயரவர்கள் பதிப்பித்த பல சிறிய பிரபந்தங்களும் அவர்கள் எழுதிய பல உரைநடைக் கட்டுரைகளும் கலைமகளிலும் பிற பத்திரிகைகளிலும் வெளிவந்தன. அவற் றுடன் ஸ்ரீ ஐயரவர்களுடைய ஆராய்ச்சி யும் பதிப்புப் பணிகளும் அவர்களு டைய இல்லத்தில் இடையருது நடந்து வந்தன. இவற்றிலெல்லாம் கி.வா.ஜ. முன்னிலும் பன்மடங்கு அதிகமாகத் தம் பங்கினை ஆற்றி வந்தார்.

1942-இல் திருக்கழுக்குன்றத்தில், ஸ்ரீ ஐயரவர்கள் இறைவனின் திருவடிநிழலை எய்திய அதே காலத்தில், இவருடைய பிதாவும் அந்நிலையை அடைந்தார்கள். அதுவரையில் ஐயரவர்களுடன் இணை பிரியாமல் இருந்து தமிழ்த் தொண்டாற்றி வந்த இவர் அப்பொழுது அடைந்த துயருக்கு எல்லையே இல்லை: ஆனுல் ஐயர வர்களின் புகழுடம்புக்கு இவர் செய்து வரும் தொண்டுக்கு எல்லை ஒருபோதும் ஏற்படாது.

1929-இல் மதுரை மாநகரில், மகா மகோபாத்தியாய ஐயரவர்கள் தலைமை யில் 'ஜைனரும் சம்பந்தரும்' என்ற சொற் பொழிவை நிகழ்த்துமுன் இவர் தம் ஆசி ரியர் துதியாகப் பின்வரும் வெண்பாவைப் பாடினுர். இன்றும் தாம் நிகழ்த்தி வரும் எந்தச் சொற்பொழிவிலும் இவர் இதனை முதல்முதலாகக் கூறி, ஆசிரிய வந்தனம் செலுத்தியே தொடங்குகிருர் என்பதைத் தமிழகம் நன்கு அறியும். இந்த வெண்பா இது—

நவையேறு நெஞ்சினேன்
　　நற்றமிழைக் கற்றே
அவையேற வைத்தருளும்
　　அண்ணல்—சுவையேறு
செந்தமிழ்ப்பன் னூல்விளக்கும்
　　சீர்ச்சாமி நாதகுரு
அந்தணர்தாள் சென்னிக் கணி.

இவ்வாறு ஆசிரியரும் சீடரும் அமை வது மிகவும் அரிது. இந்த அமைப்புத் தமிழகத்தின் நல்லூழால் இவ்விரு பெரு மகனுரிடையே நேர்ந்தது. இதனுல் விளை யும் பயனை உலகம் என்றென்றும் நுகர்ந்து இன்புறுவதாகுக. ★



# என் ஆசிரியர்

—கு. நா. சிவராமகிருஷ்ணன்

நெடு நாளைக் கனவு இன்று நிறைவேறுகிறது என்று குதூகலிக்கும் உள்ளத்துடன் போட்டியிட்டுக்கொண்டு கால்கள் விரைந்தன என் நண்பர், சென்னை திருவேட்டீசுவரன் பேட்டையிலுள்ள தியாகராஜ விலாசத்துக்கு என்னை அழைத்துச் சென்றார். பகல் உணவு அருந்திய டாக்டர் ஐயரவர்கள் அப்போது ஓய்வெடுத்துக்கொண் டிருந்தார்கள். கட்டிலிலிருந்து எழுந்து ஒரு நாற்காலியில் அமர்ந்தார். அவர் முன்னே சென்று சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்து ஒதுங்கி நின்றேன். அருகில் இருந்த நாற்காலியில் உட்காரச் சொன்னார். அவர் திருவடிகளின் கீழே தரையில் அமர்ந்தேன்.

எதிரே ஒரு புறம் பழஞ்சுவடிகள் அடுக்கிய பலகணி; புத்தக அடுக்குகள் மற்றொரு புறம்; இவற்றின் நடுவில் வீற்றிருந்த ஐயரவர்களின் தோற்றம் — எல்லாம் சேர்ந்து, தமிழ்த் தெய்வத்தின் சந்நிதியில் இருப்பது போன்ற உணர்ச்சியை அளித்தன. சிறிது நேரம் ஏதேதோ வினவினர். கடைசியில், ''இங்கே நல்ல நல்ல வித்துவான்கள் பலர் வருவார்கள். மோகனூர் வித்துவான் ஜகந்நாத ஐயர் போன்றவர்களை அறிமுகம் செய்துகொள்ளலாம். அதனால் நல்ல பயன் ஏற்படும். அடிக்கடி வந்துகொண் டிருங்கள்'' என்று கூறினர். அன்று ஐயரவர்கள் கூறியது தமிழ்த் தெய்வத்தின் அருள் வாக்குப் போல் பட்டது.

டாக்டர் மு. வரதராசனர், துரையரங்கனர், அ. ச. ஞானசம்பந்தன் முதலிய ஆசிரியப் பெருமக்கள், கல்லூரியில் படித்தபோது என் இதயத்தில் தமிழார்வத்தை விதைத்தனர். அது தழைத்து, அலர்ந்து, பழுக்க உதவிய ஆசிரியர், திரு கி.வா.ஜ. அவர்கள் ஆவர்.

1944-ஆம் ஆண்டில், சென்னை, கம்பர் கழகத்தின் சார்பில் கல்லூரி மாணவர்களுக்குப் பேச்சுப் போட்டி நடத்தினர். அதில் 'அனுமன் கண்ட இலங்கை' என்பதுபற்றிப் பேசிய எனக்கு முதற் பரிசு கிடைத்தது. கூட்டம் முடிந்ததும், பாராட்டி வாழ்த்துக் கூறிய பெரியவர்களில் என் இதயத்தைக் கவர்ந்தவர் கி.வா.ஜ. அவரை நேரில் அதற்கு முன் பார்த்ததில்லை. 'கலைமகள்' பத்திரிகைக்கு ஆசிரியர், மூன்று ஆண்டுகளுக்கு முன் டாக்டர் ஐயரவர்கள் சிறப்பாக எடுத்துக் கூறிய திருப்பெயர் எல்லாம் தெரியும். அவர்தாம் இவர் என்பதை அப்போதுதான் தெரிந்து கொண்டேன். ''வீட்டுக்கு வாருங்கள்'' என்றார். இன்னது என்று சொல்ல முடியாத உணர்ச்சி ஒன்று, அன்று இவரைக் கண்டது முதல் உள்ளத்தில் எழுந்தது.

கந்தசாமி கோவிலில் 'கந்தர் அநுபூதி' சொற்பொழிவு நடத்தி வந்தார். கல்லூரி மாணவர்கள் சிலருடன் அங்கே செல்வேன். பேச்சினிடையில், ஆங்காங்கே சங்க நூல்களிலிருந்து அருமையான பகுதிகளை மேற்கோள் காட்டுவார். புதிய பாணியில் விளக்கம் தருவார். பாயசத்தில் இருக்கும் முந்திரிப் பருப்பையும் திராட்சையையும் குழந்தை பொறுக்கிக் கொள்வதுபோல், இவர் ஆங்காங்கே கூறும் இலக்கிய மேற்கோள்களை மட்டும் எடுத்து எழுதிக்கொண்டு வந்தேன். 'கந்தர் அநுபூதி' அருட் பிரவாகத்தில் ஈடுபடும் உள்ளம் எனக்கு அப்போது இல்லை.

கல்லூரிப் படிப்பு முடிந்தது. ஆசிரியர் அவர்களுடன் நெருங்கிப் பழகும் வாய்ப்புகளும் பல்கின. சிந்தாதிரிப்பேட்டை வேதாந்த சங்கத்தில் கந்தர் அநுபூதிச் சொற்பொழிவை இவர் நிகழ்த்தி வந்தார். இலக்கியத் தொடர்புள்ள சொற்பொழிவுகளுக்கு மட்டுமே சென்று வருவேன். அன்று இவருடன் வெளியூர் நண்பர்கள் சிலர், 'கந்தர் அநுபூதி'ச் சொற்பொழிவுக்கு இவருடன் வீட்டிலிருந்து புறப்பட்டார்கள். அவர்களுள் ஒருவர், ''ஏன், நீங்கள் வரவில்லையா?'' என்று கேட்டார். அதற்கு ஆசிரியர் குறுக்கிட்டு, ''அவரெல்லாம் கல்லூரியில் படித்தவர், பட்டம் பெற்றவர். இதற்கெல்லாம் வருவாரா?'' என்றார். ''என்ன அப்

படிச் சொல்கிறீர்கள்? நானும் வருகி றேன்'' என்று புறப்பட்டேன். அன்று,

''கிரிவாய் விடுவிக் ரமவேல்
இறையோன்
பரிவார மெனும் பதமே வலேயே
புரிவாய் மனனே பொறையாம்
அறிவால்
அரிவாய் அடியோடு மகந்
தையையே''

என்ற பாடலுக்கு விரிவுரை நிகழ்த்தினர். பேச்சின் இடையில், ''கந்தரநுபூதியை இளம் மாணவர்கள் பயில வேண்டும். என் நண்பர் ஒருவர் இருக்கிறர். கல் லூரியில் படித்துப் பட்டம் பெற்றவர். மாகாணத்தில் முதன்மையாகத் தேறிய வர்'' என்று அடுக்கிக்கொண்டே போனுர். யாரையோ பற்றிச் சொல்கிறர் என்று கேட்டுக்கொண் டிருந்தேன். திடீரென்று, ''அவர் இன்று இதோ வந்திருக்கிறர். சிறிது நேரம் பேசுவார்'' என்று கூறிவிட் டார். கூட்டத்தினர் பார்வை என்மேல் விழுந்தது. வேறு வழி இல்லாமல் மேடை யருகில் சென்றேன். ஏற்கனவே இவரு டைய பல சொற்பொழிவுகளில் உள்ள குறிப்புக்களை வைத்துக்கொண்டு, ''பரி வாரம் எனும் பதம் மேவுதல்'' என்ப தற்கு விளக்கம் கூறி, ''அப்படி மேவிய வர் சொல் செயலெலாம் அருள்மய மாய் விளங்கும். அவன் சந்நிதியில் நின்று, 'நெடும் பெரும் சிமயத்து நீலப் பைஞ்சுனை ஐவருள் ஒருவன் அங்கை ஏற்ப அறுவர்ப் பயந்த ஆரமர்ச் செல்வ எனத் துதிப்பர்'' என்று திருமுருகாற்றுப் படைப் பகுதியை எடுத்துக் கூறினேன்.

அன்று தொடங்கி, ஆசிரியர் வெளி யூர்களுக்குச் செல்ல நேர்ந்தால், அந்தக் கூட்டத்தில், இவர் சார்பில் பேசும் பணியை அன்பர்கள் எனக்குத் தந்து விடுவார்கள். சமய இலக்கியத்தில் ஈடு பாடில்லாத எனக்கு, இவ் வாய்ப்புகள் பேருதவியாக நின்றன. இவர், மாணவ னின் மனநிலை தெரிந்து, தக்க சமயத்தில் அடுத்த படிக்கு அவனிதயம் வளர்ந்து செல்லத்தக்க முறையினைக் குறிப்பாக உய்த்துணர வைக்கும் ஆற்றல் வாய்ந்த வர் என்பதை, இவை போன்ற நிகழ்ச் சிகள் எனக்கு எடுத்து விளக்கின. 'இதைச் செய்', 'அதைப் படி' என்று சொல்வதை விட, இவர் குறிப்பாக உணர்த்திய படிப் பினைகள் பலப் பல. ஆங்காங்கு நிகழும் இலக்கிய, சமய மகாநாடுகளுக்கு என்னை யும் அழைத்துச் செல்வார்.

ஈரோட்டில் சமரச சன்மார்க்க சங்கத் தில் ஆண்டு விழா. அங்கு மூன்று நாள் தங்கிப் பங்கு கொள்ள வேண்டிய பொறுப்பு நேர்ந்தது. விழாவுக்குச் செல் வதற்கு முன் ஆசிரியரைச் சந்தித்தேன். அன்று இரவு பன்னிரண்டு மணி. வீட் டில் எல்லோரும் உறங்கிவிட்டனர். வள் ளலாரின் பாடல்களை எடுத்துச் சில நல்ல குறிப்புக்களைச் சுட்டிக் காட்டிப் படித் துக்கொண்டே போனுர். 'பிள்ளைப்பெரு விண்ணப்பம்' என்ற தலைப்பிலுள்ள அருட் பாக்களைத் தம்மையும் மறந்து இசையோடு பாடத் தொடங்கினர்—

''வாடிய பயிரைக் கண்டபோ
தெல்லாம்
வாடினேன் பசியினு லிளைத்தே
வீடுதோ றிரந்தும் பசியரு தயர்ந்த
வெற்றரைக் கண்டுளம்
பதைத்தேன்''

என்ற பாடலுக்கு வந்தபோது, இவர் குரல் தழுதழுத்தது. அந்த அமைதியான சூழலில், வள்ளலார் இந்தப் பாடலைப் பாடியபோது ஆண்டவன் சந்நிதியில் எந்த உணர்ச்சியில் நின்ருரோ, அந்தச் சூழ்நிலை இதயத்தில் பாய்ந்தது. வள்ள லார் ஆண்டவன் சந்நிதியில் இந்தப் பாட லைப் பாடிய அன்று நேரில் நின்று கேட் பது போன்ற பரவசம் ஏற்பட்டது. அப் போது அந்த அறை, ஆண்டவன் சந்நிதி யாக மாறியது. இவர்தாம் வள்ளலார். இசையில் குழைந்து வரும் இவர் குரல் வள்ளலாரின் குரலாகத் தோன்றிற்று. அந்த அநுபவம், அருட்பாவை அணுகு வதற்கு ஒரு புதிய நோக்கினை உண்டாக் கியது. வள்ளலாரைப் பற்றிய பேச்சுக் களுக்கு ஆதார சுருதியாக அமைந்த உணர்ச்சியை எனக்கு ஊட்டிய அந்த அநுபவத்தை எப்படி எழுத வல்லேன்?

கல்லூரி ஆசிரியனுகப் பணியாற்றும் வாய்ப்பு ஏற்பட்டபின், இலக்கியத்தில் எனக்கு உண்டாகும் ஐயப்பாடுகளையெல் லாம் ஆசிரியரிடம் கேட்டுத் தெளிவு பெறுவது வழக்கம். 'உள்ளுறை உவமம்', 'இறைச்சி' என்ற இரண்டும் சங்க இலக்கியத்தில் வரும் அகப் பாடல் களில் பல்கி வருவன. தொல்காப்பியர் இதற்கு இலக்கணம் கூறியுள்ளார். பழைய உரையாசிரியர்கள் தம் உரை களில் 'இது உள்ளுறை', 'இது இறைச் சிப் பொருள்' என்று விளக்கம் எழுதி யுள்ளார்கள். இரண்டும் கருப் பொருளை நிலைக்களமாகக் கொண்டு வருபவை. எனி னும், இவை இரண்டுக்கும் உள்ள வேறு பாடு என்ன என்பது எனக்குத் தெளி வாக விளங்கவில்லை. தொல்காப்பியர் தரும் இலக்கணம், உரையாசிரியர்கள் தரும் விளக்கம் இவைகொண்டு தெளிவு பெற என்னுல் இயலவில்லை. பெரும் புலவர்களைச் சந்தித்த போதெல்லாம் தெளிவு பெற இதைப் பற்றிக் கேட்டு

வந்தேன். உதாரணப் பாடல்களைத் தந்து, 'இது உள்ளுறை, இது இறைச்சி' என்று சொல்வார்கள்.

''உள்ளுறை என்று நீங்கள் சொல்லும் பாடலுக்கு இறைச்சிப் பொருள் என்றும் சொல்லலாம் போலிருக்கிறதே. இறைச்சிப் பொருள் என்று சொல்லும் பாடலை உள்ளுறை என்றும் சொல்லலாம் போலிருக்கிறதே!'' என்று கேட்பேன். ''இப்படிச் சொல்வதுதான் மரபு'' என்பார்கள். அந்த அமைதி எனக்கு நிறைவு தரவில்லை.

இதையே ஆசிரியர் கி.வா.ஜ. அவர்களிடம் கேட்டேன், ''மாறன் அலங்காரத்தில் இதற்கு நல்ல விளக்கம் இருக்கிறது. அதைப் படியுங்கள். இன்னொரு நுட்பமான குறிப்பும் உள்ளது. உள்ளுறை உவமத்தில், நிகழ்காலத்தில் நடக்கிற உரிப் பொருள் குறிப்பாக அமையும். இறைச்சிப் பொருளில் எதிர்காலத்தில் வரப்போகிற உரிப் பொருள் குறிப்பாக உணர்த்தப்படும். இந்த வேறுபாடு, பழைய உரையாசிரியர்கள், 'இது உள்ளுறை', 'இது இறைச்சி' என்று குறிப்பிடும் பாடல்களை எடுத்து ஆராய்ந்தால் விளங்கும்'' என்று கூறினர். உள்ளுறை, இறைச்சி இரண்டின் ஒற்றுமை வேற்றுமைகளை ஆசிரியர் தந்த விளக்கம் மிகத் தெளிவாக உணரச் செய்தது.

1964-ஆம் ஆண்டில், கல்கத்தா, பாரதி தமிழ்ச் சங்கத்தார் என்னை அழைத்திருந்தார்கள். ஆசிரியர் அதற்கு முன் கல்கத்தாவில் எழுத்தாளர் சங்க ஆண்டு விழாவுக்குச் செல்வதாக ஏற்பாடு. கல்கத்தாவுக்குப் புறப்படுமுன் ஆசிரியர் வீட்டுக்குச் சென்று தங்கிப் புறப்பட வேண்டும் என்று பணித்திருந்தார். இரண்டு நாள் முன்னதாகவே கல்கத்தாவுக்குச் சென்று ஆசிரியரோடு இருக்க வேண்டும் என்ற ஆர்வத்தோடு சென்னைக்குச் சென்றேன். இவர் கல்கத்தாவுக்குச் சென்றிருப்பார் என்று கருதி, இவர் வீட்டுக்கு ஊருக்குப் புறப்படுமுன் செல்லலாம் என்று இருந்தேன். ஆசிரியர் கல்கத்தா செல்லவில்லை, வீட்டில் இருக்கிறார் என்ற செய்தி தெரிந்து இவர் வீட்டுக்கு விரைந்தேன்.

வீட்டில் உள்ளவர்கள், ''ரெயில் இன்று நேரமாகிவிட்டதா? காலையிலேயே வருவீர்கள் என்று காத்திருந்தார். இதற்குள் நாலைந்து முறை கேட்டுவிட்டார்'' என்றார்கள்.

''இப்போது எங்கிருக்கிறார்?'' என்று கேட்டேன்.

''அவருக்குக் காய்ச்சல். அறையில் படுத்திருக்கிறார்'' என்று கூறினர்கள்.

எப்படியோ என் குரலைக் கேட்டு, ''யார்? சிவராமகிருஷ்ணனா?'' என்று மெல்லிய குரலில் கேட்டார். அப்போது 104 டிகிரி ஜுரம். 'டைபாய்டு' ஜுரமோ என்று மருத்துவர் ஐயப்படுகிறார். அந்த நிலையிலும், ''டாக்டரின் மருந்து எதுவும் சாப்பிடமாட்டேன்'' என்று பிடிவாதமாகச் சொல்லிக்கொண்டிருந்தார். வீட்டிலுள்ளவர்கள் மூலம் இதையெல்லாம் தெரிந்துகொண்டேன். இவர் அதுவரை எந்த மருந்தும் அருந்தியதில்லை என்பது தெரியும். அப்போதுள்ள நிலையைப் பார்த்து, ''உங்களுக்காக இல்லாவிட்டாலும், மற்றவர்களுக்காக நீங்கள் டாக்டர் கொடுக்கும் மருந்தை அருந்த வேண்டும்'' என்று வீட்டாருடன் சேர்ந்து சொன்னேன்.

அதற்கு இவர், ''அவர்களுக்குத்தான் தெரியாதென்றால், நீங்களுமா இப்படிச் சொல்கிறீர்கள்?'' என்றார். அடுத்து, ''ஏதாவது துதிப்பாடல் சொல்லுங்கள்'' என்றார். கந்தர் அலங்காரப் பாடலொன்றைச் சொல்ல ஆரம்பித்தேன். படுத்திருந்த இவர் எழுந்து உட்கார்ந்தார். பக்கத்தில் இருந்த திருநீற்றை எடுத்து அணிந்துகொண்டு, தியானத்தில் ஆழ்ந்தார். இவரையும் அறியாமல் திருப்புகழ், அநுபூதிப் பாடல்கள் சிலவற்றை மெய்ம்மறந்து பாடினர். அந்த அறை முருகன் சந்நிதியாகப் பொலிந்தது. ''வாயாரத் தன்னடியே பாடும் தொண்டர் எனத் தகத்தான்'' என்ற வாக்கு எவ்வளவு உண்மை!

ரெயிலுக்குப் புறப்படும் நேரம் வந்தது. விடைபெற்றுக்கொள்ளும் குறிப்பில் இவரைப் பார்த்தேன். அதற்கு முன் இவர் மெல்ல எழுந்து, எதிரே இருந்த நாற்காலியில் அமர்ந்தார். இவர் மனைவி உள்ளேயிருந்து சாத்துக்குடிப் பழம் ஒன்றை எடுத்து வந்தார். இருவரும் இருக்கும்போது நான் நமஸ்காரம் செய்தேன். பழத்தைக் கையில் கொடுத்து, எழுந்து நின்று, ''வெற்றிக் கொடி நாட்டி வாருங்கள்'' என்று உணர்ச்சியோடு கூறி வழியனுப்பினர். 104 டிகிரி ஜுரம், எழுந்திருக்கக்கூட இயலாத நிலை, நாலைந்து நாட்களாகக் கஞ்சி உணவு—இந்த நிலையிலும் முருகன் நாமத்தை உற்சாகத்தோடு பாடும் நா, தமிழ் மாணவனிடத்தில் காட்டும் அன்பு உள்ளம், அதன் விளைவாக மலரும் ஆசியுரை இவற்றையெல்லாம் எப்படி விளக்குவது?

நினைத்தொறும் காண்டொறும் பேசுந்தொறும் எப்போதும் இதயத்தில் இன்பம் பெருக வைக்கும் இவரை, 'என் ஆசிரியர்' என்று பெருமிதத்துடன் போற்றி வணங்குவதை வாழ்வின் பேறுகக் கருதுகிறேன். அதைப் பெற வைத்த முருகன் திருவருளை வழுத்துகிறேன். ★

74. பவழ மல்லிகை 2 00
75. பூக்காரி 1 75
76. வளைச் செட்டி 2 00
77. மூன்று தலைமுறை (ஒரே கதை) 0 50
78. திருக்குறள் விளக்கு (நாடகம்) 0 75

அல்லயன்ஸ் கம்பெனி, சென்னை-4

79. நீலமணி 2 50

பொன்மலர் வெளியீடு, சென்னை-4

80. அதிசயப் பெண் 0 75

### பாடல்கள்

அமுத நிலையம் லிமிடெட், சென்னை-14

81. கற்பகாம்பிகை மாலை
82. சிங்கார வேலன் இரட்டை மணிமாலை
83. சென்னிமலை ஆண்டவன் செந்தமிழ்ப் பாமலர்
84. மேக மண்டலம் 4 00

பி. டி. பாணி அண்டு கம்பெனி, சென்னை

85. வட பழனி ஆண்டவன் நவரத்தினமாலை

இளம்பள்ளி பகவத் பக்தர்கள் வெளியீடு

86. அசுவத்த நாராயணப் பெருமாள் உயிர் வருக்கமாலை

புதுக்கோட்டை மடம்

87. புவனேச்வரி பஞ்சரத்தினம்

பதிப்பாசிரியர்: திரு பி. முருகன்

88. காந்தமலை முருகன் தோத்திர மஞ்சரி

மகுடஞ்சாவடி முருகன் அடியார் வெளியீடு

89. மகுடஞ்சாவடி முருகன் பாமாலை

கரவெட்டி, சிலோன்

90. விநாயகர் துதிப்பா

### வரலாறு

கலைமகள் காரியாலயம், சென்னை-4

91. புது மெருகு 1 50
92. கவிஞர் கதை 0 62

அமுத நிலையம் லிமிடெட், சென்னை-14

93. அதிகமான் நெடுமான் அஞ்சி 1 75
94. எல்லாம் தமிழ் 1 50
95. எழு பெருவள்ளல்கள் 0 75
96. கரிகால் வளவன் 1 25
97. குமண வள்ளல் 1 25
98. கோவூர் கிழார் 1 12
99. சிலம்பு பிறந்த கதை 1 00
100. தமிழின் வெற்றி 1 25
101. நல்ல சேனுபதி 1 75
102. நாயன்மார் கதை - 1 2 00
103. நாயன்மார் கதை - 2 2 00
104. நாயன்மார் கதை - 3 2 00
105. நாயன்மார் கதை - 4 2 00
106. பாண்டியன் நெடுஞ்செழியன் 1 00
107. பாரி வேள் 1 12
108. முந்நீர் விழா 1 75

### வாழ்க்கை வரலாறு

கலைமகள் காரியாலயம், சென்னை-4

109. ரமண மாமுனிவர் 2 00
110. விளையும் பயிர் 0 50

### பதிப்பித்தவை

அமுத நிலையம் லிமிடெட், சென்னை-14

111. அபிராமி அந்தாதி 1 75

சென்னைப் புத்தகாலயப் பிரசார சங்கம்

112. ஆரம்ப அரசியல் நூல் 2 00

சாகித்திய அக்காதெமி; தியாகராச விலாசம், சென்னை-5

113. என் சரித்திரம் (சுருக்கம்) 4 00

அல்லயன்ஸ் கம்பெனி, சென்னை-4

114. உதயம் 0 37

காசி மடம், திருப்பனந்தாள்

115. கந்தபுராணச் சுருக்கம் (முகவுரை குறிப்புகளுடன்)
116. சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம்
117. பதினோராம் திருமுறை
118. திருவாசகம்
119. ஸ்ரீ குமரகுருபர முனிவர் வரலாற்றுப் படங்கள்

ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் வித்தியாலயம், கோவை ஜில்லா

120. திருக்குறள் ஆராய்ச்சிப் பதிப்பு 18 00

சுகவனம் சிவப்பிரகாசன்

121. குட்டிக் குறள் (உரை) 1 00

டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல் நிலையம், சென்னை-41

122. தமிழ்ப்பா மஞ்சரி - 1 ஐயரவர்கள் 1 50
123. தமிழ்ப்பா மஞ்சரி - 2 ஐயரவர்கள் 2 50

தஞ்சை சரஸ்வதி மஹால் வெளியீடு

124. மலையருவி (நாடோடிப் பாடல்கள்) 5 50
125. மூன்று நாடகங்கள் 2 25